# கரந்திமகான் கதை

(நாட்டுப் பாடல்)

கொத்தமங்கலம் சுப்பு



பழனியப்பா பிரதர்ஸ்

சேப்பாக்கம் : : தெப்பக்குளம்
சென்னை-5 திருச்சிராப்பள்ளி

## சமர்ப்பணம்

பாரத நாட்டின் விடுதலைக்காக இந்நாட்டிலும் வெளி நாட்டிலும் நடந்த பற்பல போராட்டங்களில் ஈடுபட்டு வீர சுவர்க்கம் புகுந்த ஊர் பேர் தெரியாத பல்லாயிரம் தொண்டர்களுக்கும், இந்தப் புத்தகத்தில் இடம் பெருமல் விடுபட்ட தேச பக்தர்களுக்கும் இந்திய நாடு சுதந்தரம் பெற்ற இந்தப் புனிதமான தினத்தில் இந்த நூலைச் சமர்ப்பிக்கிறேன்.

சர்வசித்து
ஆடி 30
வெள்ளிக்கிழமை

கொத்தமங்கலம் சுப்பு.

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

நமஸ்காரம்.

காந்திமகான் கதையைக் கேட்டுக் கண்ணீர்வடித்த லக்ஷக் கணக்கான மூக்களுக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த இரண்டாம் பதிப்பில் இன்னும் எத்தனையோ விவரங்களை எழுதிச் சேர்க்க வேண்டுமென்று எண்ணியதுண்டு. ஆனால், புத்தகம் வேண்டுமென்று நண்பர்கள் எழுதும் அவசரத்தைப் பார்த்து சுதந்தரம் வந்ததன்பிறகு ஆறு மாதத்தில் நடந்த அந்த நிகழ்ச்சியை மாத்திரம் பாடி இரண்டாம் பாகமாகச் சேர்த்திருக்கிறேன்.

இந்த இரண்டாம் பதிப்பை மனமுவந்து வெளியிடமுன் வந்த அன்பர் சிரஞ்சீவி. பழனியப்ப செட்டியாரவர்களுக்கு என் நன்றி உரியதாகுக.

கொத்தமங்கலம் சுப்பு.

## முதற் பதிப்பின் முன்னுரை

நமஸ்காரம்.

சரித்திரம் எழுதுவது என்பது சாதாரணமான காரியமல்ல. அதிலும் காந்தி மகான் கதையை எழுதுவதென்றால் காந்தியைப் போன்ற அகக்கண் படைத்த ஒருவரால்தான் அதை எழுதமுடியும். அப்படியிருக்கும்பொழுது நான் இதை எழுத ஆரம்பித்ததை எண்ணினால் எனக்கே வியப்பாக இருக்கிறது. இது அறிவினால் ஏற்பட்ட முயற்சி அன்று; ஆசையால் ஏற்பட்டதுதான் என்ற தீர்மானத்திற்கு நான் வருகிறேன்.

எனக்கு எப்பொழுதுமே நாட்டுப் பாடல்களைப் படிப்பதில் ஆவல் அதிகம். ராஜாதேசிங்கு போன்ற கதைகளைப் படிக்கும் பொழுது என்னை அறியாமலே உணர்ச்சி வசப்பட்டுவிடுவேன். ஆஹா! இந்தக் கவிஞர்கள் அந்தந்தக் காலத்தில் இருந்தார்கள்; அந்த நிகழ்ச்சிகளைக் கண்ணால் கண்டிருக்கிறார்கள்; பொங்கி வந்த உணர்ச்சியில் பாடியிருக்கிறார்கள் என்று எண்ணிப் பூரித்துப்போவேன். இந்த எண்ணமே இந்த நூலைப் பாடத் தூண்டியது என்றுகூடச் சொல்லலாம்.

முதலில், இந்த நூலைச் சுருக்கமாகப் பாடவேண்டுமென்று தான் எண்ணினேன். ஆனால் என் நண்பர்களில் சிலர்-தேசபக்தியில் மேலான பலர் - இதை விரிவாகப் பாடவேண்டும், பின் காலத்தில் எடுத்துப் படிப்பவர்களுக்கு விஷயம் விளங்கவேண்டுமென்று கூறியதால் விரித்துப் பாட ஆரம்பித்தேன். ரொம்ப விரிந்து விட்டது. அப்படியிருந்தும் சரித்திரம் முழுதும் இதில் அடங்கியிருக்கவில்லை. காங்கிரஸ் கதை ஒரு சமுத்திரம். அதில் என்னால் நீந்த முடிந்த அளவுக்குத்தான் நீந்தியிருக்கிறேன். இதிலும் என் கைசோர்ந்த இடங்கள் எத்தனையோ இருக்கின்றன. நான் பாடியிருப்பவை கொஞ்சம்; நான் பாடாமலிருப்பவை அனந்தம் என்று எனக்குத் தெரிகிறது. இதற்குக் காரணம் உதாசீனம் அன்று. தெரியாமல் விட்டவையும், முடியாமல் விட்டவையும்தான். எத்தனையோ நிகழ்ச்சிகள் பிசகி இருக்கலாம். முன்பின்னாக மாறியிருக்கலாம். என் குறை உங்களுக்குத் தெரியும். அதற்காக மன்னித்துவிடுங்கள். சொல்லவேண்டியதைச் சொல்லுங்கள். ஈசன் திருவருள் துணை செய்தால் அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்ளுகிறேன்.

இந்தச் சரித்திரம் முழுவதும் நான் கண்டவையல்ல. கண்டதும், கேட்டதும், படித்ததுமேயாகும். இதற்கு உதவிய நூல்கள்

தமிழ்நாட்டுப் பத்திரிகைகளும், எழுத்தாளர்களின் உணர்ச்சி மிகுந்த புத்தகங்களுந்தான். இவர்களை நான் வணங்கு கின்றேன்.

தன்னடக்கத்தின் சிகரமாக உள்ளவர் காந்தி. அளந்து பேசு பவர் காந்தி. இதமொழி சொல்பவர் காந்தி. அவர் கதையை எழுத ஆரம்பித்த நாளே இவ்வளவுக்கும் எதிரிடையாக உள்ள வன். எனது நாவிலிருந்து வீரமறவர்களின் உணர்ச்சியோடு வரும் பாடல்கள் சில இடங்களில் சற்றுக் கடுமையாக இருக்க லாம். என்ன செய்வது ? அவர்களுடைய வாழ்க்கையே கடுமை யானதுதான் !

இதைப் படிக்கும் அன்பர்கள் வசனம் படிப்பது போல் படிக்கக் கூடாது. பாடிப் பாருங்கள். தேசத்தின் சென்றகால வாழ்வையும் காந்திமகானையும் கருத்தில் நினைத்துக்கொண்டு பாடுங்கள். தேன்போலப் பாடுவீர்கள். என் சிந்தை குளிரும்.

இது காந்தி மகான் கதையென்று சொன்னால் அவரது குழந்தைகளைப்பற்றிய விவரம்கூட இதில் கிடையாது. காங்கிரஸ் கதையென்று சொன்னாலோ சில நிகழ்ச்சிகள் இல்லாமலிருக் கலாம். காந்தியும் காங்கிரசும் ஒன்றாகக் கலந்த கதை மட்டும் தான் இது. காந்தியே காங்கிரஸ் என்பதுதான் என் போன்ற எளியவர்களின் கருத்து.

இந்நூலை வெளியிடுவதற்கு முன்வந்த சக்தி காரியால யத்தார் மிகவும் சிரமப்பட்டிருக்கிறார்கள். ஒருமுறை விளம்பரம் செய்து குறித்த தேதியையும் நிறுத்திக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் நமது நல்லகாலம். சுதந்தர விழாக்கொண்டாடும் இந்த தினத்தில், புண்ணியபூமி விடுதலைபெற்ற பொன்னான தினத்தில் இந்தப் புத்தகம் வெளிவருகிறது. இது எனக்குப் பெருமை. என் வம்சத்திற்குப் பெருமை. என்னை வாழ்விக்கும் தமிழ்நாட்டிற்குப் பெருமை. ஒரு தொண்டர் செய்த சிறு தியாகத்திற்கும் ஈடாகாது என் முயற்சி. ஆனால் இதில் எனக்குக் கிடைக்கும் ஆனந்தமோ என் உள்ளத்தை உருக்குகிறது. வாழிய செந்தமிழ், வாழ்க நற்ற மிழர் வாழிய பாரதமணித் திரு நாடு என்று சொன்ன பாரதியும் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களும் பிறந்த மண்ணில் நானும் பிறந்த பாக்கியம் நல்லதோ கெட்டதோ இவ்வளவு பெரிய புத்தகத்தை எழுதி முடிக்கும்படி என்னை செய்துவிட்டது. இதற்கு உதவி செய்த தமிழ்நாட்டையும் தமிழ் மக்களையும் வணங்குகிறேன்.

கொத்தமங்கலம் சுப்பு.

# பொருளடக்கம்

இரண்டாம் பாகம்.

வந்தேமாதரம்

## இந்தியாவும் ஈஸ்ட் இந்தியா கம்பெனியும்

மூப்பக்கம் சூழ்ந்த கடல் முத்திருக்கும் ஆழ்ந்த கடல்
இப்பக்கம் வந்தாலும் இமயம் வடக்கினிலே

கட்டாத கோட்டையுண்டு கடலும் மலைகாவல்
எட்டாது அசலானுக் கிடங்கொடுக்கா திந்நாடு

பதினெட்டு லச்சமயில் பரந்துகிடக்கும் தேசம்
அதிலஞ்சு 'பர்சண்டே' ஆளும் பிரிட்டனுமே

வத்தாத கங்கைபொன்னி வயல்பாயுந் தேசமிதில்
பத்தாக் குறையுமில்லை பஞ்சமென்ற பேச்சுமில்லை

முப்பத்து முக்கோடி முடிமன்ன ரிந்நாட்டில்
அறுகோடிப் பேர்களுக்கு அடிமையாய்ப் போனார்கள்

ஆறுயிரம் மைல்கள் அப்பா லிருந்துவந்த
ஆசாமி தங்களுக்கே ஆளடிமை யானார்கள்

வஞ்சனை தெரியாமல் வக்கணையு மில்லாமல்
அஞ்சிலொரு பங்காளுக் கடிமையே யானார்கள்

இந்தப் படிதானே வந்தவித மென்னவென்றால்
இங்கிருந்த மூதாதை தங்களுட புத்தியினால்

கைமாறிப் போனதுக்குக் காரணமும் சொல்லவென்றால்
கத்தியினால் சண்டையிட்டுக் கைமாறிப் போகவில்லை

துப்பாக்கி தன்முனையில் தூக்கியுந்தான் போகவில்லை
அவர்கள் எடுக்கவில்லை அள்ளிக்கொடுத்து விட்டோம்

விக்க வந்தவெள்ளையனின் வெள்ளிக்கு ஆசைப்பட்டு
ஒக்க உள்ள இந்தியரே ஊரைக் கெடுத்தார்கள்

காசுக்கு ஆசைப்பட்டுக் காட்டிக் கொடுத்தார்கள்
லஞ்சகத்துக் காசைப்பட்டு லச்சைகெட்டுப் போனார்கள்

இந்தியனும் முஸ்லீமும் என்னைக்குஞ் சண்டையிட்டு
வந்தவனின் காலடிக்கீழ் வைத்தார்கள் இந்நாட்டை

துப்பாக்கிக் கட்டையென்றால் துடைநடுங்கிப் போவார்கள்
குப்பாயங் கண்டுவிட்டால் குடஞ்சாஞ்சு விழுவார்கள்

தொப்பிவச்ச பேரைக்கண்டால் தூரதுலைக் கோடிடுவார்
கொப்பிவச்ச மாடுகளைக் கொம்பைப் பிடிச்சிழுப்பார்

இப்படி இருக்கையிலே இங்குவந்த கும்பினியான்
சொல்படி நடப்பவராய் சொரணைகெட்டுப் போனார்கள்

சிங்களமும் வங்கமுமே சிண்டைப் பிடிக்கிறதும்
தெம்மதுரை காஞ்சியின்மேல் தெண்டெடுத்துப் போகிறதும்

மாராட்டியர் முசல்மான் மல்லுக்கு நிக்கிறதும்
வலுச்சண்டை போடுறதும் வந்தவர்கள் கண்டார்கள்

நாட்டைப் பிரித்துவிட்டு நடுவே புகுந்தார்கள்
ஊரை இரண்டாக்கி ஊடே புகுந்தார்கள்

பாட்டனுக்கும் மாமனுக்கும் பகையை வளர்த்துவிட்டு
நாட்டைச் சுரண்டிடவே நடுவே புகுந்தார்கள்

பணங்கொடுத்த பக்கத்திலே பரத்தை படுப்பதுபோல்
குணம்படைத்த கும்பினியான் கூட்டுறவை நாடிடுவார்

பத்துலட்சம் தான்கொடுத்தால் பகலில் படைதருவான்
இருபதுலச்சம் கொடுத்தால் இரவில் எதிரிபடை

பத்துப்பணம் கொடுத்தால் பந்துசன மாயிடுவான்
இருபதுபணம் கிடைத்தால் எதிரிசன மாயிடுவான்

பாப்பாரச் சாதிதன்னைப் பறச்சாதி மேலேவிட்டு
பறச்சாதி தன்னையிந்தப் பாப்பான்மேல் மோதவிட்டு

நாயக்கன் சீமையிலே ராவுத்தனை மோதவிட்டு
ராவுத்தன் சீமையிலே நாயக்கனை மோதவிட்டு

மித்திரபேதங்களிலே எத்தனை விதங்களுண்டோ
அத்தனையும் செஞ்சு இங்கே ஆண்டானே கும்பினியான்

## ஜனங்கள் விழிப்பு

கும்பினியான் தன்னிடமே கொதுவைவச்ச நாட்டிலவன்
கொடிபோடக் கண்டதுமே கோபமும்தான் கொண்டார்கள்

அடகுவச்ச தங்கநகை அதுமுழுகிப் போனதுபோல்
அலறிப் புடைச்சார்கள் அய்யய்யோ வென்றார்கள்

சப்திபண்ணும் காலத்திலே சட்டவட்டம் பேசிப்புட்டு
சாரிபண்ணுங் காலத்திலே சண்டை பிடித்தார்கள்

எண்ணியதைச் சொல்லவுமே இக்கட்டு வந்ததெனக்
கண்ணிரண்டுந்தான் கலங்கி கருத்தில் புகைந்தார்கள்

கஞ்சிக்கும் கூழுக்கும் கக்கண்டு வெத்திலைக்கும்
பஞ்சம் வருவதையும் பட்டினியும் கண்டார்கள்

எழுதிவச்ச காயிதத்தை இன்னொருத்தன் தான்தடுக்க
உளுதுவச்ச கொல்லையிலே உள்ளான் படுத்துவிட

ஆமைபுகுந்த குடி அத்தறுதி ஆனதுபோல்
சீமைத் துணிவரவும் தேசத்தொழில் கெடவே

காட்டுமா டோடிவந்து கம்புக்கொல்லை சாஞ்சதுபோல்
நாட்டார்கள் கைத்தொழிலில் போட்டிவரக் கண்டார்கள்

மாடுவித்து ஆடுவித்து வரிகட்டி மானம்விட்டு
நாடுவிட்டுப் போனாலும் நல்லவரி போவதில்லை

ஆளாயிருந் ததுபோய் அடிமையாய்ப் போனமின்னு
நாளாக நாளாக நடுநெஞ்சம் நஞ்சிடவே

கண்டார்கள் நாட்டுமக்கள் கதிகலங்கிக் கோபமது
கொண்டார்கள் கொண்டதுமே கொழுந்துவிட்டு எழுந்தார்கள்

## மன்னர்கள் விழிப்பு

திக்கெட்டும் ஆண்டிருந்த செங்கோலு மன்னவரை
சொக்கட்டான் காய்போலே தூக்கிவெட்டிப் போடுறதும்

பட்டாளம் வச்சிருக்கோம் படிச்செலவு தாருமென்று
அட்டாளச் சீமையெங்கும் அதட்டிப் பறிக்கிறதும்

பிள்ளையில்லா ராச்சியத்தில் பிள்ளைநா னென்றுவந்து
உள்ளதெல்லாம் பத்திக்கிட்டு ஓட விரட்டுறதும்

ஆண்டிருந்த ராசனுக்கு அல்லவுன்சு பிச்சையிட்டு
வேண்டாத பெண்டாட்டி விபசாரி எங்கிறதும்

கண்டார்கள் ராசரெல்லாம் கைகட்டி நிற்கவெட்கம்
கொண்டார்கள் கொண்டதுமே குதித்துஎழுந் திட்டார்கள்

## சிப்பாய்க் கலகம்

தாய்போல நாடாண்ட ஜான்ஸி மகாராணி
தருமகுண லெட்சுமிபாய் சண்டையிட எண்ணமிட்டாள்

சிவாஜி வங்கிசத்தில் தீப்பொறிபோல் மிச்சமுள்ள
தீரன் நானாசாகிப் சீறியெழுந் திட்டானும்

அய்யோத்தி நவாப்பு அடங்கலுக்கும் நல்லவனும்
அவனும் எழுந்தானும் ஆத்திரங்கள் கொண்டானும்

பண்டமது விக்கவந்த பரங்கிகளின் சேனையிலே
ஒண்டிப் பிழைத்துவரும் உள்ளூருச் சிங்கங்களை
எண்ணமிட்டுச் சன்னாசி ஏழை பரதேசிகள்போல்
ஏராளமான பெயர் இவங்களுக்குள்ளே புகுந்து
பட்டாளம் தன்னிலுமே பஜனைகளும் பாட்டுகளும்
பாடிவந்து தேசபக்திப் பயிரைவளர்த்து விட்டார்
ஆயிரத்தி எண்ணூத்தி ஐம்பத்தி ஏழாண்டில்
ஆதியிலே மீரத்து. ஆனதொரு ஊரினிலே
சிப்பாய்க் கலகம் என்று சேதிக்குச் சொல்லிவரும்
தேசீயச் சண்டையது திப்போலப் பத்தியதே
செத்துவிடப் போறமின்னு தெறிஞ்சதுமே பல்லியது
தேளைக் கடிப்பதுபோல் சீறியே பாய்ந்துவிட்டார்
வெள்ளையரைக் கண்டதுமே வெட்டி எறிஞ்சிட்டார்கள்
கொள்ளைகளை வைத்தார்கள் கொடுஞ்சூறை யிட்டார்கள்
ஆனாலுமென்ன இங்கே ஆளுபலம் போதாது
துப்பாக்கிக் கட்டையில்லை சுடுமருந்து தானுமில்லை
வேத்தூரு தன்னிலுள்ள வெள்ளையரின் பட்டாளம்
வேகமா யோடிவந்து வெட்டியெறிஞ் சிட்டாங்க
படுபாவி நீலன் அவன் படைதிரட்டிக் கொண்டுவந்து
பாங்கான சீமைஎல்லாம் படுசூரை யாடிவிட்டான்
சிப்பாய்க் கலகமென்னும் தீயை அணைச்சாலும்
தேசத்து முச்சூடும் தேசபக்தி பத்தியதே

## விக்டோரியா ராணி பிரகடனம்

கம்பெனியா ராட்சியிலே கலகம் கிளம்புதெனக்
காருணிய ராணியம்மாள் கருத்தில் நினைச்சாளாம்
கண்டனையும் தண்டனையும் கம்பெனியான் செய்யக்கண்டு
கங்காணம் வச்சிருந்த காருணிய ராணியம்மா
காலமெல்லாம் கம்பெனியான் கடுமைத்தனம் பாத்துக்
கருத்தைச் செலுத்திஒரு கவனம்வச்ச ராணியம்மா
கலகமும் செய்யவேண்டாம் கம்பெனியும் ஆளவேண்டாம்
உலகம் தனைக்காக்க உள்ளபடி எண்ணமிட்டோம்
என்றுசொல்லித் தேசமிதை இணைச்சுவிட்டாள் பிரிட்டனுடன்
இன்னுஞ் சிலதுகளும் இந்தியர்க்குச் செய்துவைத்தாள்

## 5

# ஆங்கிலக் கல்வி

இந்தக் கலகமது இனிமேல் வராதபடி
இங்கிலீஷ் மோகமது எங்கும் பிறந்திடவே

கல்கத்தா தன்னிலேயோர் காலேஜு கட்டிவைத்தார்
கல்விகத்து இந்தியர்கள் கவுர்மெண்டு ஆளாக

மதராசுப் பட்டணத்தில் வச்சார்கள் காலேசை
மந்தை மந்தையாப்படிச்சு வக்கணைக் கணக்கெழுத

பம்பாயி தன்னிலும் ஓர் பள்ளிகட்டி வச்சார்கள்
பண்டமது வித்துஇவர் பட்டம் பதவிபெற

காலேசிலே படிச்சுக் காலுச்சராய் தொப்பிவச்சு
கண்ணாடி போட்டுக்கிட்டுக் கருத்தழிஞ்சு போனார்கள்

வெள்ளை மக்கள்போலாக மேலாக வாழவெண்ணி
வெட்டுக் குடுமிகளும் விதவிதமாச் சட்டைகளும்

ஒட்டுவச்ச மீசைகளும் ஒசந்தகால் ஜோடுகளும்
நட்டுவச்ச கம்புகள்போல் நல்லாக நிக்கிறதும்

துட்டுச் சிலவழித்துத் துரைபோல வாழுறதும்
லட்டுகளை விட்டுவிட்டு ரொட்டிசுட்டுத் திங்கிறதும்

பெத்தெடுத்த மூதாதை பேரிட்ட பேர்தனையே
பின்னும் வெட்டி முன்னும்வெட்டி பிலுக்குப்பேர் வைக்கிறதும்

பாட்டனாரிட்ட பெயர் பரமேச்வரன் மாறி
பீ. வாரன் என்றுவைத்துப் பெருமைப் படுகிறதும்

வி. என். குஞ்சிதபாதம் வெறும் பாதமாகிவிடும்
வேலாயுதம் பெயரும் வி. ஏ. யுத மாகும்.

நடை உடைகளும் மாறி நம்ம சனம் மட்டமின்னு
அடைவு கெட்டுப் பேசுவதில் ஆனந்தம் கொள்ளுறதும்

நாகரீகப் பேய்தனக்கே நாளடிமைப் பட்டுவிட்டு
நாட்டை மறந்தவர்கள் நாலாறு கோடியுண்டு

கொட்டிவச்ச குப்பையிலே குருக்கத்தி பூத்ததுபோல்
ஒட்டிவச்ச கல்வியிதில் உண்டான நன்மைகளோ

இங்கிலீஷ் தேசமக்கள் இணையில்லா வீரமுடன்
என்னென்ன பாடுபட்டார் என்றும் படித்தார்கள்

சொந்தநாடென்பதொரு சொல்லின் இனிமையிலே
எந்த நாடும் அவர்க்கு இளப்பமாய்ப் போனதுவும்

வந்த நாடெங்கணுமே வாழுமட்டும் வாழ்ந்துவிட்டு
சொந்த நாட்டுக் கோடத் துடியாய் துடிக்கிறதும்

பார்த்துப் படித்தார்கள் படிக்கவுமே தேசபக்தி
ஆர்த்து உடம்பினிலே அன்பும் பெரிதூற

சிப்பாய்க் கலகமது சீர் கெட்டுப் போனாலும்
சிந்தையில் விதைத்தவிதை செடியாய் முளைத்திடவே

தேசம் இதைத்தானே திரும்பப் பிடித்திடவே
சிந்தனையும் தீவிரமாய்ச் செஞ்சிருந்த நம்மவர்கள்

தேசம் தடுமாறிச் செயலழிந்து போனதையும்
தெண்டத்துக்கே யுழைச்சுத் திண்டாடு கின்றதையும்

கண்ட சில நல்லவர்கள் கையெடுக்கத் தக்கவர்கள்
கண்டார்கள் கண்டார்கள் காங்கிரசைக் கண்டார்கள்.

## தமிழ் நாடும் காங்கிரசும்

என்றும் தலைவணங்கா எங்கள் தமிழ் நாடு
ஏழைகளை ஆதரிச்சு ஈயும் தமிழ் நாடு

வீரத் தமிழ் மறவர் வெற்றித் தமிழ் நாடு
வேற்றாருக் காரனையும் போற்றும் தமிழ் நாடு

இரண்டரைக்கோடி மன்னர் இருக்கும் தமிழ் நாடு
சுரண்டவந்த பேர்களையும் தூத்தாத் தமிழ் நாடு

எட்டாத காலம் முதல் ஏத்தம் பெறும் நாடு
செட்டாக வாழுதற்குத் தெரியாத் தமிழ் நாடு

தெள்ளுந் தமிழ் மொழியில் தேமதுரப் பாட்டிசைத்து
வெள்ளம் பெருக்கெடுத்து மேவும் தமிழ் நாடு

அம்புவியில் ராம கதை ஆயிரம்பேர் சொன்னாலும்
கம்பனது காவியம்போல் காணக்கிடையாது

ஒரு சுவை உண்டிசெய்து உண்பார்கள் மத்தவர்கள்
அறுசுவை உண்டிசெய்து அன்பாய் படைத்திடுவோம்

சங்கீதமானாலும் தனியாய் வளப்படுத்தி
மங்காத பண்பாட்டில் வளர்க்கும் தமிழ் நாடு

காஞ்சீபுரம் மதுரை கர்சிலையும் சிற்பங்களும்
வாஞ்சையுடன் பேசி வருவார் முகம் பார்க்கும்

கச்சைகட்டிக் கொண்டெதிர்த்த கட்டபொம்ம நாயகனும்
ஒச்சமொண்ணு சொல்லவொண்ணு ஊமைத் துரை மகனும்

சீரங்க பட்டணத்துத் திப்புவெனும் சுல்தானும்
தேசிங்கு மன்னவனும் தீரன் மம்மதுக்கானும்

அவதாரம் செஞ்சிருந்து அன்னியனைச் சண்டையிட்டு
ஆட்டி வச்சுப் பேர் படைச்ச அருமைத் தமிழ் நாடு

வங்கக் கடலிடையே வந்ததொரு ஆணிமுத்தை
தங்கத்தை ராமகிஷ்ண சத்குருவின் சீடனையே

ஆனந்த ஞானிவிவே கானந்தச் சாமிதனை
அமெரிக்காச் சீமைக்கு அனுப்பிவைத்த திந்நாடு

இந்தியா மேன்மைதனை எடுத்துரைத்து வாருமென
இராமலிங்கச் சேதுபதி ஏத்திவிட்டான் கப்பலிலே

இந்த நல்ல நாட்டவரே இன்றிருக்கும் காங்கிரசை
எண்ணெய் திரிபோட்டு ஏத்திவச்ச மூதாதை.

## காங்கிரஸ் உதயம்

இந்தியாதேசம் இருளடைஞ்சு போகுதென்று
எண்ணித் துடிச்சானும் இங்கிலீஷ் ஹ்யூமுதுரை

ரெகுநாத ராயருக்கும் எங்கள்மணி அய்யருக்கும்
என்னசெய்வ தென்றொருநாள் எழுதிவிட்டான் ஹ்யூமுதுரை

அல்லாரும் தான்கூடி ஆயிரத்தி எண்ணூத்தி
எம்பத்தி அஞ்சினிலே இந்தச் சபை எடுத்தார்

கரைகாண மாட்டாது கப்பல் தவிக்கையிலே
கடல்கரையில் தீப்புடிச்சு கைகாட்டி விட்டதுபோல்

பேயடிக்கும் காட்டுக்குள்ளே பேதை தவிக்கையிலே
பேரிடியில் மின்னல்மின்னி பெரும்பாதை காட்டினப்போல்

வருசம் ஒருநூறில் வந்ததொரு நோக்காட்டை
ஒருசந்திப் பச்சிலைதான் ஓடவிரட் டுதல்போல்

திக்குத் தெரியாமல் திண்டாடி நிக்கையிலே
தென்றல் தவுந்துவரத் திசையைத் தெரிந்ததுபோல்

தேசம் தடுமாறித் திண்டாடும் காலமதில்
தெய்வம் பிறப்பதுபோல் திருக்கூட்டம் கூடியதே

## 1885 முதலாவது பம்பாய்க் காங்கிரஸ்

பட்டணமாம் பட்டணமாம் பம்பாயிப் பட்டணமாம்
பலதேசக் கப்பலெலாம் பண்டம் விக்கும் பட்டணமாம்

அரபிக் கடலோரம் அழகான பட்டணமாம்
ஆழ்கடலில் முத்தையள்ளி அளந்துவிடும் பட்டணமாம்

செந்தாமரைப் பூவில் சேர்ந்திருக்கும் லெட்சுமிக்கே
செம்பொன்னால் கோவில்கட்டி சேவைசெய்யும் பட்டணமாம்

பூவேசர் கோவிலிலே பொன்னள்ளிப் பூப்போட்டு
தேவேசர் வந்துநித்தம் சேவிக்கும் பட்டணமாம்

செல்வம் செழித்த நகர் தேசத் தலை நகரம்
சீமைத்துரை மகன்கள் தினம் வந்திறங்குநகர்

ஓடவிடும் கப்பலது ஒருநூறு நித்தமுண்டு
நாடு இதன்பொருள் களெல்லாம் நாடோரும் போகுநகர்

இந்தியாச் செல்வமதை ஏத்துமதி செய்யும் நகர்
வந்திறங்கும் கப்பலுக்கு வரவேற்புக் கூறும் நகர்

சீமைத் துணிமூட்டை சிகரெட்டு சோப்புகளும்
ஆமைபுகுந்ததுபோல் அங்கேதான் வந்திறங்கும்

வாகான தேசமிதன் வாசல் படியிதென்று
வாரிதியில் கோட்டை கட்டி வகைமோசம்போன நகர்

அந்த நல்ல ஊரில் அமரமொழிக் காலேஜில்
நந்தமது காங்கிரஸு நன்றாய்க் கிளம்பியதே

முன்னடிமைப் பட்டிருக்கும் முப்பத்து முக்கோடி
முழுமைக்கும் ஆளாக முக்காலில் நூறுபெயர்

எழுபத்திரெண்டுபேர் இந்திய நாட்டில் பிறந்தோர்
எட்டுத்திசையிருந்து இங்குவந்து சேர்ந்தார்கள்

ஆங்கிலேயரானாலும் அன்பே மிகுந்த ஹியூம்
ஆயிவந்த கையாலே ஆரம்பம் செய்துவிட

பாரசீகத்தில் பிறந்து பாரதத்தில் குடிபுகுந்து
பம்பாய் சிறக்கவந்த பாய்தாதா நவரோசி

செத்தும் புகழ்படைத்த ஜி. சுப்ரமண்யமெனும்
உத்தமன் சுதேசமித்ரன் உள்ளூர் பிரதிநிதியாம்

சீரங்க நாயுடுவும் சீமான் சபாபதியும்
திவ்வான்பகதூரு ரகுநாதராயருமே

சென்னை மணி பசனைமணி செர்ச்சுமணி ஞானமணி
அன்னையருளால் பிறந்த ஐயன் எஸ். சுப்ரமணி

தென்மதுரை கும்பகோணம் சேலம் திருக்கருவூர்
தன்மமிது சென்னை தனக்கே பத்தொன்பதுபேர்

பம்பாய் நகர்தனக்கும் பதினெட்டுப் பேர்களுண்டு
பாஞ்சாலம் வங்காளம் பக்கத்து ஆந்திரமும்

கூடியதாம் ஓர் சபையில் குறிச்சுவச்ச மூர்த்தத்திலே
கோபாலன் அருளாலே கூட்டம் துவக்கியதே

உத்தமராம் வங்காளி ஓமேச சந்திரனார்
தத்தர் தலைமையிலே தலைநிமிர்ந்து நின்றதுவே

முத்தனைய தீர்மானம் முதலிலே கொண்டு வந்த
உத்தமனும் நம்நாட்டு உயர் சுப்ரமண்ணியனே

இங்கிலீஷ் காரனுக்கும் எங்களுக்கும் பேதமுண்டோ
இந்தியா மட்டுமென்ன ஈசன் படைப்பிலையோ

ஆங்கிலத்தோர் தன்னாட்டில் அனுபவிக்கும் சலுகையெல்லாம்
அனைவருக்கும் வேண்டுமென்று ஆணித்தரமாய்ச் சொன்னான்

இந்த நல்லகூட்டமதில் என்னென்ன பேசினது
எடுத்துரைக்க வேணுமென்றால் இடமுந்தான் பத்தாது

பட்டணத்தில் தீப்பிடிச்சு பத்தியெரியும் போதில்
பங்காளிச் சண்டையுண்டோ பள்ளுப்பறைச் சாதியுண்டோ

வெள்ளம் பெருக்கெடுத்து வெரட்டிவரும் நேரத்திலே
பள்ளன் பறையனுண்டோ பார்ப்பான் சடங்குமுண்டோ

சண்டைவந்து உள்ளூருச் சனத்தை வெரட்டுகையில்
திண்டுமுண்டு பேசாமல் தெரண்டோடிப் போவதுபோல்

அன்னியத்தான் ஆச்சியிலே அடிபட்ட பஞ்சையெல்லாம்
அடங்கத் திரண்டதுமே அத்ததய்யா வித்தியாசம்

அடிமையெனும் பேரால் அல்லாரும் ஒருசாதி
ஆனதால் நம்மளுக்குள் ஆகாது வித்தியாசம்

சிங்களமும் வங்கமுமே சிண்டைப்பிடிச்சதனால்
சீமைத்துரைகள் முன்னே சிரவணக்கம் செய்தார்கள்

மாராட்டியர் முசல்மான் மல்லுக்கு நின்றதனால்
வந்ததொரு வெள்ளையன் முன் மண்டியிட்டு நின்றார்கள்

அன்றுமுதல் எல்லோரும் அடிமையாய்ப் போனதனால்
இன்று இந்த நாடுதனில் எல்லாரும் ஒருசாதி

ஆனதால் நம்மளுக்குள் ஆகாது வித்தியாசம்
போனநாட்டைத் திரும்பப் புடிச்சுவிட வேணுமென்றே

எல்லோரும் கூடி இந்திய நாட்டை நமதாய்
எடுக்கத் துணிந்திடுவோம் என்றதொரு தீர்மானம்

என்றெடுத்துச்சொல்லி யெல்லா இந்தியரும் ஒன்றாக
குன்றெடுத்த கோபாலன் கூட்டிவைத்தான் தன்னருளால்

தீர்மானம் செய்துவிட்டுத் திரும்பிவந்துவிட்டாலும்
செல்லரிச்ச நெஞ்சுகளில் சேர்ந்ததய்யா அச்சேதி

பரமசிவச்சாமி தன்னை பாண்டியனார் இட்டஅடி
படைச்ச படைப்புக் கெல்லாம் பட்டதுபோல் தீர்மானம்

தேசத்து மக்களுக்கும் சின்னஞ் சிறுவருக்கும்
செவிடன் குருடனுக்கும் சிந்தையிலே தேசபக்தி

அடிமையென்ற புத்திகள்போய் ஆம்பிள்ளைப் புத்திவர
மிடிமையென்றிருந்தாலும் மீசை துடித்துவர

தாண்டிப்பிடிச்சனுமான் சஞ்சீவி கொண்டுவர
சஞ்சீவிச் சாரலிலே தலைதூக்கும் சைனியம்போல்

செத்துக்கிடந்த இந்த - தேசம் தலைதூக்கி
சொத்துக்குக் கேள்வியிட - துணிகரமும் கொண்டதய்யா

## காங்கிரசும் மக்களும்

[வேறு]

தூக்கம் தொலஞ்சதும் அந்நாளில் சோம்பல் தொலஞ்சதும் அந்நாளில்
ஊக்கம் பிறந்ததும் அந்நாளில் உண்மை தெரிந்ததும் அந்நாளில்

முப்பத்து முக்கோடி இந்தியனும் மூச்சுப்படைச்சதும் அந்நாளில்
சொப்பத்து வெள்ளிக்கே ஆசைப்பட்டுதுரோகம் தொலஞ்சதும்அந்நாளில்

சாதி மறைஞ்சதும் அந்நாளில் சண்டை மறைஞ்சதும் அந்நாளில்
நீதி தெளிஞ்சதும் அந்நாளில் நெஞ்சமறிஞ்சதும் அந்நாளில்

பாட்டனும் பூட்டனும் ஆண்ட இந்த பாரதநாடது தன்னுதென்றார்
வீட்டிலும் காட்டிலும் நம்முடைய வீரஞ்செறிவதைப் பாருமென்றார்

ஒண்டிப்பிழைக்கவே வந்தவனும் ஊரைச்சொரண்டவே விட்டுவிட்டோம்
அண்டிப்பிழைக்கவே வந்தவனும் ஆளப்பொறந்தவனாவானே

காங்கிரசுக்குள்ளே சேர்ந்துப்புட்டோம் கைக்கு வராமே விடமாட்டோம்
நாங்களும் முப்பத்து முக்கோடி நாட்டுக்குவந்தவன் அறுகோடி

என்றென்று வீரியம் பேசிக்கொண்டே எங்களுக்கு நன்மைசெய்யுமென்று
சீமைக்குத் தந்தி கொடுத்திடுவார் சில்லறைக் காசைக் கெடுத்திடுவார்

தந்திக்கி ராஜ்ஜியம் தந்திடவே தங்க வந்த அவன் தாழையனே

## ராஜதந்திரம், வங்கப் பிரிவினை

வருசா வருசம் கூட்டமுண்டு வக்கணையாகத் தீர்மானம் உண்டு

திர்மானங்களைக் கண்டுப்பிட்டு சிந்தனை செஞ்ச பிரிட்டனுமே
குத்தங்குறைகளைக் கேட்டுக்குது கொஞ்சங்குடுத்துச் சரிக்கட்டுவோம்

என்று நினைத்துச் சிலவேலைக்கு இந்தியமக்களை நேமிச்சிட்டான்
இன்னொரு பக்கத்தில் காங்கிரஸை எடையும் போட்டுப்பாத்துக்கிட்டான்

வருசா வருசம் கூடுகிறார் வார்த்தைகள் ரொம்பவும் பேசுகிறார்
கேட்ட சனங்களின் சிந்தனையை கிளப்பி விடுகுது இப்பேச்சு

ஊட்டங்கிடைச்சு இது வளந்தால் ஒருநாள் நம்மளை ஆட்டிவிடும்
என்று நினைத்துப் பிரிட்டனுமே எழுதியும் விட்டது வைசிராய்க்கு

காங்கிரஸ்கூட்டம் வளத்திகண்ட கர்சான் என்றிடும் வைசிராயி
ஆங்கில ராசப் பிரதிநிதியாய் ஆண்டு இருக்கிற வைசிராயி

இந்துவும் முஸ்லீமும் கூடிக்கிட்டால் என்னைக்கும்நம்மளுக்காபத்துத்தான்
எந்தவிதத்திலும் ஒத்துமையை ரெண்டுபடுத்திட வேணுமென்றே

வங்கத்தை ரெண்டு பிளவாக்கி வகுப்புப்பேயைக் கிளப்பிடவே
அங்கத்தை வெட்டிப்பிளந்ததுபோல் அழகுவங்கம் பிரிச்சுப்பிட்டான்

ஆயிரத்தொளாயிரத் தஞ்சாண்டில் ஆகஸ்டுமாதம் பதினாறில்
காயிதத்தில் ஒரு கையெழுத்தால் கங்கைவயலைப் பிரிச்சுப்பிட்டான்

## காங்கிரஸ் வளர்ச்சி

### (தேசிங்குராசன் கதை மெட்டு)

தேசம் செய்த தவப்பயன் போலே செழித்தது காங்கிரசு
தியாகம் செய்யா இந்தியர்களையே பழித்தது காங்கிரசு

சாதிமதங்கள் சண்டைகள் எல்லாம் ஒழித்தது காங்கிரசு
சந்தேகத்தில் மூடிக்கிடந்தும் முழித்தது காங்கிரசு

பம்பாய்ப்பட்டணம் தன்னிலுதிச்ச பாலன் காங்கிரசு
பாரதமாதா செல்லப்பிள்ளை பாரிக் காங்கிரசு

இந்தப்பிள்ளை சேதிகள் எல்லாம் எடுத்துச் சொல்லவென்றால்
ஏடும் பத்தாதென் வாக்காலே இயம்பவும் முடியாது

மனுக்கள் போட்டுப் பாத்ததைக் கண்டால் மழலைமொழி என்றார்
தனக்கென வாழாத் தன்மை கண்டு - சவலை இதுவென்றார்

தேசக்கணக்கைக் கேட்பது கண்டு சிறுபிள்ளைத்தனமென்றார்
செல்வம் தன்னைக் கேட்பதுகண்டு செல்லமோடாஎன்றார்

அதுக்குமேலே கேட்பது கண்டு அறியாத்தனமென்றார்
அடக்கியாளும் சேதியைச் சொன்னால் அதிகப் பேச்சென்றார்

இத்தனை கஷ்டம் கடந்தே காங்கிரஸ் இருபது வயசாச்சு
இளமை முறுக்கும் எழிலும் கூடி எதுத்து நிக்கலாச்சு

மேசர் வயசும் வந்தது அய்யா மீசை முளேச்சுதடா
மேனாட்டானைக் கேள்விகள் கேக்க ஆசை துடிச்சுதடா

வங்காளம்தனைப் பிரித்தானென்ற வருமம் வந்ததடா
வருத்தம் சுகமும் தெரியும் பருவம் மனமும் நொந்ததடா

பொட்டிச்சாவியைக் கையிலே குடுடா போக்குலே கெட்டவனே
போதும் போதும் பார்த்தது போதும் பொறப்பட்டுப் போவென்றே

பாரதமாதா வீரக்குழந்தைப் பாலகங்காதரனும்
பதட்டங்கொண்டே சீறியெழுந்தான் பாயும் புலிபோலே

## திலக மகாராஜும் தேச பக்தர்களும்

பூனாநகரம் தன்னிலுதித்த புண்ணியவான் திலகன்
புதுமைப்பாரத மாக்கவந்தவன் புண்ணியவான் திலகன்

பரிச்சைகொடுத்து வக்கீலுக்குப் பாசுகளும் பண்ணி
பாலருக்குழைக்கப் பள்ளிக்கூட வாத்தியுமானனும்

தேசம் என்றால் மீசை துடிச்சுச் சீறிப் பாய்ந்திடுவான்
தெய்வம் என்றால் கைகளைக்கட்டி தியானம் செய்திடுவான் 180

அரசன் பெரியவன் அரசன்பெரியவன் அரசன் பெரியவனே
ஆத்தாளாகிய இந்திய பூமி அதிலும் பெரிசலவோ

சட்டம் பெரியது சட்டம் பெரியது சட்டம் பெரியதுதான்
தாயார் மானம் தவிக்கிறபோது சட்டம் பெரிசாமோ

சுயராச்சியமே பிறப்புரிமையென சொல்லிடும் வாசகமோ
சூரன்திலகன் சொல்லிச் சொல்லிச் சொந்தமான வாக்கு

மராட்டிக்காரர் கூட்டங்கூடி மகாகணேசனுக்கே
வருசம் ஒருநாள் திருவிழாவிலே வந்துகூடி நிற்பார்

சிலம்பம் கரடி மல்லக ஜெட்டி நீக்குளித்தல் வேலு
தீரத்தனமாய் விளையாடினபின் திலகமகாராஜன்

சிவாஜி தீரன் கதைகளைச்சொல்லி தேசமக்கள் தனையே
தியாகம் சேவை செய்யப்பழக்கி திருவிழாவும் செய்வான்

ஆங்கிலப்பேச்சுப் பேசப் படிக்க அதிகம் தெரிஞ்சாலும்
அடிமைப்புத்தி வந்திடுமின்னு அதையும் விட்டுவிட்டு

மராட்டிபேச்சில் பேசிடுவாராம் மணிமணியாத்தானே
வார்த்தைகளெல்லாம் சாணைகொடுத்த வைரம்போல் வருமாம்

செங்கண் சிவந்து கோபமுமாச்சு திலகருக்கானாலும்
தேவியின் வங்கம் வெட்டிப்பிளந்த சேதியைக் கேட்டதுமே

## கோபாலகிருஷ்ண கோகலே

[வேறு]

கோகலேயென்ற பெயரைச் சொன்னால் குழந்தை யுள்ளம் கனியுமையா
குடியானவனின் நல்வாழ்வே கோகலே நெஞ்சில் குடியிருக்கும்

தானும் நிதானம் தவராமல் சண்டைகளும் வந்து நேராமல்
ஞானம் ததும்பும் மொழிகளிலே ஞாயம் எடுத்தவர் சொல்வாராம்

தானெனும் அகந்தை யில்லாமல் தட்டிமொழி ஒண்ணுஞ் சொல்லாமல்
ஏனென்று தேசம் நினைத்தவுடன் இந்திய ஊழிய னாகிவிட்டான்

இந்தியச்சீமைக்கு வந்தவனும் இங்கேபிறந்துள்ள இந்தியனும்
நொந்தவன் யாராயிருந்தாலும் நோக்கத்திலே சமம் உள்ளவனாம்

சட்டம் மதித்திட்ட சிங்கமவன் சாதுமனிசனில் தங்கமவன்
திட்டம் தனையும் வகுத்துக்கிட்டே செய்யுந் தொழில் செய்யுந் தங்கமவன்

இங்குள்ள காங்கிரஸ் தீர்மானம் எடுத்துக்கிட்டவன் சீமைக்குப்போய்
அங்கிருந்தாலும் அரசினுக்கே அத்தனையும் சொல்லிக் கேட்டானாம்

சம்மானம் செஞ்சு சர்க்காரும் சர்ரு பட்டம் ஒண்ணு தந்திடவே
தன்னுடிருந்து திண்டாட சர்ரு பட்டம் ஒரு காரியமோ

என்றே சொல்லி திருப்பிவிட்டு இந்திய தேசத்தைப் பாருமையா
என்னையும் பட்டத்தில் மாட்டி விட்டு இளப்பம் செய்யாதீர் என்றானாம்

## காசி காங்கிரஸ், ஒத்துழையாமை தீர்மானம்

தொள்ளாயிரத்து அஞ்சாண்டில் தொல்நகராம் காசிப் பட்டணத்தில்
சொல்லாமறையின் சூட்சுமமே கோவிலுங் கொண்ட தொருநகரில்

கோபாலகிருஷ்ணர் தலைமையிலே கூடிய காங்கிரஸ் கூட்டத்திலே
பூபாலர் இந்த நாட்டினிலே பொறந்த மனிசன் கதைகேளும்

அஞ்சுக்கு நாலு படிப்பறியார் ஆயிரம் ஊருக்கு ஒரு பள்ளி
நெஞ்சுக்குத்தோணிய சேதி சொன்னால் நீட்டிமுளக்குது துப்பாக்கி

இத்தப்படிக்கு அரசாண்டால் எல்லா மக்களும் மோழைகளாய்
நொந்துவிடும்படி ஆகாதோ நூலோர்சொல்லுங்கள் என்றானாம்

கர்சான் ஆட்சி முடிந்தாலும் அவன் கத்தித்தழும்பு மறைஞ்சிடுமோ
கங்கை நதி வத்திப் போனாலும் வங்கம் பிளந்து இருந்திடுமோ

வந்தேமாதர மந்திரமும் வாயிடஞ்சொல்களும் உள்ளவரை
வெந்தே நாங்கள் போனாலும் வெட்டிட ஒப்புமோ வங்காளம்

வங்காளத்தில் அடக்குமுறை வாய்விட்டுச்சொல்ல முடிந்திடுமோ
வாய்பூட்டுச்சட்டங்கள் போட்டுவிட்டால் வருத்தம் தீந்த தாய்விடுமோ

வந்தேமாதரமென்று சொன்னல் வருசங்கொடுக்குது ராசாங்கம்
வந்தேமாதர மந்தரத்தை மறந்துபிழைக்குமோ வங்காளம்

பாஞ்சாலத்து லஜபதிராய் பாரததேசத்துச் சிங்கமவன்
பண்பாய்ப் போரிடும் வீரமகன் பாலன் அஜித்துச் சிங்கையுமே

நாடு கடத்திய ராஜாங்கம் நம்மைக்கடத்தவும் மாட்டாதோ
பாடு படுத்தத்துணிந்துவிட்டால் பாரதமக்கள் பொறுப்பாரோ

கர்சான் பிரிட்டன் ஆளுகைக்கே கடைகாலி செய்ய வந்துவிட்டான்
கர்சான் செஞ்சிட்ட காரியங்கள் * 'கர்சா' இருக்கும் கடைசிவரை

ஒண்ணுக்கு நூருக சொல்லிப்புட்டோம் ஒண்ணையும்கேக்கலே ராசாங்கம்
ஒத்துஉழைச்சுப் பலனறியோம் ஒத்துழையாமையை ஆரம்பிப்போம்

என்றே கோகலே எடுத்துரைத்தும்† எஸ்ஸென்று சொல்லலேகூடியிருந்தோர்
நன்றே வந்திடும் நாளும் வல்லே நமக்கென்ன வென்று தானிருந்தார்

## 1906 சுயராஜ்யத் தீர்மானம், விதேசி பகிஷ்காரம்

கல்கத்தாவிலே கூடின கூட்டம் கண் திறந்து விடவே
காரியம் செஞ்சிட எண்ணிக் காங்கிரஸ் காலே நிமுந்ததையா

வங்காளத்தைப்பிரிவினே செய்த வம்புக்காரச் செயலும்
வாலிபமாகிய நெஞ்சில் குத்தி வருத்தமதுண்டாக்க

இருபத்திரெண்டாம் காங்கிரஸ் தன்னில் எழுந்து நின்ருர்கள்
எங்கள் நாட்டை சுய ராச்சியமாய் எடு எடு என்ருர்கள்

தடியைப்பிடிச்சே ஆடி நடந்த தாதாபாய்க் கிழவன்
தள்ளாடி நடை நடந்து வந்த தாதாபாய்க் கிழவன்

எம்பத்திரண்டு வயசுகடந்த தாதாபாய்க் கிழவன்
எங்கள் நாடுடா என்றே சொல்லி எழும்பிக் குதிச்சானும்

சொயராச்சியமாய் விட்டுட்டுப் போடா சொந்த நாட்டுக்கு
சோப்புவித்தவன் ராசா வோடா இந்த நாட்டுக்கு

ஆருயிரமைல் தண்ணிகடந்து ஆளவே வந்தாயோ
ஆக்கினே செஞ்சு அடக்கிப்போட நீள நினேந்தாயோ

முப்பத்துமூணு கோடிப் பேரும் முட்டா ளானுேமோ ?
இப்பத்தே முதலே பாத்துகோடா எங்க சமத்தெல்லாம்

விக்கவந்தவன் நாடுபிடிச்சு மீசை முறுக்குறதோ
வீட்டுக்காரன் வெறும்பயலாகி-வீதியில் நிக்கிறதோ

* Curse † Yes

பரதேசத்துச் சாமான் எல்லாம் "பாய்க்காட்" செய்திடுவோம்
பண்டம் எதுவும் விக்காமப்போய் பலன் காட்டச் செய்வோம்

என்றே பேசிக் கிழவன் குதிச்ச இத்தக் காட்சி தனை
எழுத முடியுமோ சொல்ல முடியுமோ ஏடும் தாங்கிடுமோ

## சூரத் காங்கிரஸ், தீவிரவாதிகளுக்கும் நிதானக் கட்சியாருக்கும் சண்டை

சுயராச்சியமெனும் மந்திரம் கேட்டு சோம்பல் தொலைந்திடவே
சொந்த நாடெனும் சொரணைபிறந்து துடியாய்த் துடித்திடவே

தேசமுச்சூடும் காங்கிரஸ் சங்கம் சேத்துக்கொண்டார்கள்
செல்லும் செலவுக்குப் பணமும் காசும் சேத்துக்கொண்டார்கள்

இருபத்திரெண்டு வருசமுமாச்சு இன்னும் தரக்காணோம்
இரந்து குடிக்கிற பேரைக் கண்டால் எவனும் தரமாட்டான்

மயிலே மயிலே என்றால் இறகை மகிழ்ந்தே போடாது
மகுடி எடுத்து ஊதியிருந்தால் பாம்பும் ஓடாது

கோகலே பாதை ரொம்பவும் மட்டம் கோணலான பாதை
கும்பிடு போட்டுக் கேட்டால் எடுத்தவன் கொடுத்துட்டுப்போவானோ ?

தாதாபாயின் நடைமுறையாலே தம்பிடி மிச்சமில்லை
தந்தியடிச்சால் சொயராச்சியத்தைத் தந்திட்டுப்போவானோ

திலக மகராஜ் தீவிரமானவன் சிவாஜி தேசத்தான் .
சிங்கம் அவனை நம்பியே சேர்ந்தால் பங்கமேதுமில்லை

என்றே பேசி சூரத்து நகரில் எழும்பிய கூட்டத்தில்
ரெண்டு கட்சியாய்ப் பிரிந்தாரையா இந்தியாவுக்காக

ஒத்துழையாமையைத் தீர்மானிச்சார் ஒண்ணுஞ் செஞ்சிடல்லெ
ஒத்துப்போயி கேக்கிறதென்றால் ஒருத்தனும் தரமாட்டான்

சுயராச்சியத்தைக் கேட்டுவிட்டார்கள் சும்மா இருக்கின்றார்
சூடும்சுரணையும் இல்லாப் பேச்சில் சுகமும் பிறந்திடுமோ

சீமைச் சாமான் வாங்காதிருக்கத் தீருமானம் செய்தார்
திட்டம் போட்டு அத்தை நடத்த திறமையில்லையென்றே

கோகலே கட்சியைத் திலகர் கட்சி குத்திக்காட்டிச்சு
கும்பிடு போடுற கட்சியிதென்று குத்திக்காட்டிச்சு

தீவிரமாகப் பேசினதாலே செஞ்சிட்ட தாயிடுமோ
செய்யுந் தொழிலில் தீவிரம்வேணும் சேதி பேச்சிலல்ல

நீண்ட காலத்து நோக்காடு இதை நிதானமாகவேதான்
நேருமைப்படுத்த வேணும் என்றே நீட்டிமுழக்கிப் பேசி

திலகர் கட்சியைக் கோகலே கட்சி திரும்பிப்பேசிச்சு
திம்பே செய்யும் தீவிரந்தானெனத் திருப்பி ஏசிச்சு

செருப்பை எடுத்தார் அடிதடி போட்டார் சிண்டைப்பிடிச்சுக்கிட்டார்
தேசத்துக்காகச் சேவைகள் செய்ய செய்துகொண்ட சண்டை

அண்ணன்தம்பியும் அடித்துக்கொண்டார் அந்த வேளை தனிலே
அத்தைக் கண்டே ஆளவந்தவன் ஆனந்தங்கொண்டான்

ரெண்டுபட்டது காங்கிரசென்று ரெக்கைகட்டிச் சொன்னான்
திண்டு முண்டுமாய் அறிக்கைகள் விட்டு தீம் தடாக்குச் செய்தான்

தேசபக்தியில் போட்டிகள் வந்தே திட்டிக்கொண்டார்கள்
திடலடியாகக் காரியம்செய்யத் தீரர் கிளம்பிவிட்டார்

நாட்டைக் காக்கப் போட்டிகள் போட்டு நன்மை செய்யலானார்
நாளும் சுதந்திர நினைப்பேகொண்டு நாலுஞ் செய்யலானார்

வேறு

மகஜர் எழுதி விட்டார் மடிப்பிச்சை கேட்டார்கள்
மண்டியிட்டுப் பார்த்தார்கள் மலையும் நகரவில்லை

குண்டெறிந்து பார்த்தார்கள் கொலை செய்து பார்த்தார்கள்
குறைக்கிணறு தாண்டிவிட்ட குறைந்த மதியானார்கள்

திட்டமின்றிச் சண்டையிட்டார் திண்டாடி நின்றார்கள்
இஷ்டம் போலவரவரும் ஏதேதோ செய்தார்கள்

சீமையிலும் இந்த எண்ணம் சேர்ந்துவிட அங்கிருந்த
தேசத்து மூணு மக்கள் செய்தார்கள் சதி ஒன்று

கவர்மெண்டு ஆளான கர்சான் வில்லியின் மேலே
கண்வைத்துத்தானிருந்து கைத்தோக்கால் சுட்டார்கள்

தேசம் எதிர்த்து நிற்க செய்வாரோ இக்கொலை தான்
எய்தவனிருக்க அம்பை இரண்டாய் ஒடிக்கிறதோ

வேறு

சொயராச்சியமெனும் மந்திரம் கேட்டுத் துடிச்சது ராஜாங்கம்
சொந்த ராச்சியம் கேக்குற பேரைத் தொலைச்சுப்போடவேணும்

தேசீயத்தில் மாணவர் யாரும் சேரக்கூடாது
தெண்டனை கிடைக்கும் என்று சொல்லவே தேசபக்தரெல்லாம்

நாஷனல்பள்ளிக் கூடம்பலது நாடெங்கும் வைத்தார்
நாலாதிசையிலும் சுதந்திரநாதம் நயமாய் ஓங்கிடவே

விபினசந்திர பாலர்கிளம்பி வீரமாகப் பேச
வீதிகளெங்கும் சுதந்திரமென்றே வெற்றிக்கொடி வீச

அந்தநாட்டுக்குப் போயிப்படிச்சு அய். சி. எஸ். ஆகா
அய்யன் அரவிந்த கோஷுகிளம்பி ஆனந்தமாய்ப் பேச

அரவிந்தம்பெயர் கேட்டால்தேசம் அத்தனையும் திரளும்
அரவிந்தம்பெயர் சொன்னால்நெஞ்சில் அனலாய்ப் பத்திடுமாம்

ஆகாசத்திலே மின்னல்மின்னி அருள்மழை பெய்வதுபோல்
அரவிந்தமெனும் சோதியிலே ஒரு அன்னைபக்திஊற

பாரதமாதா சேவைக்குத்தன்னை பலிகொடுத்துக் கொண்டார்
மாரதவீரன் திலகமஹாராஜ் மணிமுடி போற்றிடுவோம்

வந்தேமாதர மென்றேசொல்லி மண்ணில் குதித்திடுவோம்
வந்ததுவரட்டும் தேசத்தாரே வாருங்களென்றாராம்

அன்னையானதோர் பாரதமாதா அன்னியன் வசமானாள்
அவளுக்குப்பிறந்த பிள்ளைக்கெல்லாம் அவமானம் இல்லையோ ?

தன்னைப்பெற்ற தாயார்தன்னை அன்னியன் தொட்டானே
சாவுக்குப்பயந்து கோழைகளாகித் தரையில் வாழுவதோ ?

தாயார்மானங் காக்கக்கூடாத் தனய னிருந்தென்ன ?
மாதாமானங் காக்கக்கூடா மக்க ளிருந்தென்ன ?

ஆத்தாமானங் காக்கக்கூடா ஆம்பிளை யிருந்தென்ன ?
ஆறிலும்சாவு நூறிலும்சாவு அதுக்குப் பயந்திடவோ

ஞானதீரனும் இவ்விதமாக எடுத்துப்பேசக் கண்டே
ஞாயம்தெரிஞ்ச மக்கள்கூட்டம் அதனில் சேர்ந்திடவே

வந்தேமாதரம் வந்தேமாதரம் வந்தே மாதரமே
வந்தேமாதரம் ஒன்றேதாரகம் வந்தே மாதரமே

நந்தேசத்தர் உவந்தேசொல்வது வந்தே மாதரமே
நாள்தோறும் அவர் தின்னும் சோறும் வந்தே மாதரமே

வந்தேமாதர மென்று யிர்போம்வரை வாழ்த்தி வணங்குவமே
வந்தேமாதர மென்றேபாடி வணங்கினர் பாரதியும்

அரவிந்தகோஷை கைதிகள்செய்தது ஆளும் ராசாங்கம்
அத்தனைபேரும் அரவிந்தரானா ரந்தநாளில் தானே

ராஜராஜரும் போற்றிவணங்கும் ரவீந்திரநாத் தாகூர்
ராஜத்ரோஹி அரவிந்தர்காலில் ராம்ராம் செய்தாராம்

## சுப்ரமண்ய சிவா, சிதம்பரம் பிள்ளை

தேசமுச்சூடும் திலகர்கட்சிக்குச் செல்வாக் குண்டாச்சு
சின்னப்புள்ளையும் திலகர்பேரை செப்பி வாழலாச்சு

சிறையிலிருந்து செக்கைஇழுத்த சிதம்பரம் பிள்ளைகளும்
தேசத்துக்காகக் காவியுடுத்தின சிவஞானி தானும்

கப்பலோட்டிய தமிழன்ஞானக் கடலாம் சிதம்பரமும்
கலங்காநெஞ்சுக் காரச்சாமி சுப்ரமண்ய சிவமும்

திலகமஹராஜ் சீடர்களையா தெள்ளு தமிழ் நாட்டில்
சிங்கம்இருவர் செய்த சேவையைத் தேசம் மறந்திடுமோ

சேலம் ஜில்லா தன்னில்பிறந்த சிவஞானி தானும்
தென்னாடெங்கும் தேசியத்தை தெளிச்சு விதைச்சாராம்

தொண்டர்கூட்டம் சேர்த்தேகூட்டிக் கொண்டு கொண்டு போயி
சொயராச்சியத்தைக் கிராமந்தோறும் சொல்லி அலைஞ்சாராம்

காரக்குடியில் பாரதாசிரமம் கண்டுவாழும் நாளில்
கையில்தடியும் காவிவேட்டியும் கண்டதுண்டு நானும்

ஆசிரமத்தில் சீடர்கூட்டம் அம்பதுண்டு வீரர்
அத்தனைபேரும் காளைகளையா ஆம்பிளைச் சிங்கங்கள்

பிச்சையெடுத்துச் சோறுபுசித்து பிரசங்கம்செய்ய வேணும்
லச்சியமெல்லாம் தேசம்என்றே லகுவில்வாழவேணும்

அடுப்புப்புகையா நாள்களுமுண்டு அய்யன் ஆச்ரமத்தில்
அன்றுஞ்சேவை செய்திடுவார்கள் அவரும் சீடர்தாமும்

தேசிங்குராஜன் நாடகம்போட்டு தினமும் காட்டிடுவான்
சின்னஞ்சிறுவர் மனதில்தேச பக்தியை ஊட்டிடுவான்

சிவாஜிராஜன் கதையைத்தினமும் செப்பியே வந்திடுவான்
தேசத்துப்படியா மக்களுக்கெல்லாம் சிந்தையில் வெறிஏற

தேசபக்தரைக் கூட்டிவந்துமே தரிசனம் செய்விப்பான்
சின்னஊருக்கும் தேசச்சண்டை சேதிசொல்லி வைப்பான்

பாரதியாரைக் கூட்டிக்கொண்டே பத்துஊரு போயி
பாட்டுப்பாடிக் கூட்டம்சேத்து பக்திசெய்யச் சொல்வான்

பொல்லாநோயெனச் சொல்லியேரயிலில் போகத் தடைசெய்தார்
போமிடமெல்லாம் நடையாய்நடந்து புறப்பட்டுப் போவாராம்

எழுதப்படிக்கத் தெரியாதவரே எங்குமுள்ள நாட்டில்
இவனைப்போலே எடுத்துச்சொன்னவன் எவனுமில்லை கண்டீர்

சூரத்துநாட்டில் வந்தகுளப்பம் சுயராச்சியப் போரில்
சூரத்தைக்காட்ட வந்ததுஎன்றே சொன்னால் பிசகாமோ ?

காங்கிரசென்றால் வெள்ளைக்காரன் கதிகலங்கிப் போனான்
கையிலேகெட்டச்ச தடியையெடுத்து போடுறதென்றானான்

மராட்டிக்கார சிங்கம்கிளம்பி மார்தட்டிப்பேச
வங்காளத்தில் சிலபேர்சேர்ந்து வார்குண்டு வீச

உத்தமனாகிய விவேகானந்தன் உடம்பிறப்பானவனே
யுகந்தரமென்னும் பேபர்நடத்தி ஊக்கங் கொடுத்திடவே

அடிபுடிசண்டைக் காதரவாக அலசிவாங்கி வந்தார்
குண்டுவீசியே நாட்டைநமதாய் கொண்டிட லாமென்றார்

அரசாங்கத்தார் கைதுகள்செய்து அவரைக் கேட்கையிலே
ஆமாமையா எழுதியதுண்மை ஆக்கினை செய்யென்றார்

ஒருத்தன்போனால் நாடேயென்னுட னோடிப் போயிடுமோ
ஒண்ணுக்கு நூறாய்ப் பெருந்தலைசேரும் ஓங்கி வாழும்நாடு

முப்பத்துமூணு கோடிப்பேர்களும் முன்னே வருவார்கள்
என்றேசொல்லிச் செயிலுக்குப்போனார் ஏழெட்டாண்டுகள்

மைந்தனைவிட்டுப் பிரிஞ்சதாயை வாழ்த்துது வங்காளம்
மணிவயிற்றிலே நாங்கள்பிறக்க வரமும் தரவேணும்

ஞானத்துக்கொரு பிள்ளைகொடுத்தாய் ஞான மாதாவே
தேசத்துக்கொரு பிள்ளைகொடுத்தாய் தேச மாதாவே

எட்டுப்பிறவி யெடுப்போம் தாயே எங்களை நீபெற்றால்
பத்துப்பிறவி யெடுப்போம்தேச பக்திகிடைக்கு மென்றால்

பெண்டாட்டிகளாய் வாழ்ந்ததுமுண்டு பிள்ளைப் பெத்ததுண்டு
பெருவயிர்நோகச் சோறுதின்பதும் பெருமைப் பேச்சுமுண்டு

உன்போல்நாங்கள் பிள்ளைகள்பெத்து ஓங்கிவாழ வேணும்
ஒருவரந்தருவாய் மாதாவேநீ உலகத்து நாயகியே

மாதர்களெல்லாம் அன்னைதன்னை வணங்கி வாழ்த்தினராம்
வங்காளத்தின் தாயார்எனவே வாழ்த்திப் போற்றினராம்

## திலகரை நாடுகடத்தினார்கள்

சிவாஜிமன்னன் பிறந்தமண்ணுச் சிங்கம் திலகர்ஜீ
தேசப்பிரஷ்டம் செய்தானய்யா திலகமகா ராஜை

ஆத்தாஅப்பன் பிறந்தநாடு அவர்பிறந்த திங்கே
ஆடிப்பாடி விளையாடினதும் ஆனபூமி யிதுவே

அந்தநாட்டைவிட் டோடிப்போக ஆக்கினை செய்தானும்
ஆறாயிரமைல் தண்ணிகடந்தவன் ஆக்கினை செய்தானும்

சொந்தநாட்டைவிட் டோடிப்போக ஆக்கினை செய்தானும்
சோப்புவிக்கவே வந்தவன்கூடி ஆக்கினை செய்தானும்

ஆறுவருசம் நாடுகடத்தி ஆக்கினை செய்தானும்
ஆடிப்பாடி வளந்தநாட்டை அகத்திப் போட்டானும்

தேசபக்தரின் திருக்கூட்டத்தில் தீக்கொளுத்திப் போட்டான்
சின்னஞ்சிறுவர் நெஞ்சிலேகூட தேசபக்தி வளர

சஞ்சலங்குழப்பம் சேர்ந்துஇருந்தது சனங்கள் மனசினிலே
சட்டதிட்டமே குடிகொண்டிருந்தது சர்க்கார் சிந்தையிலே

## பட்டாபிஷேகம்

வங்காளத்துக்கு வந்தானையா வைசிராய் ஹார்டிஞ்சு
வங்கம்கொதிச்சுச் சூடாயிருக்கிற வக்கணையும் கண்டான்

தலைநகராகிய கல்கத்தாவில் தங்குமடந் தூக்கி
சண்டைப்பிடிச்சே பளகியடில்லி தானும்போய்ச் சேர்ந்தான்

பதினோராண்டு டிசம்பர்மாசம் பனிரெண்டாம் தேதி
பட்டாபிஷேகம் கொண்டாடியதே பட்டண மெல்லாமும்

பட்டாபிஷேகப் பரிசுகொடுத்தார் பஹதூர் ஹார்டிஞ்சு
பணிவாய்த்தேசம் போற்றியதவரை பாட்டுப் பாடியதே

வகுந்துபிளந்த வங்காளத்தை மறுபடி ஒண்ணாக்கி
மட்டைபிளந்த பலகாய்த்துண்டை வச்சிரம் போட்டொட்டி

கிழக்குவங்காளம் மேற்குவங்காளம் கிழிச்சதை தைச்சானும்
கேடுகெட்டுப்போய் நாடுதிண்டாட விதையும் விதைச்சானும்

அடியிலிருந்த அஸ்ஸாமதனை அலாதி ராச்சியமாய்
முடியிலிருந்த பீஹாரோடு மூட்டித் தச்சுவிட்டான்

மன்னரானவர் அறிக்கைவிட்டாராம் மக்கள் தங்களுக்கே
மாகாணசுய ஆட்சிதருவதாய் வாக்குத்தந்தாராம்

தேசமுச்சூடும் ஜனங்கள்கூடி திருநாள் கொண்டாடி
தெய்வமென்றுமே ஜியார்ஜ்மன்னனை ஜயத்துடன் காக்கட்டும்

என்றுவாழ்த்திய காட்சியைக்கண்டா ரெந்தநாட்டுப் பேரும்
இந்தியநாட்டை அடிமையாக்கவே எண்ணங் கொள்வாரோ?

அன்றுகொடுத்த வாக்குக்குப்பின்னே அதனை மறந்தாராம்
ஆளப்பொறந்தவன் போலேநாட்டை அடக்கத் துணிஞ்சாராம்

## ஹோம்ரூல் இயக்கம்.

ஆயிரத்தித் தொள்ளாயிரத்து ஆனபதினாலில்
அன்னிபெ ஸண்ட்டுசொன்ன அருள்மொழிகள் கேளும்

எந்தநாட்டிலோ சண்டைப் பிடிக்க எங்கஆளு தந்தோம்
இந்தநாட்டுக்கு சுதந்திரந்தன்னை எடுத்துத் தரவேண்டும்

வீட்டைஆளுவோம் வீட்டைஆளுவோம் வீட்டைஆளுவோம்
வேத்தாளெங்கள் வீட்டில்நுழைந்தால் விட்டிடவே மாட்டோம்

நாட்டைஆளுவோம் நாட்டைஆளுவோம் நாட்டினை ஆளுவோம்
நாடோடிகளெம் நாட்டில்நுழைந்தால் நாங்கள்விட மாட்டோம்

என்றகோஷமே எங்கும்முழங்க எழும்பியதே ஹோம்ரூல்
இங்கிலாந்திலே அடிப்படையில்போய் முழங்கியதே ஹோம்ரூல்.

வேருப்பூச்சியாய் விழுந்துகிடக்கும் வித்தைமுறை தன்னை
விட்டுவிடுங்கள் என்றதும்மாணவர் விட்டு ஓடிவந்தார்

காலேசெல்லாம் ஆளில்லாமல் கட்டுத் துறையாச்சு
இஸ்கூலெல்லாம் ஆளில்லாமல் இருளடஞ்சு போச்சு

எங்குகண்டாலும் ஹோம்ரூல்ஹோம்ரூல் என்றேமுழங்கிச்சு
எந்தவீட்டிலும் இதுவேபேச்சாய் இருந்து வழங்கிச்சு

அருண்டேல்பெசண்டு வாடியாவென்ற அன்பர் மூவரையும்
அடச்சுப்போட்டது ஊட்டிச்சிறையில் ஆங்கில ராசாங்கம்

அடையார்ஞானச் சங்கத்தம்மை அருஞ்சிறைப் பட்டாளே
அய்யர்லாந்திலே பொறந்தவளிந்திய அன்புக் காளானாள்

பெசண்டைத்தூக்கிச் செயிலிலேபோடப் பெரும்பலமாச்சய்யா
பின்புத்திக்காரர் சிலபேருக்கும் பிரியம்வந்து தய்யா

வெள்ளைக்காரப் பொம்புளேஹோம்ரூல் வேண்டும் என்கின்றாள்
விஷயமிருக்கும் நாமும்சேர்ந்து விடவேணும் என்றே

மிதவாதிகளும் இதனில்சேர்ந்து வீரம் பேசினராம்
வீரவாதிகள் செயலைக்கண்டு விழுந்தார் ஹோம்ரூலில்

சி. பி. ராம சாமி அய்யரும் தேசச் சேவையிலே
சேர்ந்துகிட்டாராம் இந்தியபூமி சிறக்கவந்தவனும்

திருவாங்கூருக்குத் தெத்துப்போன சி. பி. ராமசாமி
தேசபக்தரின் திருக்கூட்டத்தில் சேர்ந்து இருந்தாராம்

சத்தியமூர்த்திச் சிங்கம் தேசச் சண்டையில் சேர்ந்திச்சாம்
தன்னுடநாட்டுக்குத் தொண்டுகள்செய்ய சமரி லிறங்கிச்சாம்

தென்மொழிவடமொழி யோடேஅந்த சீமைப் பாஷையுமே
தேனும்பாலும் போலப்பேசும் திறமை வாய்ந்தவராம்

அபுல்கலாமு ஆஸாத்அவர்கள் அரபுபாஷை பெரியார்
அவரும்ஹோம்ரூ லியக்கம்சேர்ந்து அருஞ்சிறைப் பட்டாராம்

தெக்குவடக்கும் ஹோம் ரூலென்றே தேசம்முழுவதுமாய்
சின்னஞ்சிறுவரும் ஹோம்ரூலென்றே செப்பி வருகலானர்

திலகமகானும் ஹோம்ரூல்கட்சியில் சேர்ந்து சண்டையிட்டார்
தீவிரவாதியும் நிதானவாதியும் சேர்ந்து சண்டையிட்டார்

பட்டம்பதவியைத் தூவெனத்தள்ளிய பவித்திரன் கோகலே
பாரதத்தாயின் மடிமேல்சென்று படுத்துத் தூங்கிவிட்டார்

சிறையிலிருந்த திலகச்சிங்கம் தீவிர மானவரும்
சேவைசெய்த கோகலேதன்னை சிரம்வணங்கினின்ருர்

தீவிரவாதி நிதானவாதியைச் சிரம்வணங்கினின்ருர்
தேசபக்தியில் சண்டைகள்வந்தால் தியாகம் மறப்பாரோ ?

அறுபதுக்கறுபது சாந்திநடந்தது திலகமஹா ராஜனுக்கு
அள்ளிக்குடுத்தது தேசம்பணத்தை திலகமஹா ராஜனுக்கு

லெச்சரூபாயை சேர்த்துக்கொடுத்தது திலகமஹாராஜனுக்கு
லெச்சியமாமோ பணமும்காசும் திலகமஹா ராஜனுக்கு

தேசசேவையே செல்வம்அய்யா திலகமஹா ராஜனுக்கு
தொண்டனையடைவதே பாக்கியமய்யா திலகமஹா ராஜனுக்கு

பொதுநலஉழைப்பே பொக்கிஷமய்யா திலகமஹா ராஜனுக்கு
பூமியைக்காப்பதே புதையல்லய்யா திலகமஹா ராஜனுக்கு

தனக்குத்தந்ததை தேசத்துக்கே தந்து விட்டாராம்
தன்னுடை உடமையை தேசத்துக்கே தந்து விட்டாராம்

அடக்கிப்போடவே ஆத்திரங்கொண்டது ஆங்கில ராசாங்கம்
அடிமையாக்கவே ஆத்திரம்கொண்டது ஆங்கில ராசாங்கம்

டில்லியில்மண்ணை மிதிக்கக்கூடாது திலகமஹா ராஜன்
பாஞ்சாலத்தைப் பார்க்கக்கூடாது திலகமஹா ராஜன்

நல்லநடத்தைக்கி சாமீன்கேட்டது நம்முடை ராசாங்கம்
நாட்டுக்குழப்பத்தைக் கெட்டதென்றது நம்முடை ராசாங்கம்

## 1916 லக்ஷ்மணபுரி காங்கிரஸ்

இந்துவும்முஸ்லீம் இரண்டுபேருமாய் இணைபிரியா ராகி
இந்திய நாட்டின் சுதந்திரமொன்றே எண்ணங் கொண்டவராய்

ராஷ்பிஹாரிகோஷ் திலகமஹாராஜ் பெஸண்டு வாடியா
ரஸூலுஜின்னு மகமூதாபாத் ராஜாவும்வந்தார்

ராமசாமியும் கணபதிபந்துலு ராஜன் ரெங்கய்யர்
ராமசந்திரராவ் டாக்டர்சாப்ரு நீலரத்ன சர்க்கார்

சொந்தவிருப்பு வெறுப்பையெல்லாம் தூரக் கட்டிவச்சு
சொத்தைத் திருப்பி வாங்குமாசையில் தோளோடு தோளானார்

பண்டைநாள் முதல் பாரததேசம் பகுத்தறிவுள்ளது தான்
பலபலதேசம் இதனைப்பார்த்து பாங்கடைஞ்ச துண்டு

ஆங்கிலராச்சியம் ஆனதின்பின்னே அங்குமிங்கு மாக
அறியாத்தனமா யிருந்ததுஎன்றால் அதற்குக்காரணம் யார் ?

எங்கள்தேசத்தை சுயஆட்சியுடன் இருந்துவாழச் செய்வோம்
என்றேநமது மன்னர்பிரானும் எடுத்துச்சொல்ல வேணும்

இந்துவும்முஸ்லீம் கூடிக்கேட்கும் இந்தக்கேள்வியை
இனியொருபோக்குக் காட்டியேநீங்கள் இல்லையெனக் கூடா

தென்றேதேசம் கேட்டுக்கொண்டது இந்தக்கூட்ட மதிலே
இரந்துகுடிக்கிற தீர்மானந்தான் இந்தக்கூட்ட மதிலே

கூட்டம்நடக்கும் போதுஎல்லாம் கூர்மையாக ஒருவன்
குத்தங்குறையைக் குறிப்பாய்ப்பார்த்துக் குறிச்சுவச்சுக் கிட்டான்

இத்தனைகுதிரை பூட்டியும்வண்டி ஏனோஒடுதில்லை
இடக்குச்செய்தே குதிரை இழுக்குது வடக்குதெக்கு மாக

இதைவழிப்படுத்தி ஒருபாதையிலே எடுத்து ஓட்டிவிட்டால்
இந்தியநாடு விமோசனம்பெறும் என்றுஎண்ணங்கொண்டார்

இவருயாரையா ? இவருயாரையா ? எந்தஊருக் காரர் ?
இந்தியபூமி செஞ்சபாக்கியம் இணையில்லாத காந்தி.

## மஹாத்மா காந்தி

போர்பந்த ரென்னும் தலத்தினிலே புத்திமிகுந்த குலத்தினிலெ
கெட்டிக்காரர்எனும் கூட்டத்துலே செட்டிப்புள்ளைகள் சமூகத்திலே

காந்திபிறந்து படிச்சுக்கிட்டார் கஸ்தூரிபாயையும் கட்டிகிட்டார்
சாந்தம்பிறந்தது பூமியிலே சத்தியம்வந்தது பூமியிலே

சத்தியந்தானே பெரிசெனவே சாக்ஷியம் சொல்லப் பிறந்தவராம்
உத்தமவாழ்வு பெரிசெனவே உலகம்சொல்லப் பிறந்தவராம்

பள்ளியில்சேர்ந்து படிச்சுக்கிட்டார் பத்தும்பரிச்சைகொடுத்துப்பிட்டார்
பத்துக்குமேலேபடிக்கத்துக்கு பவநகர்பள்ளியில்சேந்துக்கிட்டார்

பி. ஏ. பி. எல். படிச்சாலும் பிச்சைப்பணந்தானேசம்பளமாம்
எம். ஏ. எம். எல். படிச்சாலும் ஏளெட்டுருபாயேசம்பளமாம்

கப்பல்கடந்துபடிச்சுவந்தா காசுகிடைக்கவழியுமுண்டு
பாரிஸ்டராகப்படிச்சுவந்தா பணமும்காசும்சேந்திடுமே

சீமைக்குப்போயித்திரும்பிவந்தா தேசம்மயங்கிப்பணம்கொடுக்கும்
கோட்டையடுத்தவனோட்டாண்டி கொட்டிக்கொடுப்பான் காசெனவே

வேண்டியபேர்களும் சொல்லிவர மேலைச்சீமைக்குப்போகவெண்ணி
அன்னையின்முன்னேபோயிருந்து அம்மாவிடைதரவேணுமென்றார்

* பத்துமாசம் சுமந்துபெத்தவள் பதறிப்போனாளாம்
பையனைப்பிரிய மனமில்லாமல் உதறிப்போனாளாம்

பெத்தமனசிலே பித்துகள்வந்து பிரமைதட்டிப்போச்சாம்
பெரியமனுசனாய் ஆகும்மகனைப் பெத்தவளறிவாளோ ?

அப்பாமகனே சீமைக்குப்போனால் அடக்கம்கெட்டுப்போகும்
ஆசாரங்களும் பளக்கவளக்கமும் அளகுமாறிப்போகும்

குடும்பத்திலில்லாக் குடியும்கூத்தியுங் கூடவந்துசேரும்
கொல்லுக்கொலையும்புலாலுஉணவும் கூடவந்துசேரும்

சத்தியம்தருமம் சன்மார்க்கமுமே சார்ந்ததுஇந்நாடு
சண்டைபூசலும் கெட்டகுடியுமே சேர்ந்தது அந்நாடு

அந்தநாட்டுக்குப்போயிப்படிச்சு ஆயிரம்வந்தாலும்
அரைக்கைசட்டைக்கும் பூடுசுதொப்பிக்கும் ஆகிப்போகும்மகனே

செட்டுப்பழக்கம்போய் கெட்டபழக்கமே சேந்தபலனாகும்
தேசச்சனங்களும் உன்னைப்பார்த்து சீருகெட்டுப்போகும்

இதவாய்த்தாயார் எடுத்துஉரைச்ச இத்தனையும்கேட்டு
இந்தமகாத்மா என்னசொன்னாரு ? என்னசொன்னாரென்றால்

அம்மாதாயே பெத்தவளேநான் அப்படிமகனல்ல
அண்டமிடிஞ்சு விழுந்திட்டாலும் ஆணைமீறுவேனோ

கனவிலும்கூடக் கள்ளுக்குடியைக் கருதிடவேமாட்டேன்
கஸ்தூரிபாயி தவிர ஒருத்தியை கையால்தொடமாட்டேன்

மாமிசந்தின்னு முட்டைகுடிக்க வாய்திறக்கமாட்டேன்
மாதாவேயிது தவறுவதில்லை மகாதேவன்சாக்கி

உனக்குத்தந்த வாக்குகள் மீறி ஒண்ணைத்தொட்டாலும்
உன்னைத்தின்னவ னாவேனம்மா உனதுபாதம்சாக்கி

அன்னைமனசு கனிஞ்சுதய்யா ஆனந்தக்கண்ணீர் சொரிஞ்சதய்யா
அண்ணனைக்கூடத் துணைக்கனுப்பி ஆனந்தமாகப் பயணமிட்டார்

மாதாகாலில் விழுந்தெழுந்து மனதில்சத்தியம் பண்ணிக்கிட்டு
வந்துசேந்தாராம் பம்பாய்க்குள் வம்புவிளைஞ்சது சாதிக்குள்ளே

பனியாச்சாதியில் கூட்டங்கூடி பலத்ததீர்ப்பு பண்ணிவிட்டார்
மளிகைக்கடைவச்சுச் சரக்குவித்து மந்திரியாகவும் தாசில்பண்ணி

மகத்துவம்பெத்த குடும்பத்திலே வந்தவன்மோகன சந்திரனும்
காபாகாந்திபெத்தமகன் கரம்சந்திர மோகனகாந்தி அவன்

கப்பலேறிப் போகப்போறானும் கடலும்தாண்டப் போறானும்
சாதியைவிட்டுமே தள்ளிப்பிட்டோம்சனத்தைவிட்டுமேதள்ளிப்பிட்டோம்

ஆதிமுதல்வந்த சாதிக்கிவன் ஆகாத்தொழிலைப் பண்ணிப்பிட்டான்
வார்த்தையும்பேசக் கூடாது வழியனுப்பவுங் கூடாது

பார்த்தவன்பேசக் கூடாது படுக்கஇருக்கக் கூடாது
சாதிக்கட்டு இதைமீறிப்பிட்டா சாமிக்கவராதம் கட்டவேணும்

ஊருக்குமேபதில் சொல்லவேணும் ஒண்ணேகா ரூபா கட்ட வேணும்
என்றேதமுக்குப் போட்டுவிட்டார் ஏழைபணக்காரர் யாவருக்கும்

மாதாஉத்தர வானபின்னே மத்தவன்சொல்லித் தடுப்பதுண்டோ
தேசத்தின்பாக்கியம் சேருறப்போ சின்னத்தனமும் செயிச்சிடுமோ

காந்தியும்கப்பலில் ஏறிவிட்டார் கப்பல்புறப்பட்டுப் போகுதய்யா
சீமையில்சட்டம் படிச்சுக்கிட்டு சிறப்பாய்பாரிஸ்டர் பாசுபண்ணி

சின்னத்தனமொண்ணும் செய்யாமல் செஞ்சிட்டசத்தியம் மாறாமல்
அஞ்சாறுண்டு படிச்சுப்பிட்டு ஆனபரீட்சையும பாசுபண்ணி

ஆத்தாவாக்குக்கு மாறாமல் ஐயன்காந்தியும் வந்துபிட்டார்
கப்பல்தளத்துக்கு அண்ணன்வந்து கட்டித்தழுவி யணச்சிக்கிட்டார்

கண்ணீரோடிக் கரைபுரள கட்டித்தழுவி யணச்சிக்கிட்டார்
அம்மாளிறந்து போனார்கள் அத்தையெழுத மனம்வரல்லே

பட்டம்படிச்சவன் வந்திருக்காய் பார்க்கவேபெத்தவ ளில்லையடா
என்றேதமயன் இரைந்தழுக என்னையன்காந்தி மகராஜன்

எண்ணினஎண்ணம் தெரிஞ்சுக்கவே இதயந்துடிக்குது என்சாமி
மாதாவுக்கொருவாக்குமிட்டோம்வாக்குக்கொடுத்ததைகாத்துக்கிட்டோம்

மாதாமறைந்து போயிவிட்டார் மண்ணிலினித்தான் வருவாரோ ?
சொல்லிஅனுப்பிய புத்திமதி சொந்தப்பொருளெனக் கொண்டுவிட்டார்

சென்மம்முழுவதும் தாயார்க்கு செஞ்சிட்டசத்தியம் மீறலெனான்
என்றேஉறுதி எடுத்துக்கிட்டார் ஈசன்கருணை மகாத்மாஜி

## பாரிஸ்டர் காந்தி

பம்பாய்பட்டண விதியிலே பலகைபோட்டார் பாரிஸ்டர்
வம்புதும்புக்காசு வாங்குதற்கே வக்கிலானர் பாரிஸ்டர்

ஓரவளக்குக்குப் போறதில்லே உள்ளவளக்கோ வருவதில்லே
தரகுகொடுக்கவோ சம்மதியார் தானுய்வளக்கு வந்திடுமோ

பத்தும் தெரியோனும் பம்பாய்க்கு சத்தியம்பேசிச் சரிப்படுமோ
பலகையைமாட்டி நின்னதுதான் பைசாவரத்தும் காணவில்லே

பம்பாய்வாழ்வு போதுமென்று பாட்டன்ஊருக்குப் போய்ச்சேர்ந்தார்
ராஜகோட்டையிலே வக்கில்பண்ணி ராத்திரிஎண்ணெக்கும் காணுது

அண்ணனும்தம்பியும் யோசனையில் ஆழ்ந்துஇருக்கிற நாளையிலே
தென்னுப்பிரிக்கா தேசத்துக்கு சென்றுஇருக்கும் நம்தேச

தாதாஅப்துல்லு கம்பெனி தாக்கிதுஒண்ணு வந்திடவே

## தென்னுப்பிரிக்கா பிரயாணம்

*ஆப்பிரிக்காவில் உள்ளதுஅய்யா அப்துல் கம்பெனி
அங்கேநிறையத் தொழிலுந்துறையும் அவுங்களுக்கே உண்டு

அவுங்கதரப்பிலே கேசுக்காக ஆசராகும் வக்கில்
அத்தனைபேருக்கும் கட்டுப்படிக்க ஆளுவேணுமென்றே

ஆப்பிரிக்காவுக்கு காந்தியைக்கூட்டி அனுப்பவேணுமென்றார்
அண்ணந்தம்பியும் ஒத்துப்பேசி ஐயன்புறப்பட்டார்

வெள்ளைத்தோலுக் காரன்பொறப்பில் மேலாப்பொறந்தவனும்
கருப்புத்தோலுக் காரன்பொறப்பில் கடோசியானவனும்

அண்டவந்தவன் ஆப்பிரிக்காவில் அதிகாரம்செய்தே
ஆளப்பொறந்த நீக்கிரோவையும் அடக்கியாண்டிருந்தான்

ஆப்பிரிக்காவில் நெறத்துவேசம் ஆட்டம்போட்டதுபார்
அந்தஊரிலே கோரட்டுதன்னில் ஐயன்போனதுமே

தலைப்பாதன்னை எடுக்கச்சொல்லி தாக்கிதும்போட்டார்
தலைவணங்காமல் மகாத்துமாவும் தானேவெளியேற

இரண்டாம்வகுப்பு வண்டியிலொருநா ளிருண்டவேளைதனிலே
ஈறும்பல்லும் விடவிடக்குது இருளும்பனிக்கூதல்

காசுகொடுத்தே டிக்கட்டுவாங்கின கருப்புக்காந்திதன்னை
கையைப்புடிச்சே இழுத்துத்தள்ளினன் காவல்வெள்ளைபோலிஸ்

இந்தியமனிசன் யாராளுலும் இருண்டுசாமமாளுல்
எங்குமேபோகக் கூடாதென்று இதுஒருசட்டமுண்டாம்

ஒம்பதுமணிக்கு காந்திமகானும் உலாவப்போனாராம்
ஓங்கினகாலால் உதைச்சுப்புட்டானும் ஒருநாள்ராத்திரியில்

சேட்டுவழக்குத் தீர்ந்துபோச்சுது சிக்கல்தீரவில்லை
தேசத்தாரை சிறுமைப்படுத்தும் கேவலம்தீரவில்லை

அவுமானத்திலே நொந்ததுமனசு ஆனது ஆகட்டும்
ஆப்பிரிக்காவில் வெள்ளையன்வெறியை அகத்திப்போடவேணும்

இந்தியமக்கள் பணத்தைப்போட்டு ஏத்தம்செஞ்சநாடு
இவனுக்குமட்டும் சுதந்திரமென்பது இல்லாஒருநாடு

இங்கெயிருந்தே சிக்கலைதீர்த்து இந்தியமக்களுமே
எல்லாருக்கும் சரிசமானமாய் இருந்துவாழச்செய்வோம்

என்றேஎண்ணி காந்திகிளம்பி இந்தியாவில்வந்து
எளப்பம்செய்யும் சேதிகளெல்லாம் எடுத்துச்சொல்லிவிட்டார்

தென்னாப்பிரிக்கா அவமானத்தில் தேசம்துடிச்சுடுதாம்
சீமைசிமையாய் நீதியைக்கேக்கத் தந்தியடிச்சுடுதாம்

அடக்கியாண்டிடும் ஆப்ரிக்காவின் ஆளும்வெள்ளையன்
அய்யன்காந்தியை கொன்னுதிங்கவே ஆத்திரம்கொண்டானும்

ஆறுமாசம் இந்தியாவிலே ஐயனும்தானிருந்தே
அன்னைமாதா கஸ்தூரியுடன் ஆப்பிரிக்காபோக

## ஆப்பிரிக்கா அநியாயம்

கலகம்செய்ய துணிஞ்சான்வெள்ளையன் கருப்பனுக்கெதிரிடையாய்
காந்திமகானை இறங்கஒட்டாமல் கப்பலுக்கோர்தடையாய்

கப்பல்புடிச்சு அஞ்சுநாளைக்கு ஏனியிறக்காமல்
கப்பலுக்குள்ளே வச்சுவச்சுக் காவக்காத்துப்பாத்தும்

காந்தியைக்கொல்லக் கூடினகூட்டம் கலைஞ்சுபோகுதில்லை
சாந்தமகானைக் கொல்லவேவந்த சனங்கள்போகுதில்லை

ஆருநாளில்கப்பலிறக்கி அடிஎடுத்து வச்சார்
ஆருய்ஓடி வருகுதுஅய்யா அந்தநாட்டுக்கூட்டம்

கல்லெடுத்தடிச்சான் முட்டையெறிஞ்சான் காந்திமகாத்மாமேல்
கம்பையெடுத்தொரு போடும்போட்டான் காந்திமகாத்மா மேல்

கருப்புப்பூடுசால் எட்டி உதச்சான் காந்திமகாத்மாமேல்
கட்டினதலைப்பா தட்டிவிட்டானும் காந்திமகாத்மாமேல்

சாந்தம்பொங்கி வழியுதுஐயா காந்திமகானுக்கு
சனங்களைக்கண்டு கருணைபெருகுது காந்திமகானுக்கு

தள்ளிநெருக்கி அடிக்சுக்காலைத் தட்டி விட்டானய்யா
தள்ளாடிக்கிட்டே காந்திவிழுந்தார் தாயாம்பூமியின்மேல்

அந்தவேளையில் குப்பிரண்டான அலைக்சாந்தர்வீட்டு
அம்மாளோடி ஓடியும்வந்து அவரைஎடுத்தாராம்

என்னையடிச்சுப் போட்டதின்பின்னே இவரை அடியுங்கோ
என்றேசொல்லி காந்திமகானை இழுத்துக்கொண்டோடி

தாணாவுக்குள் அடச்சுக்கதவைத் தாளும்போட்டுவிட்டுத்
தப்பிச்சுப்போக காந்திக்குவேசம் தானும்போட்டுவிட்டார்

இந்தியபோலீஸ் காரனைப்போலே என்னய்யன்காந்தி
இருட்டுநேரத்தில் தப்பிஓடித்தன் னில்லம்சேர்ந்தாராம்.

வெள்ளைக்கார அம்பட்டன்மயிர் வெட்டமாட்டமுண்ணான்
வேட்டிவெளுக்கும் வண்ணான்சலவை நீட்டமாட்டமுண்ணான்

தானேசலவை செஞ்சிக்கிட்டாராம் சாந்தமகாத்மாஜி
தானேசவரமும் செஞ்சுக்கிட்டாராம் சாந்தமகாத்மாஜி

கரப்பாம்பூச்சி கடிச்சாப்போலே கிராப்புவெட்டிக்கிட்டார்
கழுத்துப்பட்டையில் மாவைத்தடவி கலந்துஒட்டிக்கிட்டார்

கோரட்டுக்குள்ளே கூட்டம்பார்த்துக் குலுங்கச்சிரிச்சதுவாம்
கொள்கைக்காக இம்மியும்விட்டுக் கொடுக்கமாட்டமுண்ணார்

போயருயுத்தமும் வந்துசேரவே பொதுஜனசேவை செய்தார்
குண்டுமாரியில் இருந்துகொண்டே தொண்டுசெய்துவந்தார்

சாதிமதங்களை பார்ப்பதுஇல்லை தவிக்கிறபேர்களுக்கே
தவிக்கும் உயிரில் சாதிமதங்கள் சண்டையேதுமுண்டோ ?

எல்லா உயிர்களும் ஒன்றாய்க்கருதி இருந்துவாழக்கண்டு
இரக்கம்வந்தது எல்லாருக்கும் இவரைக்கண்டுகொண்டு

ஆப்பிரிக்காவின் வெள்ளையன்மட்டும் அசைஞ்சுகொடுத்தானோ
அதனாலென்ன கருப்புகாந்தியும் அசஞ்சுகொடுத்தாரோ

சாத்துமீகப்போ ராட்டஞ்செய்வதாய் சவாலுவிட்டாராம்
சட்டமறுப்புச் செய்துகொண்டே சனங்கள்கட்சிசொன்னார்

எத்தனையோதரம் செயிலிலேவச்சும் எண்ணம்சாகவில்லை
இரக்கமில்லாமல் அடிச்சுப்போட்டும் இயக்கம்போகவில்லை

இந்தப்படியே இருபதுவருசம் இருந்து பாடுபட்டு
இந்தியனுக்கு எதிரிடையாக இருந்தசட்டமெல்லாம்

எடுத்துப்போடவே ஸ்மட்சு துரையோடிருவரும் ஒப்பந்தம்
எழுதிக்கிட்டே கையெழுத்தும்போட் டிருவரும் ஒன்றாகி

கருப்பன்வெள்ளையன் இருவரும் ஒத்தைக்காயிதத்தின்மேலே
கைநாட்டிட்டு நிறத்துவேசம் கதறியோடச் செய்தார்

## அஹிம்சை நாத்தங்கால்

அகிம்சாதத்துவ போதனைசெய்ய ஐயன்காந்திக்கு
ஆப்பிரிக்காவே அடிப்படையாகி அஸ்திவாரமாச்சு

சாத்துமீகப்பயிர் வித்துமுளைச்ச நாத்தங்காலதுவே
சரிக்குச்சரியாய் பலனும்கொடுத்த நாத்தங்காலதுவே

அந்தநாட்டிலே இந்தத்தத்துவம் அய்யன்கண்டுகிட்டே
ஆத்தாநாட்டைக் காத்திடவேண்டி அவசரமாய்வந்தார்

இந்தியாவுக்கு வந்துசேர்ந்துமே ஏழைகளுடன்தானும்
இருந்தார்சபர்மதி யாத்தங்கரையில் எங்கள்மகாத்மாஜீ

இவருதானய்யா காங்கிரஸ்பந்தலில் எட்டியிருந்தபடி
இங்கேநடக்கும் காரியமெல்லாம் இடையும்போட்டுவந்தார்

## காங்கிரஸ் சபையின் நிலைமை

வால்வீசி ஓடிவரும் மயிலைக்காளை போலே
வக்கணையாய் காங்கிரசின் முக்கியத்தீர் மானம்

பத்திரிக்கைக் காயிதத்தில் நித்தம்நித்தம் சேதி
பாதிக்குமே லேயிதுவே யாயிருந்த தப்போ

நாங்களெல்லாம் காங்கிரஸு நாட்டைநம்ப தாக்க
பாங்குடனே எழுந்துவிட்டோம் தூங்கிவிழ மாட்டோம்

எங்களுட நாடுஇதில் இடமில்லையே யார்க்கும்
என்றுதினம் பேசிடுவார் எங்குபாரும் கூட்டம்

ஆங்கிலேயன் கையிருப்பை வாங்கிநீங்கள் ஆள
ஆனவழி என்னவென்றால் அதுதெரியா தென்பார்

துள்ளுதய்யா தேசமெல்லாம் நல்லசெயல் செய்ய
சொல்லியொரு பாதையிட வல்லவனைக் காணோம்

வெள்ளம்வந்து பெருக்கெடுத்து துள்ளிவரும் வேளை
வெட்டியணை கட்டிவிட ஒட்டனுமே இல்லை

மேலமழை பெய்துநதி மேலேவரும் தண்ணி
நாலுவயல் பாயுதில்லை நடுக்கடலில் போகும்

தனக்குத்தானே சண்டையிட்டு தலைவர்கள் எல்லோரும்
சனங் களோடே நம்பிக்கையைத் தானிழந்து போனார்

தடியெடுத்து சண்டையிடத் தானும் ஆளுஉண்டு
தங்களுக்குள் சண்டை யிட்டார் தடிஎடுத்துக்கொண்டு

தப்புவழி நல்லவழி ஒப்பனையே சொல்ல
அப்பொழுது வந்துதித்தார் அய்யனும் மகாத்மா

செய்யும்வழி தானறியாத் திண்டாட்டம் தனிலே
உய்யும்வழி கொண்டுவந்தார் உண்மையால் மகாத்மா

## காந்தி வழி

நாட்டுமக்கள் தன்னையெல்லாம் கூட்டமாகச் சேத்து
நல்லசொல்லைச் சொல்லிநீங்க நாலுசெய்ய வேணும்

பேச்சுப்பேசி விட்டதனால் பெரும் பயனும் உண்டோ
பேதலிக்கும் பேச்சுநல்ல பெருமைதரும் செய்கை

நாட்டினிலே முக்கால்வாசி தோட்டவயல் வேலை
நம்மளுக்குச் சோறுதரும் நல்லதுவெள் ளாண்மை

வெள்ளாமை செஞ்சுதர உள்ளவர்கள் எல்லாம்
வேணமட்டும் சோறுதின்னு ஊணுடையும் பெத்து

ராட்டையிலே நூலெடுக்கும் பாட்டிகளுக் கெல்லாம்
ஓட்டையில்லா துணி கொடுத்து உதவிசெய்ய வேணும்

பஞ்செடுத்து பட்டையிட்டு நெஞ்சு வலிகொள்ளும்
பஞ்சைகளும் குஞ்சுகளும் பாதிமூட வேணும்

தேனெடுத்த வன்கையிலே தீயெடுத்துச் சுட்டால்
தேசமுன்னே வந்திடுமோ சேவைசெய்ய வாரும்

விவசாயி குறையறிஞ்சு வேண்டியதைச் செஞ்சால்
வேறுதவி வேண்டிடுமோ விரைவினில் சுயராஜ்யம்

## 1918 சம்பரான் சத்தியாக்ரகம்

இமயமகா மலையருகே இருக்கும் சம்பரானில்
ஏழைகள் படுந்துயரம் இதையொழிக்க வாரும்

சனகமகா ரிஷியிருந்து தானேஅர சாண்ட
தர்மமுள்ள பூமியிலே தரித்திரத்தைத் தீரும்

ஏருழுது நீருகட்டி எருதழையும் போட்டால்
இன்னவிதை தூவவென்று இன்னொருத்தன் சொல்வான்

சாயம்விவ சாயமிட சம்பரானைப் பார்த்து
சட்டமதால் அவுரிநிலத் திட்டமொண்ணு வச்சான்

உழுதவிவ சாயிவிட்டு ஒருவன்விதை தூவ
யோக்கியதையோ பாருமையா சாக்கிரதையாக

சம்பரானு லேயிரங்கிசத்தி யப்போர் செய்தார்
சனங்களுக்கு சத்தியத்தின் தன்மைவெளி யாச்சு

## ராஜேந்திரபிரசாத், கிருபாளனி

பீஹாருக் காரர்செய்த பெருந்தவத்தி னாலே
பிள்ளையாக வந்தராஜ இந்திர ப்ரசாது

தேசமக்கள் மெச்சுகின்ற திறமையுள்ள சாது
தீவிரமாய்ச் செய்கையிலே அவருக்கிணை ஏது

கல்கத்தா பாட்டுனைவில் காசுபணத் தோடே
கட்சிக்காரன் கால்பணிய கோலா கலத்தோடே

வக்கிலு பாரிஸ்ட்டராய் வாழ்ந்து வரும் நாளில்
வந்துதய்யா தேசபக்தி சிந்தையிலே தானே

சட்டப்பள்ளிக் கூடத்திலே தலைமைவேலை விட்டு
சம்பாத்தி யங்கள்விட்டு தன்தொழிலும் விட்டார்

சம்பரானில் மக்களுட தும்பமது கண்டு
சாதுமகான் காந்தியையும் தானழைத்துக் கொண்டு

ஏழைவிவ சாயிதுயர் தீர்க்க அங்கு போனார்
ஏழைதுயர் தீருமட்டும் ஏன்திரும்பப் போரார் ?

ஆணித்தரமா யுரைக்கும் ஆசார்யகிருபா ளினியும்
அந்தநாளை முதல்காந்திக் கந்தரங்க மானார்.

## வல்லபாய் படேல்

* உழுதுகுடிக்கிறசாதியிலே உத்தமன்படேல் வந்தவனும்
உலகத்தைக்காக்குறசாதியிலே ஒருத்தனாக வந்தவனும்

பட்டினிதீர்க்குறசாதியிலே பாங்காய்ப்பிறந்த பிள்ளையவன்
பஞ்சம்பசிகளைக் கண்டுவிட்டால் பதறித்துடிச்சுவிடுவானும்

வெள்ளாமைபண்ணும் சாதிப்பிள்ளை வேறேபடிப்புப் படிச்சாலும்
சுள்ளான்புத்துகள் கண்டுவிட்டால் சுரண்டிஎறிஞ்சிட மாட்டாதோ

வயவரப்பிலேவந்தவங்க வக்கீல்வேலைக்கு வந்தாலும்
வாய்க்காலுக்குள்ளே மண்விழுந்தா வாரியெடுத்திட மாட்டாதோ ?

களனிகாக்குறபுள்ளையவன் கத்தவித்தைபல உண்டேனும்
களைவிழுந்த செய்கண்டானே கையேவந்தது தானாக

வக்கில்வேலையைவிட்டுப்பிட்டான் வக்காளத்தைக் கிளிச்செறிஞ்சான்
வந்தபணங்காசுஎல்லாமும் வாண்டாமென்று தொலைச்சுப்பிட்டான்

காந்திமகானின் காலடிக்கீழ் கைகட்டிச்சேவகம் செய்யவந்தான்
சாந்தமகானின்பட்டாளச் சர்தாராகவே பேரெடுத்தான்

கண்டிப்புக்காரன் கடுங்கோபி கரால் பேச்சுப் பேசிடுவான்
தண்டிப்புப்பண்ணிநடத்தினலும் தயவேருப மாகவுள்ளான்

அந்தச்சர்தாரும்பின்தொடர அறிவுமகாதேவ பாய்தொடர
அவுரித்தோட்டச்சண்டையிலே அதிகாரக்கச்சி தோத்துவிட

கூலிஒசத்திதரஎசைஞ்சார் கொஞ்சம் குடுக்கவும் சம்மதிச்சார்
நாலிலேரண்டுக்குமேலாக நம்முடகச்சிக்குச் சாதகந்தான்

செங்கோலுக்குமுன்போராடி சின்னச்சயங்கள் கிடைச்சிடவே
தேசத்துமக்களும்காந்திக்குள்ளே தெய்வமிருப்பதைக் கண்டார்கள்

* கைக்கு[illegible]தைக்கும் தெரிகிறதையா காந்திமகாத்மாபேர்
மழலைப்பேச்சுலே சொல்லிடுதையா மகாத்மாகாந்திகி ஜே

ப்ரும்மசாரிகள் கும்பிடுரூர்கள் பெருமை வாழ்வுகண்டு
குடும்பத்தாரும் கும்பிடுரூர்கள் கூடிய தம்பதியை

சன்னாசியெல்லாம் தோத்திரம் செய்தார் சாந்த வாழ்வுகண்டு
விவசாயிகளும் போற்றிடுவார்கள் வீரவாழ்வுதன்னை

எல்லா மக்களும் போற்றிப்புகழும் என்னையன் காந்தி
எந்த நாளுமே வாழ்ந்திடவேணும் இந்த நாட்டு மண்மேல்

எல்லா மக்களும் போற்றிப்பணிந்து இருந்து வாழும் நாளில்
இயக்கங்கண்டு பயந்து நடுங்குது இங்கிலீஸ் ராசாங்கம்

## ரௌலட் சட்டம்

* எங்குமிவன் பேர் வளங்கி பொங்குவதைக்கண்டே
இக்கணமே ஒடுக்கிடுவோம் பொக்குனுதானென்றே

நோக்குகிற பக்கமெல்லாம் பார்க்கிறதோ காந்தி
நாக்கு வரும் பேச்சிலெல்லாம் நாட்டுடைய பேச்சு

சுத்த சுயராஜ்ஜியத்தை பெத்துவிடவேண்டி
சுறுசுறுப்புக் கொண்டதையும் விறுவிறுப்பும் கண்டார்

சட்டமதுபோட்டுத்தரை மட்டமதுவாக்க
திட்டமும் வகுத்ததுவாம் மட்டமதி சர்க்கார்

சந்தேகம் வந்துவிட்டால் சாச்சிகளும் வேண்டாம்
தண்டினையும் சர்ச்சிகளின் கண்டிதமும் வேண்டாம்

கண்டகண்ட பெரையெலாம் கைவிலங்கு போட்டு
காவலிலே போட்டுவைக்க கதிகெட்ட சட்டம்

ரவுலட்டுச் சட்டமிதை ரெடி பண்ணிப்போட்டார்
கவிட்டுச் சூது செய்யும் காரியமே செய்தார்

காந்தியிதைக் கேட்டதுமே கலக்கமிகக் கொண்டார்
காயிதமுந் தானெழுதி வாயிதமாய்ச் சொன்னார்

நாயமில்லாச்சட்டமிதை மேயவிட்டுவிட்டால்
நாடுமுச்சூடுமல்லவோ காடுபட்டுப்போகும்

என்று எண்ணிக்காந்திமகான் இராப்பகலாத்தானே
எப்பொழுதுஞ்சிந்தனையா யிருந்துவரலானார்

சிந்துகுசராத்துபம்பாய் தேசமெங்குந்தானே
திக்குவிஜயம்புரிந்து இக்கொடுமைசொல்லி

தெக்குவடக்குந்திரிஞ்சு தேசமெங்குஞ்சுத்தி
சென்னையிலேவந்திருந்தார் புண்ணியனுமப்போ

## தமிழரேத்தம்

*என்னருமைநாடே இனியதமிழ்நாடே
உன்னருமைசொல்ல உலகிலிணையேது

பொன்னிநதிபாயுஞ் செந்நெல்விளைநாடே
உன்னிடைசுமந்த உத்தமர்கள்பாராய்

தூங்கிவிழுகாதே துள்ளியெழுதமிழா
ஆங்கிலேயனைநாம் ஆட்டிவைக்கப்போறோம்

அர்ச்சுனனும்வந்தான் அர்ச்சுனனும்வந்தான்
மெச்சுதமிழ்நாட்டில் அர்ச்சுனம்பிறந்தான்

சேலத்துக்காட்டில் செழித்தமலையூடே
ஞாலத்தைக்காக்க சாமியருளாலே

சாதிவித்தியாசம் தானொழித்தநல்லான்
சக்ரவர்த்திவீட்டில் வந்துதித்துவிட்டான்

வந்துதித்துவிட்டான் வாள்விஜயவீரன்
நந்தமிழர்பெருமை நாடெங்கும்பேச

மாசுமருவில்லா வானமழைபோலே
ராசகோபாலாச் சாரியென்னும்பேரான்

காண்டீபமுண்டு கையெழுத்துப்பேனு
தாண்டிஒருசொல்லைத் தானுஞ்சொல்லாதான்

காசுபணமெல்லாம் தூசிபோலெண்ணிக்
காங்கிரசில்சேந்தான் காந்திவழிபூந்தான்

தருமபுத்ரங்காந்தி சர்தாருவீமன்
தமிழன் ராஜாஜீ தனுசெடுத்த பார்த்தன்

என்றுசொல்லுருப்போல் என்றுமுள்ளதாலே
இருவருமேகூடி எண்ணமிடலானார்

## 1919 ரௌலட் சத்தியாக்ரகம்
## இந்தியா பூராவும் ஹர்த்தால்

இந்த ரவைலட்டு இனிக்காதலட்டு
எங்களுக்குவேண்டா மென்றுசொல்லிவிட்டு

இந்தியாவெங்கும் ஏகமனதாக
எடுத்துரைத்துநோட்டீஸ் கொடுத்துவிடவேணும்

கடையடைப்புசெய்து ஹர்த்தாலுஞ்செய்து
அடவுகெட்டசட்டம் அதைவிரட்டவேணும்

மாறுபடுஞ்சட்டம் வந்துவிட்டதாலே
சோறுதிங்கவேண்டாம் சொல்லுறதிவேண்டும்

ஆலைதொழிற்சாலை வேலைநிறுத்துங்கோ
ஆகாதசட்டம் அறிவுறுத்துங்கோ

என்றறிக்கைவிட்டார் எழுந்ததேதேசம்
அன்றைக்கிந்தச்சீமை அனைத்துமுபவாசம்

தேசமக்களெல்லாம் திரண்டுவரலானார்
யோசனையுமுண்டோ உத்தரவுகேட்டால்

சாத்தினார்கடையை சத்தியஞ்செய்தார்
வேத்தாளுசட்டம் வேண்டாமேயென்றார்

ஏப்பிரல்ஆறில் இந்தியாவெல்லாம்
இந்தவிதமாச்சு வந்துதேவம்பு

சர்க்காருகண்டான் தடியெடுத்துக்கொண்டான்
சாத்தியேவிட்டான் பார்த்தவிடமெல்லாம்

பம்பாயிடில்லி பட்டணம்எங்கும்
வம்பாயிப்போச்சு வாய்ப்பூட்டுமாச்சு

பாஞ்சாலநாட்டில் பாங்கானசத்ய
பாலரையும்கிச்லு பதியானபேரை

கைதுசெய்தார்கள் காணுதசீமை
கடத்திவிடலானார் கண்டாரேமக்கள்

கண்டாரேமக்கள் கொண்டாரேகோபம்
கண்ணாமணிபோனா லெண்ணிநடப்பாரோ ?

தலையானதலைவன் சத்யபாலெங்கே
தாயைவிட்டுப்புள்ளை தன்னைப்பிரிச்சாயே

கொண்டுவாவென்றே கூட்டமாக்கூடி
உண்டானபோலீஸ் உத்தியோகஸ்தன்

மாஜிஸ்திரேட்டை வழிமடக்கிக்கேட்டார்
மார்மேலேசுட்டான் வகைமோசமாச்சு

கேட்டசொல்லுக்கே மாட்டுதுதுப்பாக்கி
நாட்டாரைப்போட்டு வாட்டுதேகுண்டு

என்றுசொல்லிபஞ்சாப் பொன்றாகக்கூடி
எடுத்துச்சொல்லும்போது தொடுத்தானேபாணம்

## பஞ்சாப் படுகொலை

தர்மபுத்திரனாண்ட சாந்தமுள்ளபூமி
சத்தியந்தழைத்ததொரு சனங்களுள்ளபூமி

பஞ்சவர்கள்பத்தினியாம் பாஞ்சாலிபேரால்
பாரதத்திலேசிறந்த பஞ்சாப்புநாட்டில்

ஏப்பிரல்பதிமூணில் இந்தியர்களெல்லாம்
ஏராளமாய்க்கூடி எடுத்துச்சொல்லவந்தார்

நாலுபக்கம்மதிலுடைய ஜாலியன் வாலாபாக்
நடுவினிலேதோட்டமது நல்லசனக்கூட்டம்

எள்ளுப்போடயெடமிருக்கா தேகச்சனக்கூட்டம்
கிள்ளுபோத்துவிட்டதுபோல் கிளுகிளுத்தகூட்டம்

அஞ்சுலச்சஞ்சனமிருக்கும் கொஞ்சமல்ல கூட்டம்
அத்தினைக்கும்போகவர மத்தியிலோர்வாசல்

சுத்தியெல்லாந்திருமதிலாம் மத்தியிலேதோட்டம்
ஒத்தயடிப்பாதையைப்போ லுள்ளதொருகேட்டு

போட்டதொருசட்டமது பொல்லாததென்றே
கூட்டமதுகூடித்தங்கள் குறையெடுத்துப்பேச

கடகட, கடகட, கடகட, வென்றே காருகள் வந்ததுவாம்
படபட, படபட, படபட, வென்றே பளுத்தாக்கேட்டதுவாம்

வாசலையடைச்சு வண்டியைநிறுத்தி வந்தேநின்னானாம்
மண்டைபெருத்த டயருப்பாவி டயமுஞ்சொன்னானாம்

ஒருநிமிசத்திலெ கூட்டங்கலேஞ்சு ஓடிப்போகவேணும்
ஓடாவிட்டால் சுட்டுப்போடுவம் உசார் உசார்தேகோ

மனசு துடிச்சு கூட்டமுச்சூடும் மருகியோடப்பார்த்தா
வாசப்படியை அடச்சுநிக்கிது வண்டியில்துப்பாக்கி

ஆகாசத்திலே தாண்டிப்பறக்க அண்ணுந்தேபாத்தா
அங்கேபறக்குது துப்பாக்கிக்குண்டு அனியாயம்பாரும்

திக்குத்திசையும் புரியாமத்தான் திகைக்குஞ்சனம்மேலே
டிடும்டிடும்எனக் குண்டுகள்போட்டுத் தீத்துக்கட்டிவிட்டான்

சும்மாகூடி சுதந்திரப்பாட்டு பாடியகூட்டம்மேல்
சுட்டானையா துப்பாக்கியாலே சோல்சர்பட்டாளம்

பராக்குபாத்து பேசிக்கிட்டிருந்த பாரிக்கூட்டம்மேல்
படார்படாரெனச் சுட்டானையா பட்டாளத்தானும்

கூகூவெனவே கத்துதுஐயா குஞ்சுகுட்டியெல்லாம்
குண்டுகள்போட்டுச் சுட்டானையா கொடுமைசெஞ்சுப்பிட்டான்

ஆஆவெனவே அலறுது அய்யா அங்கிருந்தகூட்டம்
ஆசைதீரவே சுட்டானையா அவனுக்கென்னவாட்டம்

ஜெனரல்டயராம் சீமைத்துரையென் தேசமக்கள்தனையே
சித்திரவதையே செஞ்சுப்புட்டாண்டா தேசமக்கள் தனையே

ஆயிரம்பேரைக் குஞ்சுகுளந்தையை அலறக்கொன்னுபோட்டான்
ஆணைப்பெண்ணை கெளவங்கெளவியை அலறக்கொன்னுபோட்டான்

தோட்டத்துமண்மேல் செத்துவிளுந்தவர் தொகைசொல்லமுடியாது
ஒட்டம்பிடிச்சுச் செத்தவரெல்லாம் ஒத்தைக்காலில்நிற்க

சப்பைபுளந்து மூளைநொறுங்கி தத்துதுமுண்டமெல்லாம்
தத்தித்தத்தித் தாயாம்பூமியை சுத்துதுமுண்டமெல்லாம்

செவுத்துமேலே தொத்தியமனுசன் சிவம்போய்த்தொங்க
சிந்துதுரத்தம் திருமதில்மேலே தீப்புடிச்சாப்போலே

செம்பரத்தம்பூ பூத்தாப்போலே செடியெங்கும்ரத்தமுடா
தெளிச்சரெத்தம் செந்தூரம்போல் செம்மண்ணுச்சுதடா

மூலைக்குமூலை கால்கையொடிஞ்சே முணகுதுபேர்பாதி
ஆலைக்கரும்புபோல் அறைச்சுப்போட்டான் அந்தக்கவ்வோதி

இந்தியன்முஸ்லீம் சிக்கியன்ரெத்த மெல்லாமொன்ருச்சு
சிந்தியரத்தம் தேசத்தாரின் சிந்தைக்கனலாச்சு

இந்தச்சேதியைக் காதிலேகேட்டா னெங்கள்மகாத்மாஜீ
ரத்தம்போலே கலங்கிடுதய்யா ரெண்டுகண்ணுந்தானே

தேசத்துமக்கள் செத்ததுகண்டு சிந்தைகலங்கிச்சாம்
ஜெனரல்டயரின் கொடுமையைக்கண்டு சிந்தைகலங்கிச்சாம்

பஞ்சாப் படுகொலைச் சேதியைப்பத்தி பதறியெழுதிப்போட்டார்
பாருவெள்ளையா கிறுக்குத்தனத்தை பாருபாருஎன்றார்

கெவர்மெண்டுக்காரன் கிறுக்குத்தனமாய் கேடுசெஞ்சுப்பிட்டான்
கேளுவிமுறையும் இல்லையோஐயா கேடுகாலந்தானோ

பதிலுத்தாரம் கொடுக்கவும்வேணும் பாவிப்பயல்டயரை
பாராளுபவர் கூப்பிட்டுக்கேட்டு பனிஷ்மெண்டுசெய்யும்

என்றேயெழுதி பதிலுக்காக இருந்துகாத்துப்பாத்தார்
இருண்டகெணத்துலே கல்லைப்போட்டா லென்னதெரிஞ்சிடுமோ ?

## அமிருதசரஸ் காங்கிரஸ்

*பாஞ்சாலத்தில் விளுந்தகுண்டு
பாரதமுச்சூடும் பத்துதடா
பஞ்சைபரதேசி பணக்காரன்
பாலங்கெளவன் யாவருமே

ரெத்தவெறிகொண்டு ஏந்திரிச்சார்
ரெண்டிலொண்ணுசெய்ய வேணுமென்றார்
சித்தந்துடிக்குது வெள்ளையனை
சீக்கிரமேபளி வாங்குதற்கே

சிங்கம்கெளம்பி எழுந்ததுபோல்
தேசம்கிளம்பி நடந்துதடா
சேம்பலும்வீம்பும் தொலஞ்சுதுடா
சேந்துக்கிட்டாண்டா தேசமெல்லாம்

அமிருதசரசுக் காங்கிரசில்
ஆத்திரந்தலை தூக்குதடா
ஆயிரக்கணக்கில் சேந்துக்கிட்டான்
ஆச்சிப்பூச்சியை வாலறுக்க

சிரத்தானந்தச் சன்னாசி
தேசத்தலைவனாகிவிட்டான்
சீரிழந்தவரைத் தான்காக்க
ஆரியக்கூட்டம் கண்டவனும்

தண்டுகமண்டலங் காசாயம்
தரிச்சிருந்தவனோடிவந்தான்
குண்டுக்கொலைகளைக் கேட்டுரத்தம்
கொதிச்சுஓடி வந்துவிட்டான்

பண்டிதமோதி லால்நேரு
பங்காக்காத்து வாங்கினவன்
பணத்தில்படுத்துப் புரண்டிருந்த
பாரதநாட்டுச் செல்லமகன்

கோடிக்கணக்கில் பணஞ்சேத்துக்
கொடுத்துக்கொடுத்துப் பளகியவன்
நாடியஏழைகள் யாவரையும்
நல்லபணக்கார னாக்கியவன்

சீமைச்சலவைத் துணிகட்டுவான்
சிலுக்குப்பட்டிலே கைதொடைப்பான்
பூமிக்குப்பெரிய சோக்காளி
புள்ளைகுட்டிரொம்பப் பெத்தவனும்

சிங்கம்ஜவகரைப் பெத்தெடுத்து
தேசத்துக்காக வளத்துவிட்ட
சீமான்நேரு இதைக்கேட்டு
சிந்தைதுடிச்சோடி வந்தானும்

காசியில்இந்துக் கலாசாலை
கட்டியேவைத்தவர் மாளவியா
தேசீயப்பள்ளிக் கூடமது
செய்துகொடுத்த பெருங்கிளவன்

பிச்சையெடுத்துப் பணம்சேத்து
பிள்ளைபடிக்கவே பள்ளிகட்டி
லட்சமும்கோடியு மிந்நாட்டில்
லட்சியக்கல்வியைக் கத்துக்கவே

செய்தபெருந்தலை யானவனும்
தெய்வந்தனக்குப் பயந்தவனும்
சீலம்மிகுந்தவன் வாழ்க்கையிலே
செபதபங்களும் செய்திடுவான்

பூசைபுனக்காரம் பண்ணிப்பறப்
புள்ளைக்குப்படிப்புப் போதிப்பானும்
ஈசன் படைப்பில் அவனவனும்
இட்டதொழில் செய்யவேணு மென்பான்

பாஞ்சாலத்துக் கொலைகேட்டு
பதறிஎழுந்து வந்தானும்
சாஞ்சேவருது நாடுஎல்லாம்
சனங்கள்தும்பத்தைக் கண்டதனால்

சித்தரஞ்சன தாசருமே
தேசபந்துப்பட்டம் பெத்தவராம்
உத்தமனுகிய வங்காளி
ஊருக்குப்பெரிய வக்கீலாம்

கோடிப்பணம்பீசு பெத்திடுவான்
கோணிக்கதரை உடுத்திடுவான்
தேடிக்கொண்டாடும் திரவியத்தை
தேசத்துமக்களுக் கீந்திடுவான்

சட்டசபைக்குள்ளே பூந்துவிட்டால்
சரமழைஎனப் பேசிடுவான்
திட்டமெதுவும் கொடுத்துவிட்டால்
செஞ்சுமுடிக்காமெக் கண்ணுறங்கான்

இந்தப்படுகொலை கேட்டதுமே
எளும்பிக்குதிச்சான் புலிபோலே
நொந்தபுண்ணுக்குள்ளே வேலெடுத்து
நுழையவிட்டது போலானுன்

பம்பாய்பட்டண வக்கீலு
பாரதநாட்டுக்குப் பங்காளி
வம்பாய்வளக்குப் பண்ணுவதில்
வக்கணைக்காரச் சின்னுவும்

சாலியன்வாலாத் தோட்டக்கொலை
சங்கதிகேட்ட மாத்திரத்தில்
ஆலிலைகாத்தில் பறந்தாப்போல்
அலறியடிச்சே வந்தாராம்

பீகம்தாயார் பெத்தெடுத்த
பிள்ளைகரெண்டு முத்துமணி
தேகம்பெரிசு மலைபோலே
சிந்தைகருணைக் கடல்போலே

அண்ணனும்தம்பியும் தேசத்துக்கே
அன்னைஎடுத்துக் கொடுத்துவிட்டான்
கண்ணனும்பல ராமனைப்போல்
கருணைகோப முள்ளவராம்

அலிசகோதர ரென்றுசொன்னுல்
அழுதபுள்ளைக வாய்மூடும்
கிலிபிடிச்சந்த வெள்ளையனும்
கிடுகிடுத்து நடுங்கிடுவான்

அண்ணனுந்தம்பியும் கேட்டுப்பிட்டு
ஆடிவிழுந்துமே போனார்கள்
விண்ணென அம்பு தெரிச்சதுபோல்
விரைந்துஓடி வந்தார்கள்

வங்கத்துக்குயிலி சரோஜினியும்
வாக்கில் சரஸ்வதியானவளும்
சங்கடக்கொலையைக் கேட்டுப்பிட்டு
தாய்போ லோடிவந்தாளாம்

அந்தநாளைமுதல் காங்கிரசை
ஆட்டியும்ஊட்டி வளர்த்தெடுத்த
இந்துவின்எடிட்டர் கஸ்தூரி
ரங்கய்யங்காரும் வந்தாராம்

இந்தப்படுகொலைக் காரணத்தால்
இந்துமுஸ்லீம்ரெண்டு மொண்ணாச்சு
சிந்தியரத்தக் களறியிலே
தேசத்துப்பக்தி பயிராச்சு

எல்லாரும்ஒன்று கூடிவிட்டார்
இந்தியச்சேமத்தை நாடிவிட்டார்
வல்லான்வகுத்த வாய்க்காலில்
வயலுக்குப்பாச்சவே வந்துவிட்டார்

இந்தச்சமயத்தில் காந்திமகான்
எங்கள் திலகரின் தோள்தழுவி
வந்தவிமரிசை கண்டெழுந்தே
வணக்கம்செலுத்தி நின்றார்கள்

சிங்கம்திலகரின் தேகத்திலே
செயிலுக்கம்பி உறுத்தினதால்
அங்கம்கறுத்து உருமாறி
ஆனவயசையும் சொல்லக்கண்டார்

காந்திமகானும் ஒருசேதி
கருத்தில்எண்ணியே சொல்லுவராம்
சாந்தமகானும் ஒருசேதி
சனத்தைப்பார்த்துச் சொல்லுவராம்

ஒட்வியர்தன்னை விலக்கோணும்
உத்தவழக்கும் தொடுக்கோணும்
நாட்டைக்கொலைசெய்த பாவிகளை
நாயசபையில் நிறுத்தோணும்

சுல்தானனும் துருக்கியையே
துண்டுகள் போட்டு வெட்டுகிறார்
பிரித்தானியரும் பரங்கிகளும்
பிசகு செய்வதைப் பாத்திடுங்கோ

எங்கள் முசல்மான் நாடுஅது
இஸ்லாம்பொறந்த நாடுஅது
அங்கிவர் செய்யும் கொடுமைகளை
அடக்கிப்போட வில்லையென்றால்

கிலாபத்துக் கிளர்ச்சி செய்திடுவோம்
கேட்டிடுவோ மொன்றுதான்கூடி
ஆபத்துக்காலத்தில் இந்துமுஸ்லீம்
அண்ணனும் தம்பியு மல்லவோநாம்

என்றொருதீர்மானம் செய்தார்கள்
ஏனென்றுகேக்கலை ராசாங்கம்
அன்றுமுதல்ஒரு ஆண்டுமட்டும்
அய்யனும்காத்துப் பாத்திருந்தார்

மாசிலாத ராஜகோபால
மன்னாதிமன்ன னுடன்பேசி
தேசத்து மானத்தைக் காக்கவொரு
திட்டம் வகுத்தார் காந்திமகான்

ஒத்துழையாமை யதுஒன்றே
உத்தமமார்க்க மென்றறிந்தே
சத்தியப்பாதையில் போரிடுவோம்
சயங்கிடைக்கு மிதிலென்றே

நேருகுடும்பத்தைக் கண்களென்பார்
நீண்டகரங்கள் படேலென்பார்
யாருமறியாத காந்தியுள்ளம்
அய்யன்ராஜாஜீ யென்பார்

காந்திகருத்தை நினைப்பதிலும்
காரியஞ்செய்து முடிப்பதிலும்
சாந்தம்உரைத்து வருவதிலும்
சக்கரவர்த்தியே ராஜாஜி

ஒத்துழையாமையைச் செய்வதற்கே
ஊரைத்திரட்டி வரலானார்
மத்தையோர் காங்கிரஸ் கூட்டத்திலே
மகாத்மாவும் துவங்கிவிட்டார்

ஒத்துழையாமைக்குச் சாதகமாய்
ஓட்டுக்கெடச்சது லக்னோவில்
ஒண்ணுக்கு ரெண்டுமே சாதகமாய்
ஓட்டுக்கெடச்சுது லக்னோவில்

## 1921 ஒத்துழையாமை

*கேட்டகேள்விக்கு பதிலுத்தாரங் கிடையாதுஅய்யா
நாட்டைஆளுவோர் நாயந்தவறி நடப்பதைநீர்பாரும்

கூட்டங்கூட்டமாய் சனங்கள்திரண்டு கொடியின்கீழ்வாரும்
கோடிரூபாயை திலகர்பேரால் கொண்டுவந்துதாரும்

உதவாக்கரையாம் சர்க்காரின்கீ ழுத்தியோகம்செய்யும்
உள்ளூருச்சன மெல்லாமுடனே ஓடிவந்துசேரும்

பட்டம்பதவியை விட்டுப்போடுங்கோ பள்ளிக்கூடம்வாண்டாம்
சட்டசபைக்குள் போகவும்வேண்டாம் சலுகைதேடவாண்டாம்

சர்க்கார்வேலையை விட்டுப்போட்டு சர்க்காச்சுத்துங்கோ
தாசில்வேலையை விட்டுப்போட்டுதறியைநெய்யுங்கோ

மந்திரிவேலையை விட்டுப்போட்டு மதுவைவிலக்குங்கோ
தந்திரிவேலையை விட்டுப்போட்டு தாயைப்பாருங்கோ

கோட்டைநாடிப் போகவும்வேண்டாம் ஓடெடுக்கவேண்டாம்
கூட்ட்ம்போட்டு பஞ்சாயத்திலே கூடிப்பேசுங்கோ

வெள்ளைக்காரஞ் சாமான்எதுவும் விக்கவாங்கவேண்டாம்
வேட்டிதலைப்பா கட்டிக்கிட்டு கோட்டுக்குபோவேண்டாம்

சத்தியமாகப் பேசிடவேண்டும் சண்டைக்களறியிலே
கத்தியைக்குண்டை போட்டுவிடாதீர் காரியம்கெட்டுவிடும்

உத்தமமாகிய ஒத்துழையாமை ஒருநாள்செய்தாலும்
ஒருவருசத்தில் சுயராச்சியம்வரும் உண்மைஇதுபாரும்

தேசமுச்சூடும் திரண்டுவந்தது சேவைசெய்வதற்கே
சின்னக்குழந்தைகள் கூடவேவந்தது சேவைசெய்வதற்கே

பள்ளிக்கூடம் விட்டுவிட்டார்கள் பாலர்எல்லோரும்
பட்டாமணியம் கர்ணம்கணக்கன் பாதிகிளம்பிவிட்டார்

வாயமட்டல்செய்யும் வக்கீல்மாரும் வந்துபுகுந்தாராம்
நாயம்பேசிடும் வக்கீல்மாரும் நாட்டைக்காக்கவந்தார்

ஒண்ணரைக்கோடி பணமுந்திரண்டது ஒருசொல்லுக்காக
ஒத்துழையாமையில் கூடிமகிழ்ந்தது உள்ளசனமெல்லாம்

ஒண்ணுரண்டல்ல லெக்ஷக்கணக்கில் ஊருதிரண்டுவர
ஒத்துழையாமையில் கூட்டங்கூட்டமா யோடிவந்துசேர

அடிதடிலாத்தி அடக்குமுறைகளும் ஆரம்பிச்சுதப்பா
ஆயிரக்கணக்கில் செயிலிலேபோட்டான் அந்தநாளில்தானே

நேருகுடும்பம் செயிலுக்குப்போச்சு நேசமாகத்தானே
நேருவுமக்களும் மனைவியும்மருமகள் நெருங்கியஉறவெல்லாம்

சி.ஆர்.தாசை ராஜாஜியை செயிலிலேபோட்டுட்டான்
தேசத்தாரை கூட்டங்கூட்டமாய் செயிலிலேபோட்டுட்டான்

ஐக்கியமாகாணக் காங்கிரஸ்கமிட்டி யதுநடக்கும்போது
ஐம்பத்தைந்து பேரைத்தூக்கி அடைச்சுப்போட்டாங்கள்

ஆசாதவர்களை செயிலுக்குள்ளே அடைச்சுப்போட்டுட்டான்
ஆளப்பொறந்த சிங்கம்ஜவகரை அடைச்சுப்போட்டுட்டான்

காந்திமகானே காரியமெல்லாம் கருதிப்பாத்துவந்தார்
கண்ணிலேயெண்ணெயை விட்டுக்கிட்டே கவனிச்சுவரலானார்

பர்தோலியிலே சட்டமறுப்புப் பாரதப்போரிடவே
படேல்பீமனும் காந்தியும்யோசனை பண்ணும்வேளையிலே

ஒத்துழையாமைக் கப்பல்தனிலே ஓட்டைவிளுந்துதடா
உத்தமமாகிய சத்தியப்போரில் ஓட்டைவிளுந்துதடா

சத்தியந்தவறியே நடந்தார்சிலபேர் சௌரிசௌராதனிலே
தாணாக்காரனைக் கொன்றுவிட்டார்கள் சத்தியப்போரினிலே

இமிசைபுகுந்தது சத்தியப்போரில் இக்கட்டாமென்றே
என்னையன்காந்தி ஒத்துழையாமை யியக்கம்நிறுத்திட்டார்

ஒத்துழையாமை இயக்கம்நிறுத்தி ஒய்வுகள்தேடையிலே
உத்தமன்காந்தியை கைதுசெய்தார்கள் ஒருநாள்ராத்திரியில்

## காந்திமகான் கேஸ்

காந்தியைக்கைதியும் பண்ணிப்புட்டோம்
காவலுக்குள்ளாற வச்சுப்புட்டோம்
வழக்கையெடுத்துச் சொல்லியல்லோ
மாயச்சிறையிலே போடவேணும்

எப்படிச்சொல்லி எடுப்பதடா
இக்கட்டு வந்தாத் தடுக்கணுமே
என்றுதவிச்சுத் துடிச்சதய்யா
என்னென்னசெஞ்சது ராசாங்கம்

கூட்டமுங்கூடி வந்திடுமோ
கோட்டை மதிலை இடிச்சிடுமோ
காட்டுக்குஉள்ளரக் கூட்டிவந்தா
காடும்பட்டண மாயிடுமோ

கோட்டையைச்சுத்தியும் போலீசு
கோரட்டைச்சுத்தியும் போலீசு
சர்க்காராபீசு எங்கேயும்
சாத்திக்கிடக்குது பந்தாச்சு

துருப்புப்பாரா ஊரெங்குமாம்
துப்பாக்கிக்கட்டை யூரெங்குமாம்
கருப்புச் சிப்பாயை நம்பாமே
காவலுக்கெங்கேயும் வெள்ளையனும்

கோரட்டுக்குள்ளறக் கூட்டமையா
கோடிக்கணக்கிலே கூட்டமையா
சாரட்டுக்கீரட்டைக் கண்டுப்பிட்டா
சத்தமும்போடுது ஜேயென்றுதான்

கச்சேரிக்குள்ளர காந்திவந்தார்
கைகட்டிநிக்கிது கூட்டமெல்லாம்
கோரட்டுக்குள்ளரக் கூட்டிவந்தார்
கும்பிட்டுநிக்குது கூட்டமெல்லாம்

வந்தமகானையே கண்டுப்பிட்டு
வணங்கிநிக்கிது கூட்டமெல்லாம்
நொந்தமனிசனின் கச்சிசொல்ல
நோம்பெடுத்தவன் வந்ததுமே

சட்டம்படிச்சவன் ஏந்திரிச்சான்
சர்ச்சிபடிவிட் டெளுந்திரிச்சான்
இட்டம்போலே செய்யும்போலீசு
இனிசுப்பெட்டரும் ஏந்திரிச்சான்

காந்திமகானும் கூட்டத்தையே
கண்டொருகும்பிடு போட்டிடவே
ஏந்தலேஎங்களைக் காப்பவனே
என்று அழுதது கூட்டமெல்லாம்

## விசாரணை

கொல்லுக்கொலைகளைச் செய்தவங்க
கொள்ளையடிச்சுப் பொளைச்சவங்க
தில்லுமுல்லுத்தனம் காலமெல்லாம்
திருட்டுப்புரட்டுச் செஞ்சேறும்

குத்தவாளிக்கூண்டில் காந்திமகான்
குதிச்சுஏறி நின்னதுமே
சித்தந்துடிச்சுச் சனங்களெல்லாம்
சேவடிதன்னில் விளுந்ததுவாம்

சர்ச்சிதொரைமகன் புரும்பீல்டு
சாந்தமகானையே பாத்துப்பிட்டு
சாதிமதந்தொழில் சொல்லுமய்யா
சட்டப்படிக்கதைக் கேக்குறேன்யான்

காந்திமகானும் சொன்னதென்ன ?
கருணைஉருவஞ் சொன்னதென்ன ?
சாந்தமகானும் சொன்னதென்ன ?
சத்தியரூபஞ் சொன்னதென்ன ?

செட்டிப்பிள்ளையென்றுஞ் சொல்லவில்லை
சிவமதமுன்னுஞ் சொல்லவில்லை
வட்டித்தொழிலென்றுஞ் சொல்லவில்லை
வைஷ்ணவமின்னுஞ் சொல்லவில்லை

கொட்டைகள் நூத்துப் பிளைக்கிறவன்
கோடித்துணிகளை நெய்கிறவன்
சட்டைகள்வேட்டிகள் போட்டுவிட்டே
சனங்கள்மானத்தைக் காக்கிறவன்

பஞ்சைகளானஇந் நாட்டுமக்கள்
நெஞ்சிலிருந்திழை நூக்கிறவன்
தொஞ்சமனசில் துணைகொடுத்துத்
துன்பங்கள்தீர்க்கவே பார்க்கிறவன்

காத்தடிச்சபக்கந் தாம்பறக்கும்
கருப்புமனிசங் கூட்டத்துக்கே
சூத்திரமொன்றினைச் சொல்லிவிட்டு
சுகப்படுத்தவே பாக்கிறவன்

இழையிழையாகவே நூத்தெடுத்து
எங்குமேமாத்து விரிப்பதுபோல்
மழைமழையாகத் தனிச்சுவரும்
மக்களைச்சேத்துக் கடலாக்கி

வெள்ளையங்காலடிக் கீழிருந்து
வெக்கத்தைவிட்டுப் பிழைக்காமல்
உள்ளபடிமத்த நாட்டார்போல்
ஊக்கத்துடன்வாழச் சொல்லுறவன்

என்றெங்கள் காந்தியெடுத்துச்சொல்ல
இங்கிலுசுக்கார சர்ச்சியுமே
நன்றிதுகாந்தியே நன்றிதுடா
நானொருகேளுவி கேட்டுக்கிறேன்

சட்டப்படிக்குள்ள சர்க்காரை
கெட்டதெனநீயும் சொன்னதுண்டா
இட்டப்படிக்கு நடந்திடுங்கோ
இந்தியரே என்றுஞ் சொன்னதுண்டா ?

ஆமாமய்யா சர்ச்சிகளே
அந்தப்படிக்குநான் சொன்னதுண்டு
அன்னியஞ்சட்டத்தை மீறிவிட
அதுக்கும்மேலே சொன்னதுண்டு

## வாக்குமூலம்

ஆட்சிக்கொடுமைக்குச் சாதகமாய்
அத்தனைசட்டமும் இங்கிருக்கு
ஆளுக்கொருநீதி சொல்லுதென்றால்
அந்தச்சட்டமொரு சட்டமுண்டோ ?

தோலுக்கொருநாயம் சொல்லுகிற
துப்புக்கெட்டசட்டம் அத்தினையும்
வாலைச்சுருட்டிக்கிட்டோடவழி
வகுத்துவிட்டதில் குத்தமுண்டோ ?

நான்பட்டபாடுகள் சொல்லிவந்தால்
நாயம்நடுங்கும், நடுநடுங்கும்
மீன்பட்டபாடுகள் கேப்பதுக்கே
மீனைப்பிடிப்பவர்க் கெண்ணமுண்டோ ? 670

ஆளுக்கொருநீதி யென்பதைநான்
ஆப்பிரிக்காவிலே கண்டறிஞ்சேன்
நாளுக்கொருபுதுச் சட்டமிட்டு
நசுக்குகின்றதை நானறிஞ்சேன்

வேறொருநாட்டு மக்களுக்கே
வெள்ளையஞ்சட்டம் வகுக்கிறதாம்
யாரொருவன் அதை மீறிப்பிட்டால்
அடிமையென்று நசுக்குறதாம்

வீட்டுக்குடையவன் திண்டாட
வேறொருத்தன்சட்டம் செய்யுறதாம்
நாட்டுக்குடையவன் திண்டாட
நாடிப்பிடிச்சவன் செய்யுறதாம்

காட்டுமுயல்களைக் கொன்னுதிங்க
கடுவாய்சட்டம் விதிச்சதுபோல்
நாட்டுமனிசனுக் குள்ளொருவர்
நாசகரச்சட்டம் செய்கிறதோ ?

சட்டம்பிசகெனச் சொல்லிவிட்டால்
சர்க்காரைப்பத்திச் சொல்லணுமோ ?
தாயைப்பிசகெனச் சொல்லிவிட்டால்
தன்னுடமக்களைக் கேக்கணுமோ ?

நாயம்நடுவு தெரிஞ்சவரே
நானொருசங்கதி சொல்லுகிறேன்
மாயம்மருந்தொண்ணு மில்லையையா
வந்தவினைகளைச் சொல்லுகிறேன்

சட்டமொண்ணுகொண்டு வந்தார்கள்
சந்தேகம்அதன் உசுர்நாடி
இட்டப்படிக்கே போலீசு
என்னவேண்ணாலும் செஞ்சிடலாம்

இந்தரவுலட்டுச் சட்டமது
எங்களுக்குபோடக் கூடாது
என்றேகேட்டது பஞ்சாபு
எத்தனைகொடுமை செஞ்சுப்பிட்டார்

பஞ்சாப்பில்செய்த படுகொலையைப்
படிச்சுங்கேட்டும் பாத்திருப்பீர்
பஞ்சாப்பறக்கச் செய்துவிட்டான்
பாவிப்பயல்டயர் ஓட்வியரும்

நெஞ்சுதுடிக்குது சொல்லுதற்கே
நிட்டூரங்களோ கண்கலங்க
குஞ்சுகுழந்தை உசுரையெல்லாம்
குடிச்சுவிட்டது குண்டுமழை

மண்ணுண்ணிப்பூச்சியைப் போலாக
மக்களையேமண்டி போடச்சொல்லி
மாரா லூர்ந்து நடக்கச்சொன்னான்
மாட்டுக்குங்கேவல மாக்கிவிட்டான்

வெள்ளைக்காரந்தலை கண்டுவிட்டால்
வேறொருபக்கம் திரும்பச்சொன்னான்
கொள்ளைக்காரங்களைப் போலாக
குனிஞ்சுநடந்து போகச்சொன்னான்

கொள்ளைக்குவந்தவன் நாங்களல்ல
குடியிருப்பவன் நாங்களைய்யா
கள்ளப்பயல்களைப் போலஎம்மைக்
கட்டிஅடிச்சதைக் கேட்டாயோ ?

ரெத்தப்பளிசெய்த ஓட்வியரை
ரெக்கையைவெட்டி வெரட்டாமல்
குத்தங்கள்சாட்டவு மில்லாமல்
கொடுத்தபரிசு கேட்டாயோ ?

இரத்தினமிட்டதோர் கத்திசெய்தே
எங்குமேவைர மிழைச்சுவிட்டு
இந்தப்படுகொலை செய்ததற்கே
இங்கிலிஷ்காரன் பரிசளிச்சான்

ஏண்டாஏனென்று கேக்கவில்லை
இந்தியன்கண்ணைத் தொடைக்கவில்லை
இன்றுமவனுக்குச் சம்பளமும்
எங்கபணத்தில் நடக்குதய்யா

பிள்ளைகுட்டிகளைக் கொன்னதுக்கு
பிஞ்சின்கொடுக்குது ராசாங்கம்
வெள்ளையனுக்குள்ள சட்டமென்றால்
வேறொருசாக்கியும் வேண்டுவதோ ?

யாருக்குச்சட்ட மிருக்குதையா ?
அன்னியஞ்சட்டத்தைப் பாத்தியளோ ?
ஊருக்குச்சட்டங்க ளில்லையடா
உங்களுக்குச்சட்ட முண்டுமிங்கே

எங்களின்ரத்தம் கொதியாதோ
இந்தியனுங்கள் மிதியடியோ ?
தங்குமடந்தந்த பாவத்துக்கே
தண்டனையித்தனை போதாதோ ?

இந்தக்கொடுமைகள் செய்வதற்கே
எங்கள்மனிசனுங் கூட்டுறவாய்
இருந்துபிழைக்கவே கூடாது
என்றேசொன்னதில் குத்தமுண்டோ

தேசத்துமண்ணில் பிறந்துவிட்டேன்
செய்யுங்கடமையைச் செய்துவிட்டேன்
பாரதநாட்டில் பிறந்துவிட்டேன்
பட்டினிக்கஷ்டமும் பார்த்துவிட்டேன்

கூடப்பிறந்தவன் திண்டாட
கொக்கரிக்கிற மக்களுண்டோ ?
தேசத்துமக்களும் திண்டாட
தீவட்டியாகவோ நான்பிறந்தேன் ?

தாயுந்தகப்பனுந் திண்டாட
சட்டையும் வேட்டியும் கட்டுறதோ ?
அண்ணனும்தம்பியும் திண்டாட
அல்வாத்தின்று செரிக்கிறதோ ?

பாடுபடுபவன் திண்டாட
பாலுங்குடிச்சுப் பெருக்கிறதோ ?
உழுதுவெதச்சவன் திண்டாட
ஊருக்குவந்தவ னுளுறதோ ?

தட்டிஅடிச்சவன் திண்டாட
சாப்புக் கடைக்கார னுளுறதோ ?
ஊரில்பிறந்தவன் திண்டாட
ஒண்டவேவந்தவ னுளுறதோ ?

கோடிக்கணக்கிலே நாங்களுண்டு
கோழைகளாகிப் போனாலும்
மூடிக்கிடக்கிற பாம்புயென்றால்
முட்டுத்தடியாலே தட்டுறதோ ?

சாமிக்குப்பொதுவில் நான்நடந்தேன்
சட்டப்படிநீங்க செஞ்சிடுங்கோ
பூமிக்குநல்லது நாம்புரிஞ்சேன்
புத்திப்படிநீங்க செஞ்சிடுங்கோ

சத்தியந்தன்னை மதிப்பீரோ ?
சட்டத்தைத்தானே மதிப்பீரோ ?
சத்தியந்தன்னை மதிச்சுவிட்டால்
சர்ச்சியேவேலையை விட்டிடுங்கோ

ஜட்ஜ்மெண்டு

ஆறுவருஷம் தண்டனை

சர்ச்சிமயங்கித் திகைச்சிடுருன்
சட்டம்புடிச்சி இளுக்குதுடா
சர்ச்சிமனசு துடிக்குதுடா
சம்பளக்காசு இளுக்குதுடா

"அய்யாகாந்தி மகாத்மாவே
அடியேன்விண்ணப்பம் கேட்டிடுவீர்
மெய்யாயும்மை மதிச்சிடுறேன்
வித்தேசங்கள் நினைக்காதீர்

சட்டந் தவறெனச் சொன்னலே யந்தச்
சங்கதி யென்னுள்ளடக்கமல்ல
சட்டத்துக்குட்பட்ட சர்ச்சியும் நான்
சாத்தும் மொழிகளைக் கேட்டிடுவீர்

சர்க்காரை மதியாதிருக்க
சனத்தைத் தூண்டிய குத்தமும்மேல்
சாட்டுகிறேு மிதற்குள்ளதொரு
தண்டனை தாங்கச் சம்மதமோ"

"சம்மதம் சம்மதம் சாமிகளே
சத்தியஞ் சம்மதஞ் சர்ச்சிகளே
சர்க்கார் நல்லது இல்லையென்றே
சனங்கள் தெரிஞ்சு கொண்டுவிட்டால்

எண்ணின எண்ணம் நடந்திடிச்சு
இந்தியநாடு சிறந்திடிச்சு
புண்ணய பூமியுமாயிடுச்சு என்னைப்
பூட்டின பூட்டுந் தொறந்துவிடும்"

"உம்முட குத்தம் மிகப்பெரிசு
ஒத்துழையாமையைச் செய்துவிட்டீர்
நம்முட ராச்சிய கவுரவத்தை
நாசகரஞ் செய்யவந்துவிட்டீர்

குத்தம்கொடியது ஆனாலும்
சித்தம் நினைப்பதைச் செய்திருக்கீர்
புத்தம்புதிய கருத்துக்களால்
பூமியை வைகுண்டமாக்கிப்பிட்டீர்

ஞாலம்புகழும் திலகருடன்
நாமும் உம்மைச் சரியாக்கி
காலமுள்ளமட்டும் பேர்சொல்லவே
காராக்ருகத்தில் போடுகிறோம்

ஆறுவருசம் செயிலுச் சொன்னோம்
அத்தனைக் கத்தனை குத்தமுண்டு
நீருமதற்குள் விடுதலையாக
நேரிடில் நமக்குச் சந்தோசம்

என்று கொடுத்தார் சர்ச்சிமெண்டு
இதையென்றும் மறக்க முடியாது
இந்த வழக்கையும் தீருப்பையும்
இந்திய தேசம் மறந்திடுமோ

காந்தியைக் கைதியும் செய்துவிட்டார்
கடுஞ் சிறையிலேவைத்துவிட்டார்
காருண்ய மூர்த்தியைக் கைதிபண்ணி
காராக்ருகத்தில் போட்டுவிட்டார்

ஆறுவருசம் செயிலுக்குள்ளே
அகிம்சாமூர்த்தியைத் தள்ளிவிட்டார்
ஆளப்பிறந்தவன் காந்திதன்னை
அண்டவேவந்தவன் தள்ளிப்பிட்டான்

கூ கூவென்று அழுததப்பா
கூடியிருந்த சனங்களெல்லாம்
ஏழைக்கு நல்லவன் காந்திதனை
எரவாடாவிலே பூட்டிப்பிட்டான்

ஒத்துழையாமையும் நின்னுடுச்சு
உத்தமன் காந்தி சிறை புகுந்தார்
சத்தியப் போரினில் பொய்புகுந்த
சங்கடத்தாலே சிறைபுகுந்தார்

## 1922 சுயராஜ்யக்கட்சி உதயம்

நாதன் சிறைக்குள் புகுந்துவிட்டார்
நாடுகெடந்து தவிக்குதையா
காந்தி சிறைக்குள் புகுந்துவிட்டார்
காங்கிரஸ்நின்னு தவிக்குதையா

சட்டமறுப்பை நடத்துவமா?
சட்டசபைக்குள்ளே போகலாமா?
திட்டமெதுவும் தெரியல்லையே
செய்யும்வழி யொண்ணுந்தோணலையே

என்றுதுடித்துத் தலைவரெல்லாம்
இந்தியநாடு முழுதலைந்தார்
என்னென்னஎண்ணுது மக்களென்று
எங்கும்கணக்கு எடுத்துவந்தார்

சட்டமறுப்புக்குப் பாதிப்பெயர்
சாதகமாக யிருந்துவந்தார்
சட்டையும்தொப்பியும் போட்டவுங்க
சட்டசபைப்பிர வேசமென்றார்

தாசர்தலைமையில் வங்காளம்
சட்டசபைக்குள்ளப் போயிருந்தால்
சட்டமறுப்புக்கு சம்மதையா
சமந்தநன்மை கிடைக்குமென்றே

சண்டையும்பூசலும் போட்டதுவாம்
சம்மதம் காங்க்ரசைக் கேட்டதுவாம்
பண்டிதமோதிலால் நேருவையும்
பக்கத்திலிழுத்துப் போட்டதுவாம்

தமிழ்நாட்டுத்தலை ராஜாஜீ
சட்டசபையை வெட்டிப்பேசி
சாதிக்கவொண்ணும் முடியாது
சட்டசபைக்குள்ளே போயிருந்தால்

காந்திமறுத்திட்ட சட்டசபை
காட்டிக்கொடுத்திட்ட சட்டசபை
பூந்துபுறப்பட்ட ஆளுகளை
பொம்மைகளாக்கிடும் சட்டசபை

ஏசலும்பூசலும் செய்திடலாம்
ஏதும்பலனுங் கிடைக்காது
வீசமரைக்காச் சுதந்திரமும்
விட்டுப்போடச்செய்யுஞ் சட்டசபை

மோதிலால்நேரு முரட்டடியாய்
முண்டிநிமிர்ந்தார் அங்குசெல்ல
முகம்மதலியுஞ் சட்டசபை
மோகினிப்பேயில் மயங்கிவிட்டார்

இந்தப்படிக்கிந்த தேசமெல்லாம்
இரண்டுபட்டுப் போய்த்திண்டாட
வந்ததுகயாவில் காங்கிரசு
வம்பும்வளக்கும் நடந்ததையா

சட்டசபைக்குள்ளே போவதற்கே
தாசொருதீர்மானங் கொண்டுவர
சங்காத்தங்கூடவே கூடாதுஎன்று
சக்கரவர்த்தியும் பேசிவிட

காங்கிரசுக்குள்ளே தானிருந்தால்
கைக்கொண்டதிட்டம் நடக்காது
மூங்கிலிலைபோலே கூட்டமிது
மூச்சுக்கொருபக்க மாடிவிடும்

கச்சிபுதிசு துவக்கிடுவோம்
காங்கிரஸ்காரரைச் சேர்த்திடுவோம்
லெச்சியம்நாட்டுச் சுதந்திரந்தான்
லெச்சைகெட்டசெய லொன்றுமில்லை

என்றேதாசும் துணிஞ்செழுந்தார்
ரெண்டுபட்டுப்போச்சு காங்கிரசு
அன்றேவந்து முளைச்சதய்யா
ஆனதொருசுய ராஜ்யக்கட்சி

## 1923 நாகபுரி தேசீயக்கொடி சத்தியாக்ரகம்

நாகபுரிக்கொடிப் போராட்டம்
நடந்தகதையைச் சொல்லுமுன்னே
நாட்டுநடப்பையும் சொல்லிடுவேன்
நல்லாக்கேளுங்க நாட்டாரே

மன்னுதிமன்னர் பாண்டியர்கள்
மச்சக்கொடியைப் பிடிச்சிருந்தார்
என்னுடும்புகழ் சோழமன்னர்
இட்டப்புலிக்கொடி வச்சிருந்தார்

தேசஞ்செழித்திட்ட சேரமன்னர்
தெங்குபனைக்கொடி வச்சிருந்தார்
தீரமராட்டியச் சிவ்வாஜி
சிங்கக்கொடியைப் பிடிச்சிருந்தார்

எல்லாக்கொடியு மித்ததிங்கே
இங்கிலீசுக்காரன் வந்ததுமே
குல்லாகில்லாப் போட்டுக்கிட்டே
கொடியையிறக்க விட்டுப்பிட்டார்

நட்டகொடிமரம் நிக்குதிங்கே
நம்மகொடிகள் பறக்குதில்லை
மொட்டைமரங்க ளிருக்குதிங்கே
முன்னைக்கொடிகள் பறக்குதில்லை

கொடிமரத்துமூலை யென்றுரைப்பார்
குப்பைகள்கொட்டிக் கிடக்குமங்கே
அடிபட்டுப்போனஇம் மக்களுக்கே
அப்பம்பாட்டங் கொடிதக்கவில்லை

நாட்டைஅடிமைப் படுத்திப்பிட்டான்
நம்மகொடியைப் பறிச்சுப்பிட்டான்
பாட்டனும்பூட்டனும் போட்டகொடி
பாவட்டாவெல்லாம் பறிபோச்சு

சின்னத்துருக்கிக்கு ஜண்டாவாம்
சீமைப்பிரிட்டிசு ஜண்டாவாம்
என்னத்திலும் குறையில்லாத
இந்தியநாட்டுக்கு இல்லைகொடி

இந்தக்கொடுமை சகிக்காமல்
இந்தியநேசனல் காங்கிரசில்
தந்தமணிக்கொடி மூணுவர்ணம்
தவழும்மணிக்கொடி தந்தாராம்

தாயின்மணிக்கொடி பாருமென்றே
தைவீகப்பாரதி பாடிவிட்டார்
வாயும்மணக்குது பாட்டினிலே
வந்தனஞ்செய்யுது கைவணங்கி

கங்கைநதிப்புறம் பச்சைவயல்
காவிரியாத்திலும் பச்சைவயல்
எங்கும்மணக்குது பச்சைமணம்
ஏழுமலைப்பெயர் பச்சைமலை

மருதநிலப்பயிர் பச்சைநெறம்
மண்ணில்முளைப்பது பச்சைநெறம்
மாயம்பெருமாளும் பச்சைநெறம்
மணிக்கொடியிலும் பச்சைநெறம் 740

தத்துவந்தந்தது மிந்நாடு
சங்கரர்வந்தது மிந்நாடு
எத்திசையும்புகழ் புத்தபிரான்
ஏந்தல்பிறந்தது மிந்நாடு

சாந்தம்கருணையுஞ் சத்தியமும்
சைவமும் வைணவ மார்க்கங்களும்
காந்தமெனஇந்த லோகத்தையே
கவர்ந்துஇழுக்கிற வேதாந்தம்

எல்லாம்பிறந்த திந்நாடு
ஏசுபிறந்த கிழக்கிதுவே
நல்லான்நபிகள் நாயகமும்
நாடியுதித்த கிழக்கிதுவே

காந்திபிறந்தது மிந்நாடு
கருணைசெழித்தது மிந்நாடு
சாந்திகொடுக்கிற சூரியனும்
தானேயுதிக்குந் திருநாடு

தாயின்மணிக்கொடி தன்னிடையேஇந்த
தத்துவக்காவியும் சேர்த்துவிட்டார்
ஞாயம்நடுத்தவ ருதிருக்க
ஞானிநிறத்தையும் சேத்துவிட்டார்

உள்ளத்திலுள்ளது தூய்மையென்றே
வெள்ளைநிறத்தையும் சேர்த்துவிட்டார்
உழைத்துப்பிழைப்பது நல்லதென
உண்மைக்குராட்டினம் போட்டுவிட்டார்

இந்தக்கொடியும் பறந்துவர
எங்குமேஞானம் சிறந்துவர
வந்தமணிக்கொடி பாரதத்தின்
வல்லமைபேசித் திரிந்துவர

வானமும்பூமியு முள்ளமட்டும்
வாரிதியாழிக ளுள்ளமட்டும்
ஞானமும்நீதியு முள்ளமட்டும்
ஞாயந்தரையினி லுள்ளமட்டும்

எங்களின்தேசக் கொடியிதுவே
எங்கும்நிறைந்து பறந்திடவே
மங்களவாழ்த்துக்கள் தந்திடுவீர்
மண்டலமுச்சூடு முள்ளவரே.

நாகபுரிக்கதை சொல்லவந்தேன்
நாட்டுகுழப்பத்தில் மாட்டிக்கிட்டேன்
வேகம்பொறுக்குது இல்லையடா
வெடிச்சுப்போகுது நெஞ்சுக்கனல்

நாகபுரிக்குள்ளே நம்மளவர்
நாலஞ்சுபேரொண்ணு கூடிகிட்டே
போகவேஊருக்குள் ஊர்வலமாய்
பொறப்பிட்டுக்கொடிதான் பிடிச்சார்

இந்தக்கொடியைப் புடிக்காதே
எங்க தெருவுக்குள்போகாதே
என்றுதடுத்தான் போலீசு
இந்தியநாட்டுக் கொடிதனையே

எல்லோருங் கொடிதா னெடுத்தார்
எங்கும் கொடியைப் பறக்கவிட்டார்
நல்லோரெல்லாம் நாகபுரி
நகரைநாடியே வந்துவிட்டார்

நாகபுரிக் கொடிப்போராட்டம்
நாடுமுழுக்க நடக்குதப்பா
ஏகப்பட்டசனங் கூடுதப்பா
இந்தியமானத்தைக் காப்பாத்த

பாத்ததுஇந்திய ராசாங்கம்
பட்டேல் வீரனும் வந்துநின்றான்
ஏத்ததுசெய்யட்டும் ராசாங்கம்
எடுத்துக் கொடியைப் பிடிங்களென்றான்

கொடிபுடிச்சது கூட்டமெல்லாம்
கோடிச் சனங்கள் கொடிபுடிச்சார்
அடியெடுத்துமே வச்சிடுமோ
அடங்கிப்போனது ராசாங்கம்

## காந்திக்கு ஆபரேஷன், விடுதலை

கட்டுக் காவலுக்குள்ளிருந்தே
காலும் நடக்க இடமின்றியே
காந்தி வகுத்திலே கட்டி ஒண்ணு
கல்லுச் சிவலிங்கம்போலே வர

கர்ணல்மாடக்சு டாக்டருமே
காருண்ணியம் ரொம்ப உள்ளதொரை
கண்ணுங் கருத்தாப் பாத்துப்பிட்டு
கண்டார் ஆபத்து வந்ததென்ருர்

கத்தியைவச்சு அறுக்கலையேல்
காலமுந்தள்ள முடியாது
சத்தரம்வச்சு சிகிச்சை செய்தால்
சங்கடம்மெத்தவு முண்டதிலே

காந்தி யுசுருக்கு மோசம்வந்தா
கலங்கிப்போகும் தேசமெல்லாம்
சாந்தஞ் சத்தியம் பாக்காது
சண்டைக்கு வந்திடும் எம்மேலே

சத்தரம்வைக்கவே உத்தரவும்
தந்தால் கத்தி யெடுப்பேன் நான்
மித்திரர் யாரேனும் உண்டானல்
மின்னே வாருங்கள் என்ருராம்

சாந்த மகாத்மா கேட்டதுமே
சாத்திரியாருக் கெழுதிவிட்டார்
சாத்திரியாரும் போயிருந்தே
சத்திரம்வைக்கவே சொன்னராம்

தேசத்தைக்காக்கும் பொறுப்பினிலே
சீனிவாச சாஸ்திரியார்
மாசத்த தொண்டொன்று செஞ்சுவிட்டார்
மகாத்துமாவைக் காப்பாத்த

காந்தி யிறந்தால் தேசமெல்லாம்
கட்டி அடிச்சிடும் சாஸ்திரியை
காருண்ணியம் தயவில்லாமல்
காறி உமிஞ்சிடும் சாஸ்திரியை

கட்டி யறுத்து எரியாட்டி
காந்தி யிறப்பது நிச்சயந்தான்
வெட்டி எடுக்கவே உத்தரவு
வேறொருத்தன் தரமாட்டானும்

இந்த நிலைமையில் சாஸ்திரியார்
ஏத்துக்கொண்டா ரிப் பொறுப்பை
நந்தமைக்கொன்று எரிந்தாலும்
நாட்டுக்குழைக்கத் தயங்கலையாம்

செத்துப் புழைச்சார் காந்திமகான்
சீக்கும் சௌக்கிய மாச்சு தய்யா
கட்டிக்கு காந்தி பொழச்சுதுமே
கவுருமெண்டும் பொறுப்புவிட்டு

காந்தியைக் காவல் விடுவித்திட்டார்
கடல்கரையிலே போயிருந்தார்

## இந்து முஸ்லீம் சண்டை, உண்ணா விரதம்

அடகு புடிச்சவன் தானிருக்க
அண்ணனுந் தம்பியும் சண்டையிட்டார்
சொத்தை எடுத்தவன் தானிருக்கச்
சோதரர் கூடியே சண்டையிட்டார்

எதிராளிகிட்டக் கொடுத்துப்பிட்டு
இந்துவும் முஸ்லீமும் சண்டையிட்டார்
இதிலாறு அதிலாறு போனதையா
இங்கிலீஷ்காரன் ஆண்டிருந்தான்

இந்தியன் முஸ்லீமைக் கொள்ளைவச்சான்
இஸ்லாங்காரனுங் கொள்ளைவச்சான்
சிந்தினரெத்தமும் பத்தாமல்
சிப்பாய்க்காரனும் சுட்டுக் கொன்னான் 770

என்னத்துக்காக அடிச்சுக்கிறோம்
என்பதுகூடத் தெரியாமல்
சின்னத் தனமான சண்டையிலே
செத்துவிழுந்தது தேசச்சனம்

யோகத்தில் வந்தவன் தானிருக்க
ஊருக்குடையவன் சண்டையிட்டான்
கோஹத்து என்னும் டவுன்தனிலே
கொழுந்து விட்டெரியுது சாதிச்சண்டை

என்னையன் காந்தி படிச்சாராம்
இதயங்கலங்கித்துடிச்சாராம்
இருபத்தொருநாள் பட்டினியாய்
இருக்க விரதம் புடிச்சாராம்

உயிருக்கு மேலாக உள்ள சனம்
ஒத்துமை காணமுடியாட்டி
உயிருமிருந்தென்ன போயுமென்ன
ஒத்தன் செத்துலகம் வெத்தாமோ

தேசமும் பட்டினியாச்சுதப்பா
சின்னஞ்சிறுவரும் தின்பதில்லை
வெல்லப் பணியாரம் விக்கிக்குமாம்
மேல்மூச்சு வாங்கியே துக்கிக்குமாம்

கோயில் குளங்களைக்கும்பிடுவார்
கோடிக்கன்னதானம் செய்திடுவார்
ஆண்டிபரதேசிதன்னைத் தேடி
ஆறுசுவைச்சோறு போடுவராம்

காந்தி பொழச்சு வரவேணும்
கண்ணைத்திறந்து நீ பாக்கவேணும்
ஏந்தல் பொழச்சுவரவேணும்
எல்லாத் தெய்வமும் காக்கவேணும்

என்று ஜனங்கள் தவித்திடவே
ஈசன் கருணை தழைச்சுதைய்யா
இருபத்தொரு நாள் பட்டினியும்
ஏதுஞ்செய்யவில்லை காந்திக்குமே

சத்தியம் வந்து தலைமாட்டில்
தவமிருந்து பொழைச்சுவிட
இரக்கம் வந்து தலைமாட்டில்
இருந்து உசுரைப் பொழைச்சுவிட

கருணைவந்து தலைமாட்டில்
கைகட்டி நின்னு பொழைச்சுவிட
காந்தி பிழைத்திட்ட சேதிதன்னை
கண்டு மகிழ்ந்தது தேசமெல்லாம்

## 1924 பெல்காம் காங்கிரஸ்

*மேல்வாரியாயிருந்த வித்தியாசமெல்லாம்
வெளிக்கிளம்பி வீதியெங்கும் பேசிவரலாச்சு
சட்டசபை போயிருந்து தாய் நாட்டைக் காக்க
தங்களுக்கு சத்தியுண்டு தடைசெய்தார் காந்தி

என்று சொல்லிக்கொண்டிருக்கும் இந்தியச்சிங்கங்காள்
இன்றுமுதல் நீங்கள் தனிப்பாதையிலே சென்று

எந்தவிதமாயும் சுதந்திரமே பெற்று
எங்களுக்குத் தாருமென்று காந்திமகான் சொல்லி

தன்னுடன் இருந்த சில தலைவர்களும் தானும்
தாய்நாட்டுச் சேவை செய்ய தனிவழியில் போனார்

நிர்மாணத்திட்டமெனும் நேர்வழியாம் பாதை
நீள நடைபோட்டு விட்டால் நிச்சயம் சுயராஜ்யம்

## நிர்மாணத் திட்டம்

*இந்நாளில் காந்திமகான் என்னசெஞ்சாரென்பதைநாம்
பொன்னாலே யெழுதிவச்சுப் போத்திவரவேணுமையா

தேசமெங்குஞ் சுத்திவந்தார் திட்டம் விவரிச்சார்
யோசனைகள் சொல்லி உற்சாகமூட்டிவிட்டார்
ராட்டினத்தை சுத்திவிட்டார் ராசாங்கம் சுத்தியதே
மதுவிலக்குச் செய்துவிட்டார் மதிகெட்டவன்திரும்ப

பெண்ணடிமை என்றதொரு பெரும்பேயை ஓட்டிவிட்டார்
ஆண்மகனுக்கே யவரும் அமைச்சென்று சட்டமிட்டார்

இருட்டுப்பள்ளிக்கூடம் வைத்தார் எல்லோரும் தான் படிக்க
குருட்டுத்தனமாயிருந்த குத்தமெல்லாம் வெளியாச்சு

சாதிவித்தியாசமெனும் சண்டைகளைத் தீர்த்துவிட்டால்
சமத்துவம் கிடைக்குமென்ற தத்துவமுஞ் சொல்லிவிட்டார்

பேதகமாய்ப்பேசிப் பெரியமதஞ் சின்னமதம்
ஆதிமதம் வந்தமதம் அந்தமதச் சண்டையெல்லாம்

ஆகாது தேசத்துக்கு அயலான் வசித்திருக்க
வாகான சாக்கிதென்று வக்கணையாய்ச் சொல்லிவிட்டார்

உழுதுபடைக்கின்றவனும் உப்புவிக்குஞ் செட்டிகளும்
விழுதுவிடும்வேதம் விளம்புகின்ற வேதியனும்

தேசம்எனுந் தேரில் திரைச்சீலை யச்சாணி
தெப்பக்கட்டையாகு மொண்ணு தேஞ்சாலுந்தேரேது ?

வெள்ளாமை செய்யுகிற விவசாயிகள் தனக்கே
எல்லாரும் எந்நாளும் இரக்கம் கொடுக்கோணும்

குடிசைத் தொழில் செழித்து குபேரப்பட்டிணமாய்
மிடி செய்யும் தீமைகள் போய் மேலாக வாழோணும்

ஆடோடுமாடுகளும் அத்தனையுந் தாம்பலுகி
நாடோறும்பாலாறு நன்றாய்ப் பெருகோணும்
சொந்த மக்கள்நெய்தத்துணி சொரசொரப்புக் கண்டாலும்
அந்தஉடைதானுடுத்தி அன்பாக இருக்கோணும்
அன்னிய நாட்டுச்சரக்குக் காசைப் படுமோகம்போய்
தன்னுடைய நாட்டுச் சாமானை வாங்கோணும்
சத்தியத்தையேபேசி சத்தியத்தையே நினைச்சுச்
சத்தியத்திலேவாழ்ந்து சாசுவத மாகோணும்
ஆயுதத்தைத்தானெடுத்து அடிபுடியுஞ் செய்யாமல்
அஹிம்சா மார்க்கத்தில் அனைவோரும் வரவோணும்
காட்டுமிருகம் போலே கடிச்சுக்கிட்டு வாழாமல்
நாட்டு மக்களெல்லாரும் நன்றாக வாழோணும்
நாட்டுமக்கள் எல்லாரும் நடமாடும் தெய்வமென
ஆட்டுவிக்கும் தெய்வத்துக்கு அடங்கி நடக்கோணும்
நிர்மாணத்திட்டமிதை நேராய்நடத்திவந்தால்
கர்மானுசாரவினை கண்ணெதிரில்போகுமென்றார்.

## வைக்கம் சத்யாக்ரகம்

நம்பூரிப்பட்டருக்கும் நாட்டிலுள்ள பாப்பார்க்கும்
வம்பாக வித்தேசம் வளங்கும் மலையாளம்
சான்றாரைத் தியரெனச் சாத்தும் மலையாளம்
சாமிக்கு மீரத்துணி போத்தும் மலையாளம்
சாதிவித்தியாசமெனும் சண்டையில் புகுந்துவிட்டு
பாதிசனம் பாதிரிக்கி பறிகொடுத்த தத்தேசம்
வம்பாகச் சண்டையிட்டு வக்கிழந்து மதமாறி
மாப்பிள்ளையாப் போகவிட்ட மக்களுட சீமையிலே
வைக்கத்துக் கோயிலிலே வந்ததொரு சண்டையது
வைதீகர் தங்களுக்கும் மக்களரிசனங்களுக்கும்
ஆண்டவன் கோயில் அணிமதிலின் பக்கத்திலே
அரிசனங்கள் போகவர ஆகாதென மறுத்தார்
கோயில் கட்டக்கல்லுகளை கொண்டுவந்துபோட்டவர்கள்
கும்பிடவுங் கூடாதாம் கோயில் சுத்தக் கூடாதாம்
தண்ணித்துறை வெட்டி தாக்குமடை கட்டினவர்
தாகம் தணிக்க அந்தத் தண்ணிமொள்ளக்கூடாதாம்

மரக்கால் தனையெடுத்து வாரிவிடும் வெட்டிமக்கள்
மஹாதேவன் கோயில் திரு வாசல் வரக்கூடாதாம்

படியளக்கும் சாதியது பகவானின் கோயிலிலே
அடிபணியக்கூட அருகில் வரக்கூடாதாம்

பொறுத்துப் பொறுத்து மனம் புண்ணுகிப் போனசனம்
வருத்தம் சகிக்காமல் வந்தாராம் தெருவூடே

வைக்கத்தில் சத்தியப்போர் வந்தே குவிந்துவிட
மகாத்மா காந்தி மகாராணி தன்னோடு

வாதமிட்டுஅவர் வழிக்கு வந்தாள் மகராணி
மலையாள ராசாக்கள் வாசல் திறந்துவிட்டார்

## சி. ஆர். தாஸ் மரணம்

* சட்டசபைக்குள் காங்கிரஸ்கூடி ஜமாய்க்குதாமப்போ
சர்க்காருக்குத் திணறடியாகி தள்ளாடிப் போச்சாம்

வித்தல்பாயி பெரியபடேலு வீரன்தலைமையிலே
சத்தியமூர்த்திச் சிங்கங்குமுறுது ஜண ஜண ஜண வென்றே

சிஆர் தாசும் வங்காளத்திலே சிகரம்போலானர்
சென்குப்தாவும் தேசபந்துவின் சீடர்தாமானர்

சர்க்கார்கட்சி தீர்மானமெலாம் தவுடாபோச்சுதுவாம்
பிர்க்காஜில்லா தாலுக்காவும் காங்கிரசாச்சுதுவாம்

மந்திரிப்பதவியைத் தந்தேயதனை வகிக்கச்சொன்னுலும்
மண்டலம்போற்றும் சிஆர்தாசும் மாட்டோமின்னுலும்

திக்குமுக்காடித் திணறிப்போச்சுது சீமைராசாங்கம்
தீவிரமாக உடைச்சுப்போடுரூர் வந்தசட்டமெல்லாம்

தேசத்துக்கெல்லாம் பெரியவக்கிலு சிஆர்தாசையா
சீனிவாசய்யங் காரைப்போலே சிறந்தவக்கிலையா

காசுபணத்தை லட்சலட்சமாய் கட்டிவைக்கவில்லை
கையிலேஉள்ளதை யெல்லாந்தேசக் கஷ்டத்துக்கிந்தாராம்

கட்டினவேட்டி சட்டையோடு கையைஉதரிப்பிட்டே
கைவசமிருந்த சொத்துகளெல்லாம் கழுவிவிட்டாராம்

சொத்துப்பத்தெல்லாம் தேசத்துக்கே சொந்தமென்றுவிட்டார்
சொந்தஉழைப்பால் சேர்த்தது அய்யா சுற்றம்தந்ததல்ல

எங்குபார்த்தாலும் சிஆர்தாசுக் கேத்தம்பெருகுதையா
இந்தவேளையில் நடந்ததுசொல்ல இதயம்உருகுதையா

சுத்திஅலைஞ்சார் நாட்டுக்காக சுகக்கேடுண்டாச்சு
நித்தியகண்டம் பூர்ணாயுசுமாய் நேருகெட்டுப்போச்சு

மல்லியப்பூப்போ லுள்ளதிரேகம் வாடிவதங்கிச்சாம்
அல்லியம்பூப்போ லானதிரேகம் அலண்டுகசங்கிச்சாம்

செக்கச்செவந்த மேனியெங்குமே வெக்கைக்கொப்பளமாம்
கக்கரிப்பளம்போ லுள்ளவுடம்பு கன்னிப்போயிடுச்சாம்

சீவங்கிடந்து இளுக்குது அய்யா தேசத்துக்காக
தேகங்கிடந்து தவிக்குது அய்யா தேசத்துக்காக

இருபத்தஞ்சாம் வருசம்ஜூனில் எட்டாம்தேதியிலே
ஈசன்திருவடி சேர்ந்தாரய்யா இணையில்லாதாசும்

இந்தசேதியைக் காதிலேகேட்டா ரெங்கள் மகாத்மாஜீ
இரவோடிரவாய் ஓடிவந்தாரா மெங்கள் மகாத்மாஜீ

கதருக்கொடிக்கு உள்ளேகிடந்த தாசைக்கண்டாராம்
கதறிக்கதறி அழுதாரையா எங்கள் மகாத்மாஜீ

தேசத்துக்காகச் சொத்துஞ்சுகமும் தெத்தம்செய்தாயே
சித்தரஞ்சனா சென்றாயோநீ யென்றே அழுதாராம்

தேகம்பொருளுஞ் சீவனுமிந்தத் தேசத்துக்காக
தியாகம்செய்த சித்தரஞ்சனா திரும்பிப்பாராயோ

மாலைதுவண்டது போலேகிடக்கும் மன்னாநீயுந்தன்
வாயைத்திறந்தொரு வாசகம்பேச மாட்டாயோ அப்பா

கையிலிருந்த பணம்போதாமல் கடங்கட்டும்வாங்கி
கஷ்டப்பட்டவர்க் கீந்தாயென்று காதிலேகேட்டேனே

இரணம்கெட்டவ னென்றேயுன்னை எவரும்சொல்லிடவோ
இந்தியதேசம் சீ. ஆர். தாசுக் கெத்தனை கடன்பட்டதோ

தாசுக்குக்கடன் பட்டுக்கிடக்கும் தாய்நாடேகாசைத்
தரவேணும்நீ தாஸர்கடனை தானும் தீர்க்கவென்றார்

பத்துலட்சத்தைத் தந்தது இந்தப் பாரததேசமுமே
பகிர்ந்துஅளித்தார் ரெண்டரைலெட்சம் பட்டகடன்தீர்த்தார்

தாசருபட்ட கடனைத்தீர்த்த தாய்நாடேயுன்னால்
தாசிரியாகித் தவிக்கும்பேர்களை தள்ளிவிரட்டாதே

கோடிகோடியாச் செல்வமெடுத்துக் கொடுத்தவர்ரொம்பப்பேர்
குபேரபோகம் விட்டேகொட்டடி போனவர் ரொம்பப்பேர்

கல்லுங்கடலும் புல்லும்புனலும் காவிரிகங்கையுமே
காலம்பூமியு முள்ளமட்டும்தாஸ் கவுரவப்பேர்வாழ்க

## 1926 கௌஹாதி காங்கிரஸ்

சீமான்சீமா னென்றுசொன்னால்
சின்னக்குழந்தை யரியுமையா
சீனிவாசய்யங்கார் தன்னையந்தச்
செல்லப் பெயரிட்டழைப்பார்கள்

ராமனுதபுரச் சீமையிலே
ராசாங்கத்து வக்கீலாய்
சீமைபுகழவே வாழ்ந்திருந்த
சேசாத்திரிஐயங் கார்மகனும்

வீரமறவர்கள் மாகாணம்
வெட்டொன்று துண்டொன்று செஞ்சிடுவார்
சூரமறவர்கள் மாகாணம்
சொன்னசொல்லுத்தவ ராதவராம்

சின்னமருது பெருமருது
சேதுபதித்தமிழ்ப் பாண்டித்துரை
என்னும்பலபல மேலானோர்
இங்குபிறந்தவர் இல்லையோடா

மீனாட்சியம்மை தென்மதுரை
மேலானதமிழ்த் தென்மதுரை
தானுமிவருக் கென்றறிந்தால்
தமிழன்மனசு குளிருமையா

சட்டம்படித்து வெகுசுகமாய்
சம்பாத்தியங்கள் செய்கையிலே
சர்க்கார்வக்கீல் செனரல்எனச்
சம்பளம்வாங்கிடும் நாளையிலே

ஒத்துழையாமை நடக்கக்கண்டார்
உத்தமன்காந்தியைத் தானுங்கண்டார்
நித்தமிவருக்குப் போராட்டம்
நேர்வழிதன்னையே கண்டறிய

பாஞ்சாலத்துப் படுகொலையைப்
பத்திப்படிச்சிட்ட நாள்முதலாய்
வீஞ்சாமர்த்தியம் பேசுவதில்
வெறுப்புவந்துமே கவ்விக்கிட

வக்கீல்புழைப்பை விட்டெறிஞ்சார்
வக்காலத்துக்கள் வாங்கவில்லை
சர்க்கார்தந்துள்ள பட்டத்தையும்
சன்னத்தையும்தூக்கித் தானெறிஞ்சார்

காந்தி வழிகள் பிடிக்காது அவர்
கருணைரொம்பப் பிடிச்சிடுமாம்
சாந்தி வழிகள் புடிக்காது அவர்
சத்தியம் கண்டு மலைச்சிடுவார்

காந்திக்கு நல்லெண்ணம் மெத்தவுண்டு
காரியம் செய்யத்தெரியுதில்லை
கட்டுகதரெனச் சொல்லுகிறார்
கட்டித்தொலைப்போ மென்பாராம்

சத்தியம் அஹிம்சை சாந்தமெல்லாம்
சாதிக்கலாமோ அரசியலில்
நித்தியம்வேறொரு யுத்தியினால்
நீக்குப்போக்கு காட்டுமென்பார்

இந்த வருஷத்துக் கூட்டத்துக்கே
இவரு தலைவரென்றாக்கி வைத்தார்
நொந்துவிடும்படி சேதியொண்ணு
நுழையுமுன்னர் நடந்ததையா

நல்ல நல்ல யானை பாத்துவச்சார்
நாற்பத்தோ ரானையை பாத்துவச்சார்
வல்லவனாகிய சீமானையூர்
வலமாயழைக்க வைத்திருந்தார்

சிரத்தானந்தரையே ஒருவன்
குத்திவிட்டானெனச் சேதிவர
சீமானூரு வலந்தனையே
செய்யவேண்டாமெனச் செப்பிவிட்டார்

சட்டசபைசுய ராஜ்யக்கட்சி
தானிறைவேத்திய தீர்மானம்
வட்டமேஜை மகாநாடுகூட்டி
வகுக்கவேணும் அரசியலை

என்றதைக் காங்கிரஸ் கேட்டதையா
இந்த வருசத்துக் கூட்டத்திலே
அன்றுமுதல் ஒரு ஆண்டுக்குப்பின்
அழகுச் சென்னையில் கூடினதாம்

## 1927 சென்னைக் காங்கிரஸ்

சேத்துப்பட்டேரி நிரம்பிடுச்சாம்
    செனசமுத்திர மாயிடிச்சாம்
பாத்தகண்பாத்த படிக்கேயந்தப்
    பந்தலழகையும் பாத்திடிச்சாம்

திலகர்மண்டப மென்றழைத்தே
    சிங்காரப்பந்த லமைச்சுவச்சார்
உலகம்புகழும் உத்தமனை
    உள்ளம்நினைக்கவே செய்துவச்சார்

அமிருதசரசுக் காங்கிரசில்
    ஐயன்திலகர் வந்தாரே
ஆனந்தமாகவே காந்திதன்னை
    அணைத்துத்தழுவி நின்றாரே

ஒத்துழையாமை நடத்துவதில்
    உள்ளபடியெனக் கொத்துமைதான்
சத்தியம் அஹிம்சை யென்பதெல்லாம்
    சனங்கள்கொண்டு செலுத்துவரோ ?

அப்படித்தேசம் அனுமதிச்சால்
    அடியேனும்கூடத் தலைகொடுப்பேன்
எப்படியானாலும் இந்தியர்க்கே
    இந்தியநாடு வரவேணும்

என்றுதயிரியஞ் சொன்னமகான்
    இன்றைக்குநாட்டினி லில்லையையோ
அன்று நடந்த கதைகள் எல்லாம்
    அகலுதில்லையே கண்ணைவிட்டு

ஆகஷ்டு மாசம் முதல்தேதி
    ஆரம்ப மொத்துழையாமை யென்றே
யோகமும் வேளையும் பாத்து வச்சே
    உங்களைத் தேடியே காந்தி வந்தார்

பம்பாய் வந்து இறங்கையிலே
    பால கங்காதரர் சாயுஜ்ஜிய
பதவியடைஞ்சதைக் கேட்டு மனம்
    பதறியழுது துடித்தாரே

நாட்டுக்குப் பாடுபடத் துணிந்தீர்
நாலஞ்சுவாட்டி செயில்புகுந்தீர்
காட்டுக்குப் போகவே ஞாயமுண்டோ
காரியம்முடிஞ்சு போயிட்டுதோ ?

ஒத்துழையாமை யியக்கத்துக்கே
உம்மைக் களபலியாக்கிக் கிட்டே
சத்திய நல்லறவான் தனைப்போல்
சாயுச்சியம் பெத்துப் போனீரோ ?

பத்துலச்சஞ் செனம் கத்துதையா
பம்பாய் பட்டணம் கத்துதையா
முத்து முத்தாகவே கண்ணீர் விட்டு
முப்பத்தி முக்கோடி அழுகுதையா

எள்ளுந் தண்ணீரையுமள்ளி யுமக்
கிந்திய தேசம் இறைக்குதையா
பிள்ளைகள் முப்பத்து முக்கோடி
பெத்த மகானே பிரிந்தீரோ ?

இந்திய தேசப் பொறுப்பை யெல்லாம்
என் தலைமேலே நீர் கட்டிவிட்டு
அந்திய காலமடைந்ததற்கே
அந்தரங்கப் பொருளேது முண்டோ

காந்தியிந் நாட்டுக்கு வந்துவிட்டான்
கையில் பொறுப்பை யெடுத்துக் கிட்டான்
சாந்தமும் அஹிம்சை தத்துவமும்
தழைக்கட்டுமென்று போனீரோ ?

உன்னைத் துரத்தித் துரத்தியவன்
ஒண்ணுக்கு நாலுதரம் மடக்கி
தண்ணிக்கி மேலேயும் ஏத்தியேமாந்
தலைச் சிறையினில் தள்ளிவிட

கீதை ரெகசியம் தானெழுதி
வேதப் பொருளை விரித்துரைத்தாய்
பாதை தெரியாது தான் தவிக்கும்
பாரதமக்கள் பதம்பெறவே

பொன்னெழுத்தாக யெழுதி யிந்த
பூமிக்குப பொக்கிஷமாக்கி வைத்த
புண்ணியவானை மறந்திடுமோ
பூமியென்பது உள்ளமட்டும்

என்று நினைத்துமே சென்னை யெல்லாம்
ஏழைபங்காளனை வாழ்த்திடுமாம்
அன்று சுதந்திர வெள்ளத்திலே
ஆழக்குளித்தனர் மக்களெல்லாம்

தொண்டர் படையிலே சீமானும்
துலங்கு மேடையில் சீமானும்
கண்டவிடமெங்குஞ் சீமானும்
காய்கறிக் கட்டிலும் சீமானும்

தலைவர் மேடையில் சத்யமூர்த்தி
சமையல் பொரையில் சத்யமூர்த்தி
அலையும் திரியும் சத்யமூர்த்தி
அத்தனை திக்கிலும் சத்யமூர்த்தி

எத்திசை பார்த்தாலும் முத்துரங்கம்
எந்த உபசாரம் முத்துரங்கம்
சித்தம் நினைக்குமுன் கொண்டுவந்தே
சேரக்கொடுப்பது முத்துரங்கம்

புத்தப்புது மஞ்சச் சீலைகட்டி
புனுகு சிந்தூரப் பொட்டுமிட்டு
சுத்தி அலைஞ்சிடும் மோகினிபோல்
சுமங்கிலிப் படை யெங்கேயுமாம்

மாளவியாவும் வந்திருந்தார்
மஹம்மதலியும் வந்திருந்தார்
மகாத்துமாவும் வந்திருந்தார்
மாநிலமெல்லாம் வந்திருந்தார்

## பூர்ண சுதந்திரம் தேவை

செக்கச்சிவந்த நிறமுடையான்
சிங்கத்தைப் போல உறமுடையான்
தேசத்துக் காரியம் முன்னணியில்
செய்து முடிக்குந் : திறமுடையான்

காலம் பிறக்கு முன்னே பிறந்த
கன்னிக் குமரியைப் போலஇவன்
வாலக்குமர னென்றே யென்றைக்கும்
வாழப்பிறந்த இளமையினன்

தீரத்திலகரின் தீவிரமும்
சி. ஆர். தாசின் வாசகமும்
சூரத்தனமுள்ள கோகலேயின்
சூச்சமப் புத்தியு முள்ளவனும் 890

எங்களுக்குக் கண்ணுங் கண்மணியும்
ஏழைக்கு யிருக்கு யிராயும்
இங்கிலீசுக்காரன் கண்களுக்கோ
எரி நெருப்பாய்த் தோணிடுவான்

நேருவெனும் பெயர் கேட்டுவிட்டால்
நித்திரை விட்டெழும் தேசமெல்லாம்
யாருமிவனுக்கு நேரிடையாய்
அவதரிச்சவர் இல்லையையா

காந்தியைத் தெய்வமெனத் தொழுவார்
காலடி தன்னில் விழுந் தெழுவார்
சாந்தி வழிதன்னைச் சொல்லவந்தால்
சவஹர்லாலைப் பாத்திடுவார்

அந்த ஜவஹரிலா லுமிங்கே
ஆணித்தரமாகச் சொல்லிவிட்டார்
இந்திய பூர்ண சுதந்திரமே
எங்களின் நாட்டுக்கு வேண்டுமென்றார்

நாங்கள் விரும்பிய நாட்டுடனே
நல்லஉறவு வகுத்திடுவோம்
தாங்களே தங்களின் நாட்டுக்குள்ள
தரும் நாயம் வளத்திடுவோம்

மாளவியா தன்னைத்தன் கரத்தால்
மார்புடன் சேரத்தழுவிக் கொண்டே
மகம்மதலியும் சொன்னதிந்த
மணிமணியாகிய வாசகமே

இந்துவும் முஸ்லீமும் என்றைக்குமே
இரண்டு கண்ணென வாழ்ந்திடுவோம்
இந்திய தேசச் சுதந்திரமே
இலட்சியமதனில் ஆழ்ந்திடுவோம்

இந்தஊர்க் கூட்டச் செலவுக்கென்றே
எடுத்த நிதியில் மிஞ்சியதில்
சொந்த நிலங்கரை வாங்கியதில்
சுதந்திரக் கோயில் கட்டிவைத்தார்

## சைமன் கமிஷன் பகிஷ்காரம்

*அண்ணுவாடா தம்பீவாடா அளகுசைமன் துரையே
ஆளுகளெல்லாம் கூட்டிக்கிட்டேபோ அளகுசைமன் துரையே

இந்திய நாட்டைச் சுத்திப்பாரு அளகுசைமன் துரையே
ஏழெட்டுப்பேரைக்கூப்பிட்டுக்கேளு அளகுசைமன் துரையே

சுயராஜ்ஜியமாய் ஆளத்தானும் தோளில் வலியுண்டோ
சொந்த ராச்சியம் நடத்திப்போட தோதுதானுமுண்டோ

பாத்துக்கேட்டு பார்லிமெண்டுக்குப்பதிலுச்சேதி சொல்லு
பண்டம் விக்கணும் தகுந்தாப்போலே பாத்துச்சேதி சொல்லு

என்றே சொல்லிச் சைமன் கமிஷனை இங்கிலிஷ் ராசாங்கம்
இந்த நாட்டுக்குத்தூதனுப்பினர் எங்க காசுச் செலவில்

காந்திமகானிச் சேதியைக்கேட்டு கல கல நகைச்சாராம்
கண்ணைத்துடைக்கிற வித்தையை உடனே கண்டுபுடிச்சாராம்

ஏழுபேர் இங்கு வருகிறதாம் இந்தியாச்சேதி அறிகிறதாம்
நாப்பதுகோடிச் சனந்தனையே நாலஞ்சுபேர் வந்து பாக்கிறதாம்

பட்டம்பதவி படைச்சவங்க பைசாச்சம்பளம் பெத்தவங்க
சட்டம்படிச்சுகிழிச்சவங்க சனத்தைக்கொன்னு புழைச்சவங்க

இப்படியாகவே பத்துப்பேரை இளுத்துப்புடிச்சுப்பேசிப்பிட்டு
பூமாலைகளைப்போட்டுக்கிட்டு போக்குவரத்தைக் கெடுத்துப்பிட்டு

காப்பிடிபன்களைச் சாப்பிட்டுட்டு காசைக்கரியாக ஆக்கிப்பிட்டு
போகப் போற இந்தக்கூட்டந் தன்னை பொருட்படுத்தவும்கூடாது

என்றே காந்தி எடுத்துரைக்க எதுத்து நின்னது தேசமெல்லாம்
சர்க்காருதாஸர் பின்னேவர சண்டைச் சிப்பாயி முன்னேவர

சலாங்கூட்டம் பின்னே வர தடியெடுத்தவன் முன்னேவர
தம்பட்டக்காரன் பின்னே வர சார்ச்செண்டுக்கூட்டம் முன்னேவர

சீமைத்துரைகளின் கூட்டமது தேசவிசாரணை செஞ்சிடுச்சாம்
தேசத்துமக்களும் கூட்டமிட்டு திரும்பிப்போகச்சொல்லையிலே

தேசத்தைக்காக்கும் பட்டாளம் தெண்டனை செஞ்சுதடிவீச
தலைவணங்காத ஜவஹர்லால் தானுமடிபட்டுக்கொண்டாராம்

லஜபதிராய் சிங்கமது லாகூர் தன்னில் மறியல் செய்ய
சார்ஜண்ட்டொருத்தன் தடியாலே சாத்திவிட்டானும் மார்மேலே

அடிபட்டு நெஞ்சம் துடிதுடிச்சு ஆறுமாசம் சீக்காய்க் கிடந்து
ஆண்டவன்பாதம் சேர்ந்தாரே அந்தக் கொடுமையைச் சொல்லுவதோ

## 1928 கல்கத்தா காங்கிரஸ்
## மோதிலால் நேரு தலைமை

*காளிமக மாயிதிரு க்கோயில்—கொண்ட
கல்கத்தா தன்னிலிந்த காங்கிரஸ்கூடி
ஆளுபவன் தனக்கு ஓராண்டு தவணை
ஆனதோர் நோட்டீசு அனுப்பிவிட்டதையா

நேருமகராசன் தலையானான்—ரொம்ப
நேத்தியாயூருவலம் பாத்துவருவோம் நாம்
யாருமிதுபோல ஒரு காட்சி—தன்னை
அவனிமேல் கண்டதில்லை ஆனந்தமாக

வெள்ளிரதம் சோடிச்சு விட்டார்—அதில்
வெள்ளைநிறஞ் சுளிசுத்தம் புள்ளிமருவில்லா
துள்ளுபரி முப்பத்தியாறு—பூட்டி
சோக்கான ஊருவலம் வீட்டார்களையா

வெள்ளிரத மேறிவரும் நேரு—மீதில்
மேலான மலர்தூவி மலர்மாரிபெய்தார்
உள்ளதெல்லாந் தேசத்துக் கீந்த—அந்த
உத்தமனை தெய்வமெனச் சுத்திவழிபட்டார்

மோதிலால் நேரு மனையாட்டி—தெய்வ
முத்தமத்தாயாரும் ஜவஹர்லால், கிருஷ்ணா
ஆதிமகள் விஜயலட்சிமியும்—அந்த
ஆனந்தக் காட்சிதனைக் கண்டுபூரித்தார்

அதிர்வேட்டு முழங்கு தொருபக்கம்—தொண்டர்
அணிவகுப்பு சல்யூட்டு வழங்குதொருபக்கம்
சதிரான அலங்கார மேடை—தன்னில்
சங்கீதக் கச்சேரி முழங்குதொருபக்கம்

கூர்ஜரத்துப் பெண்க ளொருபாலே—கூடிக்
கும்மியடிக்கின்றார்கள் நேருபுகழ் மாலை
மார்வாரு தேசத்து மாதர்—கூடி
வகையான நடனங்கள் செய்கிறார் பாடி

மலையாளக் கதைகளியுமுண்டு—அங்கு
மணியான தமிழ் நாட்டுச் சங்கீதமுண்டு
கலையான மணிப்புரியின் டான்சு—வங்கக்
கவிதைக்கு ஏத்தாப்போலாடுவதுங் கண்டார்

ஆந்திராப் பத்தியங்களோர்பால்—நல்ல
அங்க வங்க காஷ்மீர ஆரத்தி யோர்பால்
மாந்தராம் மாகாணமெல்லாம்—கூடி
மன்னாதி மன்னவனை வணங்குவது கண்டார்

## வீராதி வீரன்

குதிரைப் படைச் சிப்பாயி ஒருத்தன்—அங்கு
குறுக்கு நெடுக்கும் போயி வருகிறான் பாரும்
அதிரூப சுந்தரங்களுடையான்—உண்மை
அழகுக்கு அழகான அலங்காரரூபன்

இந்திரனோ கந்தனோதானோ—மாந்தர்
இதயத்தில் குடிகொண்ட மன்மதன் இவனோ
சந்திரனோ சூரியனோ தானோ—தெய்வத்
தாமரையின் மேலுறையும் பிரமாவோ சொல்லும்

தெய்வகளை ஒளிவீசும் முகமும்—அந்த
திருமுக விலாசத்தில் சிந்தூரப் பொட்டும்
தேஜோமயங்கொண்ட சிப்பாய்—வான
தெய்வமோ மனிசர்கள் செய்த தவம்தானோ

புன்சிரிப்புகோடிப்பொன் பொருமே—அழகு
பொங்கிவரும் டாலுக்குப் பூலோகமீடோ
செஞ்சிருக்கும் புண்ணியத்தினாலே—இந்த
தேவாதிதேவனைத் தெரிசிக்கப் பெற்றோம்

தொண்டர் படைக் கம்மாண்டர் யாரு—அதோ
துள்ளிவரும் குதிரைமேலுள்ள வரும்யாரு
கண்டுமயங்கிப் போனம்கூறு—இந்தக்
காக்கிச் சட்டை சிப்பாயி யாரென்ன பேரு

இவருதான் சுபாஷ் சந்திரபோசு—எங்கள்
இந்தியா தந்த நிதி இணையில்லா—தாசுக்
கிவருதான் சரியான வார்சு— என்று
எந்நாளும் வங்காளம் ஏத்திடும் போசு

சீமையிலே அய். சீ. எஸ். ஆனார்—இந்த
தேசத்துக் கொடுமையிலே சிந்தை நொந்துபோனார்
தீமை செய்யும் அதிகார வர்க்கம்—என்ற
சேதிகளை எந்நாளும் சிந்திக்கலானார் 930

ஒத்துஉழையாமைதனில் காந்தி—சொன்ன
ஓடிவா என்ற குரல் உலகெலாம் கேட்க
புத்தமிர்தவாசகத்தைக் கேட்டார்—கையில்
புடிச்சிருந்த பேனவை வீசியே போட்டார்

தாசு தன் வக்கீலே விட்டார்—கவிஞர்
தாகூரு தன்னுடைய சர் பட்டம் விட்டார்
மாசு மறுவில்லாத போசும்—வந்த
மாஜிஸ்திரேட் வேலே தலேமுழுகிவிட்டார்

தேசமாதா சேவை செய்வோம்—சொந்த
தேசீய சேவையே தெய்வத்தின் சேவை
வாசம் நாம் செய்கின்ற மட்டும்—உடலே
வங்க மாதாவுக்கே அங்கியாய் அணிவோம்

என்றெண்ணி தாஸருடன் சேர்ந்தே—போரில்
இறங்கினர் செயிலுக்குள் இழுத்துப் பூட்டிட்டான்
அன்றுமுதல் இரண்டாண்டுக்குள்ளே—இவரை
அந்தமாந்தலேக்குமே அனுப்பினனேயா

மாந்தலேச் சிறைவாசல் விட்டு—இங்கே
வந்தவுடன் கல்கத்தா காங்கிரசு தொட்டு
ஏந்தினன் தேசத்துக் கொடியை இதனே
இந்தியா சுயராஜ்ய பூமியிலே நடுவான்

அரவிந்தர் தாகூரு தாசு—என்று
ஆனதொரு திருமூர்த்தி அவதரித்த வங்கம்
தரவந்த கடல்முத்துமிவனே—இந்த
தனிக்குதிரைச் சிப்பாயை தலேவணங்குகின்றோம்

**காங்கிரஸ் நடவடிக்கை, ஒருவருஷம் தவணே**

இந்தநல்ல கூட்டங்கள் தனிலே—காந்தி
என்னென்ன பேசினர் எடுத்துச் சொல்கின்றோம்
சிந்தனேயும் மிகச்செய்து சென்னே—தன்னில்
செஞ்சிட்ட தீர்மானம் பூரணசுயேச்சை

குடியேத்த நாட்டாச்சிபோதும்—இதனேக்
கொடுத்தாலுமே நாம் குறைசொல்லமாட்டோம்
அடியோடு உறவு பகையென்றே—நம்மை
ஆண்டுவந்த பிரிட்டனுக் கன்னியனுமாகோம்

எனவெங்கள் காந்தியுமே பேச - இதை
எதுத்துட்டார் ஜவஹர்லா லிளஞ்சிங்கம் போசும்
"சனமென்றும் சண்டைக்கு ரெடிதான்—உடனே
சட்டமறுப்பைச் செய்ய தலைவரே வாரும்"

"குடியேத்த நாட்டாச்சி என்றே -சும்மா
கூட்டங்கள்போட்டு நாம் கும்பிட்டுக்கேட்டால்
அடியோடு ஒண்ணும் தரமாட்டான்—என்றும்
அடிமைக்கு வழிகோல வழிபார்க்கலாமோ ?"

என்றிந்த இளஞ்சிங்க மெல்லாம்—இதனை
எதிர்த்திட்டார் பேசாதும் பேசிவரலானார்
அன்றெங்கள் காந்தி மஹராஜன் -சொன்ன
அருளான மொழிகேட்டு ஆனந்தமானார்

"தீர்மானம் செய்து விட்டேனானல்—சும்மா
திண்ணையிலே போய்த்தூங்கி விளுகிறவனல்ல
ஊர்கூடித் தேரிளுக்கவேண்டும்—என்
ஒருத்தனால் ஆகுகிற காரியமுமில்லே

சட்டமறுப்பைச் செய்ய வென்றால் — நம்ம
சத்தியப்படைதிரட்ட தாமசமும் வேண்டும்
சௌரி சௌரா வந்துபூந்தால்—இந்தச்
சத்தியப் போராட்டம் வெத்தி கெட்டுப்போகும்

எதிரிக்கும் டயம் கொடுக்கவேண்டும்—அதன்
இடையிலே நம்மபடை பலப்படுத்தவேண்டும்
இன்றுபோய் நாளைவாவென்ற—சத்ய
இராமனுக்குளன்றைக்கும் தோல்விதானுண்டோ

கேட்டகுடி யேத்த நாட்டாச்சி—இது
கிடைக்கவே ரெண்டாண்டு கெடுவும்கொடுப்போம்
நாட்டை ஒருநாடு விட்டுப்போக—ஒரு
நாலுநாளஞ்சுநாள் டயமும் பத்தாது"

ஒருவருசம் தவணை சொல்லிவிட்டார்—இந்த
உலகத்தையாளுகிற பிரிட்டனுடன்தானே
மறுவருசம் போராட்டம்செய்ய—காந்தி
மகாத்துமா நாடெல்லாம் திரட்டிவரலானார்

## சர்க்கார் தயாரிப்பு

பொசலடிக்கிது பொசலடிக்குது
பூமிகுலுங்குதடா
போட்டுப்போட்டு நசுக்கத்திட்டம்
போட்டுவிட்டாண்டா

அசலுமனிசன் ஆட்சிக்கொடுமை
அதிகமாச்சுடா
அடக்குமுறையைக் கண்டுதேசம்
அலறிப்போச்சுடா

சத்தியத்திலே போருசெய்யச்
சனங்கள்சேராமல்
கத்தியெடுத்துக்குத்த நெஞ்சு
கருதச்செய்தானோ ?

லாகூரிலே லஜபதிராய்
அடிபட்டுச் செத்தார்
லச்சைகெட்ட செயலுக்குப்பழி
வாங்கத்துணிஞ்சிட்டார்

அய்யோபாவம் சாண்டர்சென்னும்
ஆங்கிலசார் சண்டை
அலறச்சுட்டுப் போட்டாரையா
அதே லாகூரில்

குண்டுகள்பட்டே செத்தானையா
ஸாண்டர்ஸ் சார்ஜண்டு
கொடுமைக்குப்பலியானானையா
ஸாண்டர்ஸ் சார்ஜண்டு

சார்ஜண்டுதனைக் கொன்றாரென்றே
சர்க்கார் துடிச்சதுவாம்
தத்தைசுகதேவ் இன்னும்பலரைத்
தள்ளி அடைச்சதுவாம்

கொத்திக்கொண்டே சிறையிலேபோட்டும்
கோபம் தணியாமல்
கூட்டச்சதிகள் செய்தவர் என்றே
கும்பல் கும்பலாக

வேத்தாளாட்சிக் கெதிரிடைபேசிய
வீரர்பலபேரை
மீரத்துச்சதிவழக்குத் தொடுத்தே
விசாரணை செஞ்சிடுதாம்

மானம்பொழியுது விளையுதுபூமி
மனிசன் நன்மைக்கே— இதில்
மன்னவனேது சின்னவனேது
மனிசரில் வித்யாசம்

பொன்னும்பொருளும் பூமிகொடுக்கும்
பொக்கிஷமே அதனால்
பூலோகத்தின் பொருளெல்லோர்க்கும்
பொதுஉடமையென்றே

சொன்னவர்தனையே தத்துவம்இதனைச்
சொல்லாதே யென்றே
தொடுத்தார்வழக்குகள் எடுத்தார்மீரட்
துரோக வழக்கென்றார்

சட்டசபைக்கும் போச்சுதுஐயா
சர்க்கார் போலீசு
சட்டையும் தொப்பியுமில்லாமல்தான்
சாதாமனிசம்போல்

ரகசியப்போலீஸ்காரன் போயி
ரிப்போர்ட்டெடுத்தானும்
ரெண்டே நாளில் வித்தல்பாயி
கண்டுபிடிச்சானும்

வீரருக்கெல்லாம் பெரியவீரன்
வித்தல்பாயி படேல்
தீரருக்கெல்லாம் பெரியதீரன்
சிங்கம்ஆன படேல்

சண்டப்ரசண்டம் சர்தார்படேலின்
தமயன் வித்தல்பாய்
தாய்நாட்டுக்கே தம்பியுமண்ணனும்
தத்தே வந்தவராம்

சத்தியப்போரில் தம்பியிறங்கி
சர்தாராகிவிட்டான்
சட்டசபைக்குள் தமையன்புகுந்து
தலைவர் ஆகிவிட்டான்

ஆறடியுசரம் சீறியபார்வை
அழகாகிய தாடி
அவனைக்கண்டால் அநியாயத்துக்கு
அசந்துபோகும் நாடி

சட்டம்வகுக்குந் தாயாராகிய
சட்டசபை போலே
சமானம்வேறொரு கோயிலுமில்லை
சாமியும் கிடையாது

வரியைஎடுக்கும் வரிகளைப்போடும்
வழிகள் செய்துவிடும்
வறுமைப்பேயை நாட்டைவிட்டே
வழி துலைக்கேயோட்டும்

தேசத்தாரின் மானங்காக்கும்
தேசந்தனைக் காக்கும்
சின்னவம்பெரியவன் யாவரையும்ஒரு
சீராய்த்தான் பாக்கும்

ஆத்தாளுக்கும் மேலாயுள்ளது
அந்தச் சட்டசபை
அத்தனைபேருக்கும் பெத்தவள்போலே
ஆகிய சட்டசபை

அதனுக்குள்ளே உளவன்புகுந்தால்
யாரும் சகிப்பாரோ
அன்னைக்குப்பின்னே நோட்டம் பார்த்தால்
யாரும் சகிப்பாரோ ?

சிங்கமிருந்தது போலயிருந்தான்
தீரன் விட்டல்பாய்
சீறிஎழுந்தது போலவிழிச்சான்
தீரன் விட்டல்பாய்

போலீசுக்காரனை வெளியேதள்ளிப்
போடாபோவென்றான்
போகாவிட்டால் சபையையிளுத்துப்
பூட்டிடுவேனென்றான்

சட்டம்கொண்டு வருகிறதென்றால்
சர்க்கார் பயப்படுமாம்
தன்னுடைவிசேஷ அதிகாரத்தால்
சட்டம் போட்டிடுமாம்

பொதுஜனக்காவல் சட்டம்ஒன்றை
போடக்கொண்டுவந்தார்
பொதுஜனத்தாலே தேர்ந்துஎடுத்தவர்
போடாதே என்ருர்

இதுதனைஓட்டுக்கு விட்டுஎடுத்தார்
எண்ணும்போதினிலே
இவருடைஓட்டு ஒண்ணுல்சட்டம்
எகிறிப்போயிடிச்சாம்

சத்தியமூர்த்தியைக் கண்டாலெதிரியும்
சலாமு வைப்பானும்
தண்ணிபிரண்டது போலேபேசும்
தன்மைகண் டதனுல்

வைதாலுந்தான் கேட்டுக்கொள்வார்
வாய்தறந்தாப் போதும்
மணியும்முத்தும் ரத்தினமுருளும்
மாணிக்க மழைபோலே

பொன்மணிநாதம் போலேமுழங்கும்
புலாபாயி பேச்சு
பூமியெங்குமே இந்தியர்பேச்சைப்
புகழ்ந்து வரலாச்சு

இந்தநாளையில் சட்டசபைக்குள்
என்ன நடந்ததுபார்
இருபத்தியேழாமாண்டில் ஒருநாள்
என்ன நடந்ததுபார்

சடபடவென்றே குண்டுவெடிச்சது
சட்டசபைதனிலே
சர்க்கார்கட்சி மெம்பருசீட்டில்
தானே வெடிச்சதுவாம்

வெள்ளைக்காரன் பெஞ்சிக்கருகே
விழுந்ததுடா குண்டு
வீசியெறிஞ்சவன் கருப்பன்என்றே
விரட்டிப் புடிச்சாராம்

பகவத்சிங்கைப் பாஞ்சாலத்துப்
பாயும் புலிதன்னை
பதுங்கிப்போட்டவன் நீதானெனவே
பதறிப்புடிச்சாராம்

தத்தை, சுகதேவ், பகவத்சிங்கை,
தானே புடிச்சார்கள்
தண்டனைக்காகப்பலபல கேசு
தன்னை யெடுத்தார்கள்

செயிலுக்குள்ளே படுத்தினபாடு
செப்பவே முடியாது
சித்திரவதையே செஞ்சுவிட்டார்கள்
சிந்தை நோகச்செய்தார்

திருடவுமில்லை பொய்
சொல்லவில்லை திங்கச்சோறுண்டு
தேசத்துக்காகத் திடலடியாகத்
தியாகம் செய்தவர்தான்

தேசம்எங்கும் சந்தேகப்பேய்
திறிஞ்சு ஆடுதடா
திடும்திடும்எனப் புடிவாரண்டு
கிளம்பி ஓடுதடா

## தியாகி ஜதீந்திரநாத் தாஸ்

*இருந்த சிறைக்குள் வகுப்புபேதம் எத்தனையோவுண்டாம்
இராஜாங்கத்தையெதுத்தவனென்றால் எதுக்கும்கேவலமாம்

கைதிக்குள்ளேகருப்பன் வெள்ளையன் க்ளாசுவாரியுண்டாம்
செய்ததுகுத்தம் செயிலுக்குள்ளே செவப்புகருப்புண்டாம்

வெள்ளைக்காரக்கைதிகளென்றால் வேறொருநடவடியாம்
உள்ளவன்நம்மள்ஊர்க்காரனெனில் ஒருமாதிரிதானும்

இத்தைக்கண்டேசித்தம்வெறுத்தான் யதீந்திரநாத் தாஸ¬
இருபத்தெட்டேவயசுகளையா யதீந்திரநாத் தாஸ¬

இந்தக்கொடுமையைக்கண்டானையா யதீந்திரநாத் தாஸ¬
இந்தியன்கேவலமாச்சேயென்றான் யதீந்திரநாத் தாஸ¬

சிறைக்குள்ளும் நிறத்துவேசங்கண்டான் யதீந்திரநாத் தாஸ¬
சீச்சீஇதுஒருபிழைப்போஎன்றான் யதீந்திரநாத் தாஸ¬

சொத்தைவெறுத்தான்சுகத்தைவெறுத்தான் யதீந்திரநாத் தாஸ¬
சோத்தையும்வெறுத்துவிட்டானையா யதீந்திரநாத் தாஸ¬

உண்ணாவிரதம்புடிச்சுட்டானும் யதீந்திரநாத் தாஸ¬
தண்ணியுஞ்சோறுந்தள்ளிவிட்டானும் யதீந்திரநாத் தாஸ¬

வாரமுமொண்ணுஆச்சுதுஅய்யா யதீந்திரநாத் தாஸ்
வார்த்தையும்நின்னுபோச்சுதுஅய்யா யதீந்திரநாத் தாஸ்

ரெண்டாம்வாரம்ஆச்சுதுஅய்யா யதீந்திரநாத் தாஸ்
ரெத்தம்செத்துச்சோகைவெளுத்தான் யதீந்திரநாத் தாஸ்

மூணுவாரம்இருபத்தொருநாள் யதீந்திரநாத் தாஸ்
மூச்சும்பேச்சும்தடுமாறியதாம் யதீந்திரநாத் தாஸ்

நாலாம்வாரந்தவறிவிழுந்தான் யதீந்திரநாத் தாஸ்
நடமாட்டங்களும் விட்டானையா யதீந்திரநாத் தாஸ்

அஞ்சாம்வாரந்தொஞ்சுதுவண்டான் யதீந்திரநாத் தாஸ்
நெஞ்சிலேமட்டும்சீவனிழுக்குது யதீந்திரநாத் தாஸ்

ஆறும்வாரம்போராடுகிறான் யதீந்திரநாத் தாஸ்
அய்யய்யோஇதுகொடுமைகொடுமை யதீந்திரநாத் தாஸ்

ஏளாம்வாரம்இளுக்குதுமூச்சு யதீந்திரநாத் தாஸ்
நாளாசரிதிபில்கேவலமாச்சு யதீந்திரநாத் தாஸ்

எட்டாம்வாரம் திட்டுமுட்டுமாய் யதீந்திரநாத் தாஸ்
இளுத்துப்பிடிச்சேசிக்கிறானையா யதீந்திரநாத் தாஸ்

வாரம்ஒம்பதும்ஆச்சுதுஅய்யா யதீந்திரநாத் தாஸ்
ஈரம்வத்திப்போச்சுதுஅய்யா யதீந்திரநாத் தாஸ்

ரெண்டுகண்ணும்பஞ்சடைந்தது யதீந்திரநாத் தாஸ்
வரண்டுஉடம்பும் வத்திப்போச்சுது யதீந்திரநாத் தாஸ்

எண்ணம்மட்டும்தேசம்என்றே யதீந்திரநாத் தாஸ்
இதயங்கிடந்துஅடிக்குதுஅய்யா யதீந்திரநாத் தாஸ்

அறுபத்திநாலுதினம்பட்டினியால் யதீந்திரநாத் தாஸ்
ஆண்டவன்பாதம்சேர்ந்தானையா யதீந்திரநாத் தாஸ்

அழியாப்பெரும்பெத்தானையா யதீந்திரநாத் தாஸ்
அனியாயத்திலேசெத்தானையா யதீந்திரநாத் தாஸ்

குத்தங்குறைகளைக் கேட்டுச் சோறு கொடுக்கல்லே ராசாங்கம்
நித்தம்புதுப்புது சட்டம் போடவே நினைக்குது ராசாங்கம்

சத்தியவிரதம்புடிச்சே சீக்கிரம் சாவைத்தேடுகிறார்
சாட்டியகுத்தம் வீணாப்போகுது தண்டனையில்லாமல்

குத்தவாளிகள் ஆசரில்லாமல் குறைபட்டகேசுகளை
கூடியசட்சியே தீர்த்திடலாமெனக் கொண்டுவந்தார்சட்டம்

எங்குபாத்தாலுஞ் சட்டஞ்சட்டஞ் சட்டஞ் சட்டமுடா
எதுக்கெடுத்தாலும் சட்டம் சட்டம் ஈசல் கிளம்புதடா.

## 1929 லாகூர் காங்கிரஸ், பரிபூர்ண சுயேச்சை

### ஜவஹர்லால் நேரு தலைமை

முப்பதாம் ஆண்டு முதல்தேதி
முப்பத்திமுக்கோடி இந்தியரும்
அப்பனுமாயியுந் தேசமென்றே
ஆணையிட்டுள்ள கதைகேளும்

வருசமும் ஒண்ணு கடந்தாச்சு
வாயிதாச் சொன்னதும் பாத்தாச்சு
மாசம் பனிரெண்டுந் தானாச்சு
வாக்குக் கொடுத்ததும் போயாச்சு

போட்ட கெடுவும் கடந்தாச்சு
போக்குவரத்தொரு சேதியில்லே
கேட்டகுடியேத்த நாட்டாச்சி
கிட்டவருவதும் காணவில்லை

காங்கிரஸ்லாகூரில் கூட்டமிட்டு
காந்தியைத் தலைவராக்கிவிட
காந்தி மகாத்மா என்ன செஞ்சார்
காளை ஜவஹரைக் கவுரவித்தார்

### தந்தையும் மகனும்

சின்னச்சின்ன சமஸ்தானமெல்லாம்
சிதறிக்கிடந்திடுஞ் சீமையிது
ஒண்ணு இரண்டல்ல ஆயிரமாய்
உள்ளசமஸ்தான முண்டுமிங்கே

அஞ்சுலச்சஞ்சனந் தானிருப்பார்
அதுக்கொருமன்னன் தானுமுண்டு
பத்துலச்சங் குடிமக்களுக்கே
பட்டத்தைக் கட்டிய ராஜனுண்டு

பட்டத்துயானை குதிரையுண்டு
பரிவாரங்களும் மெத்தவுண்டு
பவனி தசராக் காக்ஷியுண்டு
பாடும்புலவரும் மெத்தவுண்டு

குண்டுமரியாதை தானுமுண்டு
கும்பிட்டு நிற்பவர் தானுமுண்டு
தண்டுசைனியந் தானுமுண்டு
ஜமே தாரு மாருமுண்டு

சட்டமுந் திட்டம் வகுத்திடலாம்
தானேவரிகளுந் தண்டிடலாம்
இட்டம்போலவரும் நடந்திடலாம்
ஏசண்டு துரையைக் கேட்டுக்கிட்டு

அய்நூத்திச் சொச்ச மரசருக்கும்
ஆளுங்குடிபடை யெட்டுக்கோடி
ஆனாலிந்தியக் காங்கிரஸில்
அடக்கம் முப்பத்தியஞ்சுகோடி

முப்பத்தியஞ்சரைக் கோடிக்குமே
முடிபுனைந்தார் ஜவஹரிலால்
மோதிலால்நேருவின் கையாலே
முடிபுனைந்தார் ஜவஹரிலால்

தந்தைமகனுக்குத் தானளித்தார்
தாரணித்தலைமை தன்னையயா
மைந்தனைத்தேசந் தலைவணங்க
மகிழ்ந்துகண்டார் தந்தையுமே

வச்சிருந்தபணந் தானிருந்தால்
வைரக்கிரீடம் அளிச்சிருப்பார்
மிச்சம்புடிச்சிட்ட சொத்திருந்தால்
மின்னும்மணிமுடி செஞ்சிருப்பார்

தேசத்துப்போரி லிறங்கிவிட்டார்
திரவியங்கோடி பறிகொடுத்தார்
வீசமரைக்காலு மில்லையயா
வீட்டையும்நாட்டுக் களித்தமகான்

கோடிக்கணக்கில் பணமுமுண்டு
கோர்ட்டுப்பீசொரு கோடிவரும்
நாடியநாட்டுப் பணிக்குமுன்னே
நவநிதியுங் கொழிச்சிருந்தார்

இத்தனைசொத்துக்கும் ஒத்தைமகன்
ஏண்டதவம்பண்ணிப் பெத்தமகன்
முத்தேமணியேயென் செல்வமென்றே
மோதிலால் நேரு வளர்த்தமகன்

பையனைச்சீராட்டிப் பாலூட்ட
பத்தெட்டுத்தாதியும் வச்சிருந்தார்
பந்தடிச்சோடி விளையாட
பளிங்குமேடை யமைச்சிருந்தார்

நீந்திக்குளிச்சு விளையாட
நீராழிமண்டபங் கட்டிவச்சார்
பூவும்பறிச்சு விளையாடப்
பூங்காவனமும் போட்டுவச்சார்

துள்ளிக்குதிச்சு விளையாட
டில்லிமட்டங்களும் வாங்கிவிட்டார்
பள்ளிப்படிப்புக்குச் சீமைக்குமே
பயணம்பண்ணி யனுப்பிவிட்டார்

பையன் ஜவஹர் பரிட்சைதேறி
பாரிஸ்டராகத் திரும்பிவந்தான்
பாத்துக்களிச்சார் தந்தையுமே
பாங்குக்குடித்தனம் வைக்கவெண்ணி

கண்ணுக்கினியவள் ராசாத்தி
கல்வியில்மெத்தக் கரைகண்டவள்
பெண்ணுக்குப் பெண்ணசை கொள்ளுமந்த
பேரழகிடில்லிப் பெண்ணொருத்தி

நேருவழகுக்கு நிகரழகாய்
நின்னஉசரஞ் சரிசமமாய்
யாரும்புகழ்ந்திடும் பாக்யவதி
யானகமலாவைப் பாத்துவந்தே

கமலாதன்னையே தேடிவந்து
கண்ணலங்கட்டிய காட்சிதன்னை
காணக்கண்கோடியும் வேணுமையா
காசும்பணமு மிரைச்சுவிட்டார்

சம்பந்திபோகத் தனிரயிலாம்
தங்கவேடில்லியும் பத்தலையாம்
டேராப்போட்டுத் தானிறங்கி
டில்லிஅமக்களப் பட்டதுவாம்

இந்தப்படிக்குள்ள நாளையிலே
இந்திரபோகத்தில் வாழையிலே
வந்ததுஒத்துழை யாமைஅதில்
வாரிவிளுகுது தேசமெல்லாம்

மோதிலால்நேருவுந் தானதிலே
முன்னணியாக விருந்தாலும்
மூண்டுவரும்போரில் தன்மகனும்
மோகங்கொண்டதைக் கண்டதுமே

காங்கிரஸ்சேதி படிக்கிறதும்
காந்தி உபதேசங் கேக்கிறதும்
ஆங்கிலராஜ்யக் கொடுமைகண்டே
அலறித்துடியாத் துடிக்கிறதும்

மீட்டங்கிகீட்டங்கி தான்நடந்தால்
மின்னலேபோயி உக்காருவதும்
கூட்டத்தில்பேசின பேச்சையெல்லாம்
கொண்டுவந்தே வீட்டில் கொட்டுறதும்

சாடையும்மாடையு மாகக்கண்டார்
தன்னுடநெஞ்சில் பயமுங்கொண்டார்
வீடையும்வாசலும் விட்டுப்பிள்ளை
வீரக்கனலில் குதிச்சிடுமோ

பெத்தமகனைச் செயிலுக்குள்ளே
பிடிச்சு அடைச்சுப்போடுவரோ
ஒத்தைமகனைச் செயிலுக்குள்ளே
ஒண்டியாகத்தள்ளிப் போடுவரோ

செல்லமகனைச் செயிலுக்குள்ளே
செக்கைஇழுத்திடச் சொல்லுவரோ
கல்லையுடைக்கவும் சொல்லுவரோ
கைகளிரண்டும் வலிச்சிடுமோ

பஞ்சணைமெத்தையில் கண்ணுறங்கும்
பாலன்தரையில் படுத்திருந்தால்
நெஞ்சுவலிக்கும் உறுத்திடுமே
நெரிஞ்சிமுள்ளைப்போ லாகுமென

கையைத்தலைக்கு ஒசரம்வச்சே
கட்டாந்தரையில் படுத்துக்கிட்டார்
பையனைப்பெத்து வளத்தெடுத்த
பத்தினியாளும் பாத்துக்கிட்டே

என்ன அதிசயம் பாறையிலே
ஏனோபடுத்து இருக்கிறீங்க
என்றதும்மோதிலால் நேருமனம்
இளகியழுதுமே சொல்லுவராம்

செல்லமகனைச் செயிலுக்குள்ளே
சீக்கிரம் தள்ளியே பூட்டிடுவார்
நல்லபடுக்கை தரமாட்டார்
நாத்தத்தரையி லுறங்கச்சொல்வார்

பஞ்சணை மெத்தையில் கண்ணுறங்கும்
பாலகன் செயிலில் எப்படித்தான்
படுத்திருப்பானெனப் பார்த்தேண்டி
பத்தியெரியுது தேகமெல்லாம்

என்று தவிச்சுத் துடித்திடுவார்
ஏதும்புரியாமத் தாந்தவிப்பார்
நன்றுபுரிகிற பிள்ளையிடம்
நாமென்னசொல்வது என்றிடுவார்

நாட்டுத்துயரத்தை நானுங்கண்டேன்
நல்லமகனவன் ரூனுங்கண்டான்
வீட்டிற்குள்ளிருக்க முடியுதில்லே
வீரப்பரம்பரை யானதினல்

பிள்ளைவழியது நல்லவழி
பெத்தபெருமை நமக்குவுண்டு
செல்லமகனைத் தடுக்கவில்லை
சேர்ந்திடுவேனடி நானுமதில்

என்மகன் செய்திடுங் காரியங்கள்
என்றைக்கும் பொன்னி லெழுதப்படும்
தன்மகன் செய்திடும் காரியத்தில்
தந்தையும் தாயும் குதித்திடுவோம்

என்றுதுணிந்து இறங்கிவிட்டார்
எல்லோரும் காந்திவழிதனிலே
அன்றுமுதல் ஒரு ஆண்டுக்குள்ளே
அப்பனும் பிள்ளையும் சிறைபுகுந்தார்

ஒத்துழையாமை யியக்கத்துக்கே
ஒத்தமகனுடன் போய்வாரேன்
பெத்தமகனையும் கூட்டிக்கிட்டே
பெருமையுடன் செயில்போய் வாரேன்

சத்தியமார்கத்தில் போர்புரிவீர்
தாயுங்குழந்தையுந் தான்வருவீர்
நித்தியமான சுதந்திரமே
நெருங்கிவந்திடச் செய்திடுவீர்

என்றுகொடுத்தார் ஸ்டேட்டுமெண்டு
இந்தியதேச முயர்ந்ததையா
இந்தப்படிக்குள்ள தந்தைமகன்
எந்தத்திசையிலும் வந்ததுண்டோ

வேல்சு அரசர் விஜயத்தையே
விரும்பாக் குத்தத்துக்காளாகி
மேன்மைமிகுந்திடும் மைந்தனுடன்
மிடுக்காய்ச் சிறையில் புகுந்துவிட்டார்

வீட்டைக்கவனிக்க யாருமில்லை
வேலை வெட்டிசெய்ய நேரமில்லை
நாடடுக்குழைக்கவே காலமெல்லாம்
நாளும்பொழுதுமே போதவில்லை

தோட்டத்துப்பூஞ்செடி பட்டதைய்யா
தோப்புத் துறவுகள் தூர்ந்ததையா
காட்டுக்குமேலாகிப் போச்சுதையா
காரையுஞ் சூரை முளைச்சுதையா

வாரண்டு ஜப்திகள் வந்ததையா
வண்டியைக் காடியை ஜப்திசெய்தார்
ஈரங்கி வாயிதாக் காட்டவில்லை
ஏலத்தில்போனது செல்வமெல்லாம்

நேரு குடும்பத்துக்கே நிகராய்
வேறுகுடும்பமு மில்லையென்றே
யாரும்புகழவே மாநிலத்தில்
அழியாக் கீர்த்தியும் பெற்றமகான்

செல்வத்தைத் தேசத்துக் கீந்துவிட்டார்
தேசத்தைச் செல்வனுக் கீந்துவிட்டார்
கல்விகள்மெத்தவும் கத்தவரே
கண்டதுண்டோ இந்தக் காட்சியையே

தாயின்மணிக்கொடி தன்னையந்த
தநயன் கையில் கொடுத்துவிட்டே
தன்னுட நாட்டுத் தலைவனென்றே
தந்தை வணக்கஞ் செலுத்திநின்றார்

காந்திமகானுமிக் காட்சிதன்னை
கருத்தில் பூரித்துப் பார்த்து நின்றார்
சாந்திமகத்துவம் தன்னைச்சொல்லத்
தந்தைமகனுமே சாட்சியென்றார்

தேசத்து மக்களும் நேருமகான்
தியாகத்தைக்கண்ட பெருமையிலே
மாசற்ற தேசப்பணி தனக்கே
மக்கள் மனைபொருள் தத்தமென்றார்

## சுதந்திரப் பிரமாணம்

ராவி நதியில் தலைமுழுகி
ரத்தப்பொட்டுபோல் திலகமிட்டு
ஆவி யுடல் பொருள் அத்தனையும்
அர்ப்பண மென்று ப்ரமாணமிட்டார்

அஞ்சு நதிகளைச் சாக்கிவச்சார்
ஆகாசம் பூமியைச் சாக்கிவச்சார்
செஞ்சடை வீசி யெழுந்துவரும்
செங்கதிரோனையும் சாக்கிவச்சார்

சத்தியந்தன்னை மகன் படிக்க
தந்தைப்ரமாண மெடுத்துக்கிட்டார்
தலைவர் ஜவஹர்லால்படிக்க
தாரணிமக்க ளெடுத்துக்கிட்டார்

இந்தியதேசம் சுதந்திரமாய்
என்றென்றும்பூமியில் வாழச்செய்வோம்
இங்லீஷ்காரரின் கையைவிட்டு
எங்களின் நாடிதை மீளச்செய்வோம்

சத்தியமார்க்கத்தில் போரிடுவோம்
சாந்திவழிதனில் போரிடுவோம்
நித்தியமாகிய அன்புதன்னை
நெஞ்சில் துணைகொண்டு போரிடுவோம்

காங்கிரஸ் கூட்டத்தி னுணைப்படி
காலம்முச்சூடும் நடந்திடுவோம்
தாங்கிடுவோமெந்தத் தண்டனையும்
தாயைவிடுதலை செய்திடுவோம்

சத்தியப்போரைச் செய்யுமையா
சாந்தமகானே யெங்களுக்கு
வெத்தியைவாங்கித் தந்திடுவீர்
வீரப்பிதாவே யென்றுரைத்தார்

காந்திக்கிழவனும் ஏத்துக்கிட்டார்
கையில்தடியைப் பிடிச்சுக்கிட்டார்
சாந்தக்கிழவனும் நாட்டாண்மை
தன்னைத்தலையிலே தாங்கிக்கிட்டார்

# மகாத்மா காந்தியடிகள்

## நடத்திய உப்பு சத்தியாக்ரகம்

## 1930

சாந்தகுணமலே காந்திமகான்செஞ்ச
சத்தியப்போர்க்கதை சொல்லிடவே
சந்ததம்வந்துநல் வாக்குதவி நல்ல
சந்தமுந்தாருஞ் சரஸ்வதியே

இந்திரந்தேவரும் வந்துபிறந்திடும்
இந்தியபாரத பூமியிலே
இன்பம் விளையோணும் துன்பந்துலேயோணும்
ஏழையும் நன்ருக வாழவேணும்

என்றெங்கள்காந்தி நினைத்துக்கிட்டே யதை
எண்ணியேரொம்பவும் யோசனையாய்
இர்வின்பிரபுவென்னும் ராஜப்ரதிநிதிக்
கிப்படியாகவோர் கடலாசி

### வைஸ்ராய்க்குக் கடிதம்

ஐயா ஆங்கில சர்க்காரே
அடியேன்விண்ணப்பம் கேட்டிடுவீர்
அந்தநாள்விக்கவே வந்தவர் நீர்
அடிமைகளாகவே ஆக்கிப்பிட்டீர்

நீங்கள்புகுந்ததினம் முதலாய்
நேருக்குச்சாப்பாடு போரவில்லே
வந்துப்புகுந்திட்ட நேரப்பலன்
வகுத்துச் சோத்துக்கும் பத்தவில்லே

எழுதப்படிக்கத் தெரியவில்லே
என்னபடிச்சும் புரியவில்லே
இப்படியாகவே ஆண்டுப்பிட்டீர்
எங்கள் தவருதல் என்னசெய்வீர்

பத்துப்பதிஞேரு சீர்திருத்தம்
பாங்காகச்செய்து தந்துவிட்டால்
சட்டமறுப்பிப்போ செய்வதில்லே
சத்தியமென்ருெரு காயிதத்தில்

காந்திமகராஜன் எழுதிவிட்டார்
கைநாட்டும்அதில் போட்டுவிட்டார்
சாந்தமுடன்திட்டம் பதினொண்ணையும்
தாருங்களென்று கேட்டுவிட்டார்

கள்ளுக்கு மேவரிப் போட்டுவிட்டீர்
காசுகிடைக்கிற காரணத்தால்
கண்ணுக்குநேரே தெரியும்படி
கள்ளுக்கடைகள் திறந்துவிட்டீர்

முட்டாக்குப்போட்டு மறைஞ்சிருந்தே
மூடிக்குடிக்கிற நாட்டினிலே
கட்டாயமாய்கள்ளு விக்கச்சொல்லி
காசுக்குமானத்தைப் போக்கிவிட்டீர்

கள்ளுச்சாராயங்கள் போதைகளும்
கட்டோடேநீங்களொழிக்கவேணும்
காசைவரியை நினைச்சுக்கிட்டே
கள்ளைக்கொடுத்துக் கெடுக்காதீர்

எங்கள்பணத்தை குறைமதிப்பாய்
எண்ணும்வளக்கத்தை மாத்தவேணும்
தங்கமதிப்புக்குஎங்கள் வெள்ளி
தன்னைக்குறைக்காமல் பார்க்கவேணும்

நிலத்துக்குப்போட்ட வரிதனையே
நெட்டுக்கும்பாதியா யாக்கவேணும்
குலத்தினைக்காக்கும் தொழிலினுக்கே
கொள்ளைவரிப் போட்டுவாங்குவதோ

ஓட்டைக்கலையத்தில் கூழ்குடிக்கும்
உப்புவரியை யெடுக்கவேணும்
நாட்டைக்கலக்குஞ் சிப்பாய்சிலவை
நாலையிரண்டாக ஆக்கவேணும்

அள்ளிக்கொடுத்திடும் சம்பளத்தை
அரைவாசிதான் கொடுக்கவேணும்
அன்னியநாட்டுத் துணிகளுக்கே
அதிகவரிப்போட்டு வாங்கவேணும்

இந்தியக்கரையில் வாரகப்பல்
எங்களுக்கே வரிக்கட்டவேணும்
சிந்தியேரத்தக் கொலைபுரியா
தேசீயக்கைதியை விட்டுடணும்

நாடுகடத்திய பேரையெல்லாம்
நடுநாட்டுக்குக் கொண்டாரவேணும்
வீடுகடத்திய பேரையெல்லாம்
விரைவிலே கூப்பிட்டுத்தாரவேணும்

ரகசியப்போலீசு ராச்சியத்தை
ராவோடுராவா வொழிக்கவேணும்
அவசியமாகிய ஆயுதத்தை
அல்லாருமிங்கே தரிக்க வேணும்

இந்தப்பதினொண்ணும் செஞ்சுவிட்டால்
இப்போது சட்டமறுப்புஇல்லை
என்றுஅவர் ரொம்பசத்தியமாய்
எழுதியனுப்பவே ராசாங்கம்

என்னென்னசெஞ்சது பாப்பமுன்னால்
எழுதமனங்களுங் கூசுதையா
இந்தியசிங்கம் சுபாஷ்போஸும்
இன்னும் பதினொருபேரையுமே

இருட்டோடிருட்டாக் கைதிபண்ணி
இட்டார்சிறையில ஒருவருசம்
குருட்டாட்டங்களும் ஆடிவிட்டார்
குண்டுமருந்துகள் செய்துவிட்டார்

சட்டசபைமோகம் விட்டதையா
சகலமெம்பரும் வேலைவிட்டார்
நூத்திஎழுபத்திரெண்டு மெம்பர்
நொடிப்பொழுதிலே வேலைவிட்டார்

காந்திமகானின் கட்டளைக்கே
காத்துக்கிடக்குது தேசமெல்லாம்
கவர்மெண்டாரும் கம்பெடுத்து
காத்துக்கிடந்தார் பூசையிட

கட்சிமகாநாடு கூட்டுகிறோம்
காங்கிரஸே பதருமவிரு
தம்பிபொறுபொறு தந்துடுரோம்
தகுந்தசமயம் வந்துடட்டும்

என்றொருகாயிதம் தானெழுதி
எதிர்ப்புக்குத்தயார் செய்துப்பிட்டார்
இந்தநிலைமையில் காந்திமகான்
இந்தியமக்களைக் கூட்டிவைத்தே

### சத்யாக்ரகிகளுக்கு உபதேசம்

என்னண்ணந்தம்பியே யிந்தியரே
என்னுடன் கூடப்பிறந்தவரே
என்னுடவார்த்தையைக் கேட்டுக்குங்கோ
ஏதும்பிழை செய்யக்கூடாது

ஆளும்பிரிட்டன் பணக்காரன்
அடிதடிச்சண்டையில் பேர்பெத்தவன்
நாளும் உதிக்கிறசூரியனை
நாலெட்டுத்திக்கிலும் பாக்குறவன்

பூமியில் பாதிக்குமேலாக
புடிச்சுக்கொடியும் பறக்கவிட்டான்
புத்தியில்மெத்தவும் வல்லவனும்
புண்ணியபாவத்துக் கஞ்சானே

ஆண்டுபழகிய கூட்டமது
அடக்கியாளும் பெரும்பிரிட்டன்
அவனோடே சண்டைதொடங்கிருக்கோம்
ஆயுதமின்றி தொடங்கிருக்கோம் 1100

சகலதேசமும் பாத்திருக்க
சத்தியப்போரை தொடங்கிருக்கோம்
உலகமெல்லாம் பாத்திருக்க
உத்தமப்போரை தொடங்கிருக்கோம்

அடிஉதைபட்டு விளுந்தாலும்
ஆத்திரங் கொண்டிடக்கூடாது
கொல்லுக்கொலைவந்து நேந்தாலும்
கோபம் கொண்டிடக்கூடாது

அந்தக்கன்னத்தி லடிவிளுந்தால்
அடுத்தகன்னத்தைக் காட்டவேணும்
இந்தக்கன்னத்தி லடிவிளுந்தால்
இன்னொருகன்னத்தைக் காட்டவேணும்

துப்பாக்கிக்காரஞ் சுடவேவந்தால்
தூணைப்போலெதிரில் நிக்கவேணும்
எப்போதுந் தைரியமாயிருந்தே
என்னவந்தாலுந் தாங்கவேணும்

கோழைகளாகவே வாழாதீர்
கொல்லுக்கொலைகளுஞ் செய்யாதீர்
ஏழைகளாகவே வாழ்ந்தாலும்
ஏந்திக்குடிச்சுப் பிழைக்காதீர்

சாவுதனக்கஞ்சக் கூடாது
சத்தியம் மாறவுங்கூடாது
தைரியம் விட்டுடக்கூடாது
தடியெடுக்கவுங் கூடாது

ஆறுவயசிலுஞ் சாவதுண்டு
அம்பதுநூறிலுஞ் சாவதுண்டு
நூறுவயசிலுஞ் சாவதுண்டு
நோக்காடுவந்துஞ் சாவதுண்டு

பூமியிதனில் பிறந்துவிட்டால்
போகாதிருக்கமுடிஞ்சுடுமோ
தரையில்முளைக்கிற புல்பூண்டும்
சாகாதிருக்கக்கண்டதுண்டோ

வாழுவதாகவே தானிருந்தால்
மானத்தோடயே வாழவேணும்
ஆனந்தமாகப் பிறந்ததுபோய்
அடிமைகளாகியே வாழுவதோ

வீட்டுக்கொருபிள்ளைதான் கிளம்பி
வெத்திக்குழைக்கவரவேணும்
நாட்டுக்குழைக்க மனிசரெல்லாம்
நான்முந்திநீமுந்தி யாகவேணும்

அருணாக்கட்டிய பிள்ளையெல்லாம்
அகிம்சைச்சண்டைக்கு வரவேணும்
மீசைமொளச்ச மனுசனெல்லாம்
மின்னேறிவந்து நிக்கவேணும்

புள்ளைப்பெத்தென்ன பலனுமுண்டோ
பூமிக்குப்பாரமும் பத்தாதோ
அடிமைகளாகவே புள்ளைப்பெத்து
அந்தப்புள்ளைதிட்ட ஆத்தாளோ

கைகட்டி வாயும்புதைச்சுக்கிட்டு
காலாலிட்டதைச் செஞ்சுக்கிட்டு
பொய்சொல்லிசோத்துக்குழைச்சிக்கிட்டு
போகவேபிள்ளையும் பெக்குறதோ

ஆத்தாமாரெல்லாம் சேந்திடுங்கோ
அறியாப்பெண்களும் வந்திடுங்கோ
தேசப்பணிசெய்யத் திட்டமிட்டோம்
சேரவேவாரும் செகத்தீரே

என்னையன் காந்தியுஞ்சொன்னதுமே
இந்தியச்சீமையும் முன்னேவந்து
என்னென்னசெஞ்சிட வேணுமையா
எங்களுயிர் உங்களுத்தரவில்

சொத்துசுகத்தைத் தொடமாட்டோம்
சொந்தநாட்டுக்குத்தானுழைப்போம்
சத்தியமென்றது தேசமெல்லாம்
சட்டமறுப்புக்குத் தேதிவச்சார்

உப்பு

*முப்பக்கம் கடலிருக்கும் உப்புவயல் உண்டு
மூழங்காலு ஆழத்திலே முடிச்சுப்பு உண்டு

உப்புக்கு உறவரென்ற ஒரு சாதியுண்டு
ஒருமட்டு ஆளத்திலே உப்பெடுப்பதுண்டு

இந்தியாவிலுப்புதனக் கெங்குமில்லை பஞ்சம்
இந்த நாட்டு உப்புஒண்ணே யெங்குங் கண்டு மிஞ்சும்

கப்பலிலே வந்திறக்கி உப்பை விக்கிறாங்க
தப்பிதமாம் உப்பெடுத்தால் தண்டம் வைக்கிறாங்க 1120

கஞ்சி தனக்குப்பிடவே கடல்படைச்சான் சாமி
காசுபண்ணிப்போட வொரு கட்டுவச் சானிவனும்

ஒப்பனையாச் சக்கரையை யொவ்வொருத்தன் தின்பான்
உப்புத்தின்னாத் தனிமனிச னொருத்தனுமேயில்லை

சிறியவரும் பெரியவருந் தின்றுவரும் உப்பு
செல்வர்களுமேழைகளும் சேத்துக்கொள்ளுமுப்பு

மோருக்குப்பு கூழுக்குப்பு மொளகாய்க்கும் உப்பு
முடாறுநனையக் குடிக்கும் காடிக்குமே உப்பு

முப்பதுகோடிப் பெயரும் உப்புத்தின்னும் சாதி
சொப்பமில்லை வரிவிதிச்சாச் சொமந்த பணங் கூடும்

ஒண்ணரைப்பணம் விலைக்கு ஒவ்வொருத்தந்தானும்
உப்புத் திங்கிராங்களென கணக்கெடுத்தாங்காணும்

என்றிவரும் கணக்கெடுத்து இந்த வரிப்போட்டார்
தின்றுவருஞ் சோத்துவரி தீனிவரிப்போட்டார்

பொன்னுவிளைகின்ற நிலம் பூவிளையும் பூமி
பொங்குகடலோரமதுப் பூமலருந் தேசம்

எங்கள் கடல் எங்களது ஏழைகளுக்குப்பு
பொங்குகடல் எங்களது போசனத்துக்குப்பு

மானம் மழைதான் பொழிய வைத்ததொரு தண்ணீர்
வாரியுப்புக்குண்டு வரி வாயிதாவுமென்றால் 1130

காத்துக்குமே வரிவிதிப்பார் காசுபணங்கேப்பார்
காலையிலே உதிச்சுவரும் கடவுளுக்குங் கேப்பார்

பவுர்ணிமை நிலவுக்குமே பவுனு வரிப்போட்டு
பஞ்சைகளின் தேசமிதைத் தொஞ்சுவிடச் செய்வார்

உப்புப்போட்டுத் திங்குமுன்னே ஒவ்வொருத்தன்தானும்
யோசனைகள்பண்ணிப் பின்னேயுண்டு ருசிபாரும்

இலைபோட்டுச் சோறுதிங்க எதிரிலே உக்காந்து
இந்த வரிக்கொடுமை தனையெண்ணமிட்டுப் பாரும்

ஆதலினால் சொரணையுள்ள அத்தனைபேர்தானும்
ஆயிரமும் லட்சமுமாய்ப் போரிடவேவாரும்

உப்புச் சட்டமென்பதொரு துப்புக்கெட்ட சட்டம்
உடச்செறியப் போவதென்றே ஒதுக்கிவிட்டோந் திட்டம்

தண்டி யெனும் ஊரிலுள்ள பண்டகசாலையிலே
தானுமுப்பையள்ளிச் சட்டந் தகர்த்துவிடப்போறோம்

மார்ச்சுமாதம் பதினொன்றும் தேதியிலே டாண்டி
மார்ச்சுசெய்யப் புறப்பட்டுட்டார் மகாத்துமா காந்தி

### தண்டி யாத்திரை

*சட்டமறுப்புத் துவக்கிவிட்டார் சர்க்காருக்குமே சொல்லிவிட்டார்
சபர்மதியாச்ரமந் தன்னைவிட்டு சாந்தமகாத்மா தானெழுந்தார்

கூடப்பிரப்பட்ட பேர்களெல்லாம் கோயிலில்கும்பிடத்தக்கவராம்
என்னைக்கும் சத்தியம்மாருத எழுபத்திரண்டு பேருடனே 1140

கையில் தடியைப புடிச்சிக்கிட்டார் கச்சத்தை வரிஞ்சு கட்டிக்கிட்டார்
அய்யனைத்தான் பதியாயடைந்த அம்மாளையுமே விட்டுவிட்டார்

காந்திமகாத்மா புறப்பட்டுவிட்டார் கடற் கரையைநோக்கி
சாந்தமகாத்மா புறப்பட்டுவிட்டார் சாத்துமிகப்போரில்

கத்திஎடுத்தே வெத்திகொண்டாலும் கவர்மெண்டார்பேரில்
சத்தியத்தாலே வெத்தியையடைய சாந்தன் புறப்பட்டார்

கையில் தடியெடுத்துக்
கச்சை யிறுக்கிக்கட்டி
காந்திக்கிழவர் நடை போடுறார் போடுறார் போடுறார்

பையன் சிறுவருமே
பாட்டன் நடையைக்கண்டு
பதறிப்பதறிக்கூட ஓடுறார் ஓடுறார் ஓடுறார்

தெய்வப் பிறப்பெடுத்து
தேசத்தைக் காக்கவந்த
சீலனு முப்பெடுக்க ஓடுறார் ஓடுறார் ஓடுறார்

தேசந்திரண்டுவந்து
சேவிச்சிக் கும்பிட்டுமே
செயமும் பெருகுதென்று பாடுறார் பாடுறார் பாடுறார்

நாளைக்குக் காதவளி
நீள நடந்துக்கிட்டு
நல்லவர் உப்பெடுக்கப் போகவே போகவே போகவே

வேளைக்குச் சோறுதின்னு
வேட்டிக்குக் கண்டையிட்ட
மேனிமினுக்கங்களும் ஏகவே ஏகவே ஏகவே

குங்குமப் பொட்டுவச்சு
மங்களத்தட்டுச்சுத்தி
கும்புடுபோட்டுசனங் கூடவே கூடவே கூடவே

குஞ்சுகுழந்தைகளும்
எங்களின் காந்தியென
கோஷங்கள் போட்டுப் பாட்டு பாடவே பாடவே பாடவே

காதமிருபதுள்ள
கடக்கரை யுப்பளத்தில்
கைவைச்சு உப்பெடுக்க எண்ணினார் எண்ணினார் எண்ணினார்

நாதனருளதனால்
நாமும் மனுசனென்று
நாடெங்குமே நினைக்கப் பண்ணினார் பண்ணினார் பண்ணினார்

நித்தமும் பத்துமைல்
நீள நடந்துக்கிட்டு
நேசமதப் பிரசங்கஞ் செய்யுறார் செய்யுறார் செய்யுறார்

நேரடிக்கண்டவர்கள்
சீரடிச்சேவடியில்
நிதிநவ மணியள்ளிப் பெய்யுறார் பெய்யுறார் பெய்யுறார்

மண்ணில் உடம்பெடுத்தால்
மரணமிருக்கிறது
மானம் பெரிசுஎன்று சொல்லுடா சொல்லுடா சொல்லுடா

விண்ணையும் மானமென்றே
சொன்ன கருத்துணர்ந்து
வீரத்துடனே வாழ்ந்து வெல்லுடாவெல்லுடா வெல்லுடா

மன்னவன்வாழவென்று பாட்டுப்படிச்சிக்கிட்டு
மனுவையும் போட்டுப் போட்டு
பாத்திட்டோம் பாத்திட்டோம் பாத்திட்டோம்

இன்னைக்கித் தந்திடுவான் நாளைக்கித் தந்திடுவான்
என்றே வருசமெல்லாம்
காத்திட்டோம் காத்திட்டோம் காத்திட்டோம்

கத்திபிடிச்சுக்கிட்டு சத்தமும் போட்டுக்கிட்டு
சுத்திச்சுரண்டி யவன்
பேத்துட்டான் பேத்துட்டான் பேத்துட்டான்

நித்தமுந்தான் கறக்கும் உத்தமமானபசு
நீங்கிடக்கூடாதுன்னு
பாத்துட்டான் பாத்துட்டான் பாத்துட்டான்

கஞ்சிக்குங் கூழுக்குமே பஞ்சப்பட்டே தெரிச்சு
கெஞ்சிக்குடிச்சிக்கிட்டுச்
சாகுறோம் சாகுறோம் சாகுறோம்

வஞ்சிக்கு மந்நியனே நெஞ்சிலிரக்கமின்றி
வாரிக்கொண்டே
நித்தமும் ஏகுறான் ஏகுறான் ஏகுறான்

நாட்டில் பிறந்தவர்கள்
கூட்டமுங் கூட்டமாக
நாலு திசைக்கும் போயி வாழுரூர் வாழுரூர் வாழுரூர்

வேட்டைக்கு வந்தவனே
மேனி மினிக்கிக்கிட்டு
வீட்டைப் புடிச்சுக்கிட்டு ஆளுரான் ஆளுரான் ஆளுரான்

சாகத் துணிந்துவிட்டோம்
சமுத்திர தீரந்தன்னில்
தண்டியில் உப்புவாரப் போகிறோம் போகிறோம் போகிறோம்

கையுப்பு தன்னையள்ளிக்
காட்ட வகையில்லையேல்
கடலில் விழுந்து அங்கே சாகிறோம் சாகிறோம் சாகிறோம்

உப்பை யெடுத்துச் சட்டம்
உடைச்சு எறிஞ்சுப்பிட்டு
ஊருக்குள்ளே திரும்பப் போகிறோம் போகிறோம் போகிறோம்

ஒருபிடி உப்பு அள்ள
உரிமையு மில்லையென்றால்
ஊசல் பிழைப்பைவிட்டுச் சாகிறோம் சாகிறோம் சாகிறோம்

வெத்தி கிடைச்சுவிட்டால்
வெரைவில் திரும்பிவந்து
நெத்திக்குக் குங்குமமுந் தீட்டுவோம் தீட்டுவோம் தீட்டுவோம்

வெத்தி கிடைக்கலையேல்
செத்து மடிஞ்சிடுவோம்
விடுதலை பெத்துவழி காட்டுவோம் காட்டுவோம் காட்டுவோம்

*என்றேசொல்லிப்போகுது ஐயா இந்த நாட்டுச் சேனை
எல்லா நாடும் பாக்குது ஐயா இந்தியாவைத்தானே

தெய்வம்போலே காந்தியைப் பாத்துச் சீமை நடுங்கிப்போச்சு
தெக்குவடக்கும் பேசினபேரு திமிரு ஒடிங்கிப்போச்சு

சத்தியப்போரைப் பார்த்துச்சீமைச் சனமுந் திகைக்குதாம்
சாத்துமீகமே கனலாயனலாய் காந்தித் தகிக்குதாம்

சீமையிலே இதைக் கேட்டுக்கேட்டுச் சனங்கள் பேசுதாம்
செயிச்சுக்கிட்டோமோ இந்திய நாட்டைத் திருப்பு மென்குதாம்

தேசதேசமாய்ச் சேதி பறந்து தீப்போல் புடிக்குதாம்
தெய்வம் சகிக்காச் சேதியிதென்று செப்பித் துடிக்குதாம்

சகலதேசமும் சேதியைக்கேட்டுச் சத்தியமெங்குது
சத்தியப்போரை நடத்துற காந்திக்கு வெத்தியுமெங்குது

இந்தியநாட்டில் சேதியைக்கேட்டு ரெத்தம் கொதிப்பாச்சு
எங்கு கண்டாலும் காங்கிரஸுக்கு ரெட்டைமதிப்பாச்சு

குஞ்சுகுழந்தையுங் கிழவனும்கூடி கூட்டம் போடுகிறார்
குடிபடையெல்லாம் உப்பையெடுக்கக் கூட்டம் போடுகிறார்

ஏப்பிரலாறும் தேதியதையா இந்தியநாட்டுக்கே
இணையில்லாத சுதந்திரவாரம் இந்திய நாட்டுக்கே 1180

தேசீயவாரம் தனில்வரும்தேதி திவ்யமான திருநாள்
தெய்வப்பிறப்பாம் காந்திமகாத்மா தேடியெடுத்த திருநாள்

தண்டியாத்திரை புறப்பட்டுவெத்தி கண்டதேதி யதுதான்
தவிச்சநாட்டுக்கு உலகம் மதிப்புத் தந்ததேதி யதுதான்

அதிகாலையிலே காந்திமகாத்மா அழகுஸ்நானம் பண்ணி
அநுட்டானங்களுஞ் செபமுந்தபமும் அழகாகப் பண்ணி

தொண்டர்கூட்டம் பஜனைபாடிக் கொண்டே பின்தொடா
சொந்தமானவர் பந்து மித்திரர் சூழ்ந்தே பின்தொடர

ரகுபதிராகவ ராஜாராம் பதீதபாவன சீதாராம்
சுத்தப்ரும்ம பராத்பரராம் காலாத்மகபரமேஸ்வரராம்

ராமராம ஜெயசீதாராம்
ராமராம ஜெயராஜாராம்

ராமா ராமா ராமாவென்றே உப்பை யெடுத்தாராம்
ராசாங்கத்துச் சட்டம் மீறி உப்பை யெடுத்தாராம்

கிருஷ்ணா கிருஷ்ணா கிருஷ்ணாவென்றே உப்பை யெடுத்தாராம்
கிட்டநின்னவர் யாவர்க்குந்தான் அள்ளிக்கொடுத்தாராம்

கோவிந்தா கோவிந்தாவென்றே உப்பையெடுத்தாராம்
கொடுமைக்குத் தாயாகியசட்டந்தன்னை உடைத்தாராம்

வந்தேமாதரம் வந்தேமாதரம் வந்தேமாதரமே
வந்தேமாதர மென்றுவணங்கி வாரினராம் உப்பை 1190

ஜெயம் ஜெயம் ஜெய ஜெயம்ஜெயம்ஜெய
ஜெயஜெய காந்திக்கீ ஜே

தேசம் புகழும் உத்தம தெய்வம்
மகாத்மா காந்திக்கீ ஜே

காந்திக்கு ஜே யென்றே தொண்டர் கையில் உப்பெடுத்தார்
சாந்தம்சத்தியஞ் ஜெயிச்சுது என்றே கையில் உப்பெடுத்தார்

சுயராச்சியத்தை வாங்குவோமென்று சொந்தநாட்டு உப்பை
தொட்டுப்பாத்து வாயிலேபோட்டு சத்தியம் செஞ்சார்கள்

உப்பையெடுத்து வாயிலேபோட்டால் உள்ளந் திதிக்குதையா
உடம்புமுழுக்க ஆனந்தமாகி உதும்பிக் குதிக்குதய்யா

தேசத்துக்கெல்லாம் அறிக்கை விட்டார் சேதிசொல்லி விட்டார்
செயிச்சுவிட்டோமினி தேசமெல்லாரும் சேவை செய்யுமென்றார்

சென்னபட்டணம் சோழிங்கநல்லூர் சீமையெங்குமே தான்
தேசந்திரண்டு உப்பையெடுத்துத் திருநாள் செய்தார்கள்

ஆந்திரகேசரி பிரகாசம்காரு அன்னை நாட்டுக்காக
ஆயிரலட்சம் அள்ளிக்கொடுத்தவர் அன்னை நாட்டுக்காக

நாட்டுத்தலைவலி தீர்க்கநினைத்த நாகேஸ்வர ராவும்
நாடியேதிலகர் கட்டந்தனிலே நகரஞ் சூழ்ந்திடவே

உப்புக்காச்சிச் சட்டமுடைத்தார் ஊருதிரண்டதையா
ஒருபிடிஉப்புக் காகத்தத்தம் உள்ளதெலா மையா

## வேதாரண்ய சத்தியாக்ரகம்

செந்தமிழ்நாட்டு வீரரெல்லாம்
சேவைகள்செய்யப் புறப்பட்டார்
நந்தமிழ்நாட்டுச் சிங்கமெல்லாம்
நாட்டுக்குழைக்கப் புறப்பட்டார்

உப்புப்படையிலே சேராமனிசன்
ஊருக்கொருத்தன் கிடையாது
வீட்டுக்கொருத்தர் கிளம்பிவிட்டார்
வெற்றிக்குமே வழி கோலிவிட்டார்

வளரித்தடியை வீசிவிட்டே
மாச்சுமடிக்கும் மறவரெல்லாம்
களரிக்குள்ளறத் தாங்குதிச்சார்
கைகளிரண்டையும் கட்டிக்கிட்டே

வங்கங்கலங்கவே சண்டையிட்ட
வல்லம்பரான மறச்சாதி
தங்களின்கத்தியைக் கீழேவச்சு
சத்தியப்போரிலே தான்குதிச்சார்

ஆழக்கடலில் குதிச்சுக்கிட்டே
    ஆணிமுத் தள்ளிடும் உப்பறவர்
நீலக்கடற்கரை யோரத்திலே
    நெருங்கியுப்பைப் பொறுக்கினராம்

வாரையிடுப்பிலே கட்டிக்கிட்டே
    வானத்திலேறிடும் நாடாரும்
சூரர்மனசை அடக்கிக்கிட்டே
    சுத்த அஹிம்சையில் சேர்ந்தாராம்

ஈட்டியடிச்சுக் கொடுத்துவரும்
    எங்களதிரும்புக் கொல்லரெல்லாம்
இரும்பையெடுத்தே துஞ்செய்யாமல்
    இறங்கிவிட்டார் சத்தியத்தில்

கதையாயுதமும் கைத்தடியும்
    கணையுஞ்செய்யுந் தச்சரெல்லாம்
எதையுமாயுதம் எடுக்காமல்
    இம்சாமார்க்கத்தை விட்டுவிட்டார்

குத்திக்குடலைச் சரிச்சவங்க
    கும்பெனியானை வெட்டினவன்
எத்திக்கிலும்புகழ் பட்டாணி
    இம்சையைவிட்டு இதில் குதிச்சார்

மாராட்டிரத்துத் தமிழர்களும்
    வடுகுதெலுங்குத் தமிழர்களும்
சௌராட்டிரத்துத் தமிழர்களும்
    சத்தியச் சண்டையில் தாங்குதிச்சார்

*பிரமோதூத வருஷஞ்சித்திரை பிறக்கும்தேதியிலே
பெருமைபேசத் தமிழர்கூடிப் பெறப்பட்டாரையா

தென்னாட்டுக்கே திலகம் ஐயா திருச்சிமலைக்கோட்டை
தெய்வச்சோழன் ஆண்டதுஐயா திருச்சிமலைக்கோட்டை

நவாப்புக்காரர் ஆண்டுவிட்டது நம்மமலைக்கோட்டை
நாயக்கமாரும் ஆண்டிருந்தது நம்மமலைக்கோட்டை

தமிழ்நாட்டுக்குச் சக்கரவர்த்தி தலைவர்ராஜாஜி
சாதிவித்யாசம் பாக்காதவராம் தலைவர்ராஜாஜி

சலுகை காட்டுற பழக்கம்இல்லாத் தலைவர்ராஜாஜி
சத்தியம்பேசத் துணிஞ்சவரையா தலைவர்ராஜாஜி

அபவாதத்துக் கஞ்சிடமாட்டார் ஐயன்ராஜாஜி
அணுவளவும்பொய் சொல்லாமெய்யன் ஐயன்ராஜாஜி

தொண்ணூத்தாறு தொண்டர்சூழத் தூயோன் புறப்பட்டார்
தொண்ணூத்தாறு தத்துவஞ்சூழத் துறவிபுறப்பட்டார்

வேதாரண்ணிய மலைவாய்க்கரையில் வீசிவிடும்உப்பை
விரைவில்பெறுவது என்றேசொல்லி வீரர் புறப்பட்டார்

தாயுமானவர் மலையிலிருந்து ஊத்துக் கண்போலே
தமிழர்சேனை போகுதுஐயா ஆத்துத்தண்போலே

ஊருக்கூரு சனமுஞ்சேந்து ஆறுபெருகுதையா
உப்புப்போரை நாடியகூட்டம் ஓடிவருகுதையா

சமுத்திரம்போலே சைனியம்போலே தமிழர்வருகின்றார்
தஞ்சாவூரு சில்லாகலெக்டர் தார்ணுங்கண்டாராம்

உப்புப்போரில் சேர்ந்தவங்களையே ஊரில் சேக்காதே
ஒருத்தனுக்குமே தண்ணிசோறு ஒண்ணுங் கொடுக்காதே

உத்தரவொண்ணு போட்டாரையா ஊரையாளுறவர்
யோசனையொண்ணுஞ் செய்யலையையா ஊரில்வாழுறவர்

தண்ணிகொடுத்தா ரிளநிகொடுத்தார் தயிருஞ்சோறிட்டார்
தாரண்துரையின் முள்ளுப்பேச்சைத் தள்ளியேபோட்டார்கள்

தஞ்சாவூரில் கும்பகோணத்தில் தண்டாங்கோரையிலே
தங்கித்தங்கிப் போகுதுஐயா தமிழ்நாட்டுச்சேனை

கள்ளைவிலக்கிக் குடிபடையெல்லாம் களிப்புடனே வாழ
நல்லபடிக்குச் சொல்லிச்சொல்லி நடக்குதையா சேனை

கோடிக்கரையை நாடிநடந்தார் குலமன்னர் எல்லாம்
கொண்டுவந்தோமினி சுயராச்சியத்தைக் கொண்டுவந்தோமென்றே

சித்திரைமாசம் பதினைந்தினிலே திவ்யமான நாளில்
செந்தமிழ்நாட்டு உப்புச்சேனை சேர்ந்தது மறைக்காட்டில்

ஒருநாளைக்கு விரதம்புடிச்சு உபதேசம் பெற்று
மறுநாளைக்குச் சூரியபகவான் வருதம்வேளையிலே

இருண்டுகிடந்த கடலுக்குள்ளே எழும்பிவருஞ்சோதி
எல்லாஉயிருங் காக்கும்பொருளா யிருந்துவருஞ் சோதி

சுருண்டுகிடந்த சீவன் தலையைத் தூக்கவருஞ் சோதி
சுதந்திரமாக இந்தியநாட்டை ஆக்கவருஞ்சோதி

கண்முன்னாலே காணுந்தெய்வம் கதிரவனே யெம்மைக்
காத்திடவேணும் என்றேசொல்லிக் கைதொழுதே நின்றார்

சூரியநாரா யணசுவாமிதனைத் தோத்திரம் செய்தார்கள்
சுபுஹுத்தொழுகை நடத்தியசோதரர் துவாவும் கேட்டார்கள்

இந்தியநாடு சுதந்திரமாகி என்றும்வாழவேணும்
இந்துவும்முஸ்லீ மிருவருமொன்றா யிருந்து வாழவேணும்

என்றேசொல்லி உப்பையெடுத்தா ரெங்கள் ராஜாஜீ
இரண்டுகையாலும் அள்ளியெடுத்தா ரெங்கள் ராஜாஜீ

உப்பையெடுத்தார் கடலைப்பாத்தார் தலைவர் ராஜாஜீ
உபநிஷதத்தின் உண்மைகண்டார் தலைவர் ராஜாஜீ

உப்புங்கடலும் ஒன்றேயென்றார் தலைவர் ராஜாஜீ
உயிருங்கடவுளும் போலேயென்றார் தலைவர் ராஜாஜீ

செப்புங்கடவுள் கடலைப்போலே யென்றார் ராஜாஜீ
ஜீவர்களெல்லாம் உப்பைப்போலே யென்றார் ராஜாஜீ

கல்லைப்போலே கண்முன்னாலே காணுங் கடலுப்பும்
கரைந்தேபோகும் கடலுக்குள்ளே யென்றார் ராஜாஜீ

உப்புங்கரையுங் கடலும்கரையும் உலகுங் கரையுமையா
ஒருதனிமுதலாம் உண்மைக்குள்ளே யென்றார் ராஜாஜீ

உண்மைதன்னைக் காப்பதுதானே உலகில் பெரிதென்றார்
உடம்பையெடுத்தா லுண்மைக்காக உழைக்கவேணு மென்றார்

ஞானிகளுக்கே சிறந்தஞானி தலைவர் ராஜாஜீ
ஞாயங்கண்டே உப்பையெடுத்தார் தலைவர் ராஜாஜீ

எண்ணும்பதினா றாகியதமிழர் புண்ணிய சாலிகள்தான்
இந்தநாளிலே உப்பையெடுத்து இன்பம் பெற்றார்கள்

## அடக்குமுறை

ஆயிரங்கோடித் தலைமுறைக்கும்
அய்யன்மகாத்மா பேர்விளங்கும்
மாயிருஞாலத்தி லிந்தியத்தாய்
மண்ணில்விளைந்த மறைவிளங்கும்

அந்தமகாத்மாவைக் கைதிபண்ணி
அஹிம்சாமூர்த்தியைக் கைதிபண்ணி
பந்தப்படுத்திச் சிறையிலிடும்
பாபத்தைச்செய்யத் துணிந்துவிட்டார்

தண்டியில்உப்பை யெடுத்தமகான்
சட்டமுடைச்சுத் தகர்த்தமகான்
தர்சாணாவிலும் உப்பையள்ளி
தண்டிக்கப்பட்டார் காந்திமகான்

தலைவர் செயிலில் புகுந்ததுமே
தையாப்ஜீ எனும் நீதிபதி
தள்ளாதவயதில் சட்டம் மீறி
தானும் சிறையில் போய் புகுந்தார்

சங்கீதக் கோவில் சரோஜினியாம்
சாகித்யம் செய்யும் மாதாவும்
தர்சானுவிலே உப்பெடுத்து
தண்டனைவாங்கிச் சிறைபுகுந்தார்

கூடியிருந்த தொண்டரெல்லாம்
கொண்டுபோய் உப்பிலே கையிடவே
கம்பை யெடுத்து அடிச்சதிலே
காயம் பட்டது முந்நூறு

ராஜாஜியையும் கைதுபண்ணி
ரயிலேத்தியது ராசாங்கம்
படேல் வீரனைக் கைதுபண்ணி
பயமுறுத்திச்சு ராசாங்கம்

சவர்லால் நேரு சிறைபுகுந்தார்
சம்சாரமும் சிறைபுகுந்தார்
தாயார் கிழவி மனங்கொதிக்க
தங்கையிருவர் சிறைபுகுந்தார்

முழுவதும் தேசத்துக் கீந்துவிட்ட
மோதிலால்நேருவும் சிறைபுகுந்தார்
தேசம் சிறைக்குள் புகுந்ததையா
தெய்வமும் ஓடி ஒளிந்ததையா

தலைவர் எல்லாரும் சிறைபுகுந்தார்
சனங்களெல்லாரும் சிறைபுகுந்தார்
அலைஅலையாகச் சனம்திரண்டார்
மலைமலையாகச் சிறைபுகுந்தார்

கல்கத்தா பூனா கராச்சி
காசியில் சென்னையில் துப்பாக்கி
கண்டமட்டுஞ்சுட்டுத் தள்ளிவிட்டார்
காங்கிரஸ் பணத்தை அள்ளிவிட்டார்

தடியடிராச்சியந் தானடத்தி
சாதுசனங்களைக் கொன்றுவிட்டார்
அடியடிஅடியடி என்றடித்தே
அலறித்துடிக்கச் செய்துவிட்டார்

## தொண்டர்கள் பெருமை

உப்பையெடுக்கிற தொண்டரையே
ஓங்கியடிக்கவே உத்தரவு
ஓங்கியடிபட்டுச் செத்ததுண்டு
உப்பைக் கொடுத்து பொளேச்சதில்லே

மண்டைபிளந்துமே செத்துவிட்டார்
மானத்தைவிட்டுப் பொளேக்கவில்லே
தாயும் குழந்தையும் தான்பிரித்தால்
தன்னுயிர் போயும் பிரிவாளோ

எலும்பி லடிபட்டுச் செத்ததுண்டு
எடுத்த உப்பைக் கொடுத்ததில்லே
கண்ணேப் புடுங்கி எறிஞ்சாலும்
கையைவிட்டுப்பு கிளம்பிடுமோ

தொண்டி முடமாகிப் போனதுண்டு
நோக்கத்தை விட்டவர் போனதில்லே
மண்ணினேக் கவ்வி அவர் கிடப்பார்
மண்டையிலேஅடி பட்டுக்கொண்டே

தொண்டர்கள் பட்ட துயரமெல்லாம்
சொல்லி முடிஞ்சிடப் போகாது
சொயராச்சியம் வந்து கண்டாலும்
தொண்டரை மறக்கலாகாது

## கள்ளுக்கடை மறியல்

அள்ளிக் குடிக்கக் குளம்வெட்டுவார் உண்ணும்
அன்னம் கிடைக்க வயல்வெட்டுவார்
அறிவைக் கெடுக்கிற கள்ளுக்கடையிலே
அந்தந்தக்கூலியைத் தான்கொட்டுவார்

புள்ளேக்குக் குப்பாயம் வாங்கிடுவோம். என
வெள்ளியைதங்கம் அடகுவைப்பார்
வெள்ளேப்போத்தல் கட்டித்தொங்கிடும் பாதையில்
மெய்யைமறந்து குடிச்சுடுவார்

தொண்டர்கள் இந்தக்கடை மறியல் செய்து
சோதனேத் தீயில் குளித்திடுவார்
கண்டபடிக்கந்த வாசலில்காலிகள்
கத்தியே கத்தி எடுத்திடுவார்

தொண்டர்சகித்துமே நின்றிடுவார் தங்கள்
தூயகரம்ரெண்டும் தூக்கிடுவார்
மண்டவரும்குடி காரரையே கெஞ்சி
மன்றாடிக் காலில் விழுந்திடுவார்

கண்டகுடிகாரர் கண்கலங்கித் தங்கள்
காரியம்தப்பிதமென்றறிந்து
ஒண்டிமறைந்துமே வெட்கத்துடன் வீட்டுக்
கோடியேபோவர் குடியாமல்

கள்ளுக் கடையெடுத்த குத்தகைதார் பணங்
காசுசெலவழித்த குத்தகைதார்
'வெள்ளைமனத்தையெல்லாங் கெடுத்துவிடுங் கள்ளை
விரும்பி விலைக்குவிற்கும் குத்தகைதார்'

காந்திக்கும்பல்இதனைக் கண்டுவிட்டே அவர்
காசிலே மண்விழுந்த காரணத்தால்
சாந்தமறியல் தொண்டர் தலையினிலே மாட்டு
சாணங்கரைச்சுக்கொட்டித் தானடிப்பார்

மெத்தக் குடிச்சு தங்கள் சித்தத்தையே இழந்து
வெள்ளைவகுத்தவரிக் கிரையானோர்
புத்தம்புதியகள்ளு போடுதம்பியென்று
போத்தலை வாய்க்குள் புகட்டிடுவார்

கம்பையெடுத்துவந்து அடிச்சிடுவார் தானே
கலயமும் பானைகளும் உடைச்சிடுவார்
வம்பைவிலைகொடுத்து வாங்கிக்கொண்டே தொண்டன்
வந்துஉடைத்துவிட்டா னென்றிடுவார்

போயிலைஎச்சியை மூஞ்சியிலே துப்பிப்
போக்கிலிநாயெனத் தானடிப்பார்
வாய்திறந்தே தொண்டர் வைததில்லை நோவில்
வந்தேமாதரமென்று சொல்வார்

கம்படிதாங்க முடியாட்டி தொண்டர்
காந்திக்கு ஜேயென்று கத்திடுவார்
வம்படியாக அடிக்கிறப்போ தொண்டர்
வந்தேமாதரமெனவிழுவார்

மண்டையுடைந்து பிளந்தாலும் தொண்டர்
மறியலிடத்தைவிட்டுத் தள்ளிநிற்கார்
சண்டைபிறக்குமிடம் கள்ளுக்கடை முன்னே
சத்தியத்தொண்டரின் சாந்தமையா !

ஜவுளிக்கடை மறியல்

சீமைச் சவுளி விற்கும் கடைக்குமுன்னே தொண்டர்
செய்தமறியல் கதை கேட்டிடுவீர்
சாமத்திலேந்திரிச்சு தலைமுழுகிக் கதர்
சட்டைகுல்லாப் போட்டு வந்துநிற்பார்

தொஞ்சவிலைக்கிங்கே பஞ்செடுத்து தூர
தொலைக்குக் கப்பலி லேத்திவிட்டு
கொஞ்சவிலைக் கங்கே வேட்டிநெய்தே அதைக்
கொள்ளைவிலைக்கிங்கே தள்ளுகிறார்

பஞ்சுவிளைவதிந்த பாரதத்தில் லோகம்
பாதிக்குச்சீலைதரும் பாரதமே
கொஞ்ச மனுசனுள்ள தேசமெல்லாம் பஞ்சைக்
கொண்டு குமிச்சிடுவ ராலையிலே

ஆளுக்குப்பஞ்சமையா சீமையிலே ஆனால்
ஆலைக்கரி விளையுந் தேசமையா
நூலுக்குமிசினுகளோ ஏராளம் ஒரு
நொடிக்கிக் கோடிகஜம் இழைக்குமையா

நாடியகைத்தறி தானும்நெய்தே இந்த
நாட்டில்பிழைக்கவேணும் கோடிச்சனம்
கோடிச்சனத்தையுமே பட்டினிபோடுது
கொண்டு குமிச்சிட்ட சீமைத்துணி

வாங்கமனிசங்க ளிங்கேயுண்டு ஆளு
வக்கத்த நாட்டில் மிசினுஉண்டு
ஆங்கிலச்சீமை மிசினுக்கெல்லாம் கிடந்
தாகாரமாகுதே நாட்டுமக்கள்

இந்தக் கொடுமையிலே வந்ததுணி ஐயா
ஏழைவகுத்தி லடிச்சதுணி
சொந்தத்துணியுடனே போட்டியிட்டே ஏழை
சோத்தைக் கவுத்துவிட்ட சீமைத்துணி

அய்யாசாமியே வாங்காதீர் இதை
ஆதரிச்சே பழி வாங்காதீர்
கையாலுங்களைக் கும்பிடுறோம் இதைக்
கட்டியே பட்டினி போடாதீர்

என்று மறித்திடுவார் தொண்டரெல்லாம் இதை
எதுத்து அடிச்சிடுமாம் போலீசு
நின்ற இடத்தைவிட்டு நகராமல் தரை
நிலத்தில் விழுந்திடுவார் தொண்டரெல்லாம்

## அடக்குமுறையின் அலங்கோலம்

சட்டமறுப்பைத் துவக்கவுமே
தடியடியைத் துவக்கிவிட்டார்
வேட்டிமறியலைக் கண்டதுமே
வெடிவச்சுப்போடத் துவங்கிவிட்டார்

கள்ளுமறியலைக் கண்டதுமே
கத்திக்கு ஆர்டரும் பண்ணிவிட்டார்
உள்ளதுருப்புக ளத்தனையும்
ஊரையழிக்கவே விட்டுவிட்டார்

சுட்டுத்துகைச்சு எறிச்சாங்க
சூரைகளாடியும் விட்டாங்க
தொட்டுத்துகிலைப் பிடிச்சாங்க
துச்சாசனன்போ விழுத்தாங்க

தலைச்சேரி யென்னும் ஊரினிலே
தம்பதிபிரபுவைக் கைதுபண்ணி
தாலிக்கவுத்தை அறுத்தெறிஞ்சு
தண்டனைப்பாக்கி வரவுவச்சார்

திருப்பூரென்னும் ஊரினிலே
சின்னஞ்சிறுவன் குமரனையே
தெண்டனைசெய்து கம்பாலடிச்சு
தீத்துக்கட்டியே போட்டுவிட்டார்

கனுபாபு வெனும் காளையொன்று
கைக்குழந்தையவன் சேதிகேளும்
பால்மணம் மாருப் பாலனையா
பத்துவயசுக் குழந்தையது

தாயார்கூட்டிக் குளிச்சுவிட்டுத்
தலையும்சீவிப் பொட்டுமிட்டுப்
பள்ளிக்குப்போகவே சொல்லிவிட்டா
பாலன்ஜவுளிக் கடையோரம்

சீமைச்சவுளிக் கடைமறியல்
செய்யுற வேடிக்கை பார்த்துநின்னுன்
மோட்டார் லாரியில் மூட்டைகளைப்
போட்டுபுறப்பட்டுப் போகையிலே 1290

காந்திக்கு ஜே என்று சொல்லிவிட்டு
கைகளைநீட்டி வழிமறிச்சான்
ஏத்தினமூட்டை இறக்கிவையி
இல்லாட்டிஎன்மேல் ஏத்திவிடு

என்றேசொல்லி மறிச்சுப்பிட்டான்
என்னசெஞ்சாண்டா லாறிப்பயல்
மோட்டார்காரையும் ஓட்டிவிட்டான்
முத்தம்கொடுக்கிற பாலகன்மேல்

சீமைத்துணிவண்டி ஏறிச்சுடா
தேசத்தொண்டு செய்யும் பாலகன்மேல்
செத்துமடிஞ்சான் பாபுகனு
சீவன்பிறந்தது தேசத்துக்கே

செத்துமடிஞ்சான் செல்வன்கனு
தியாகம்பிறந்தது தேசத்துக்கே
பெத்தவள் ஓடோடி வந்துநின்ருள்
பிள்ளையைவாரி யெடுத்துக்கிட்டாள்

செத்தமகனின் முகத்தினிலே
திரும்பத்திரும்ப முத்தமிட்டாள்
என்னுட கண்ணே கண்மணியே
எங்குங்கிடையாத கற்பகமே

இன்னும்பலபிள்ளை வேண்டுமடா
என்னுட நாட்டுக் குயிர்கொடுக்க
உன்னைச்சுமந்த குடல்தனையே
உலகம்புகழு மென்றழுதாள்

அடக்குமுறைகளைக் கையாண்டு
அக்கினிக்கு நெய்யை ஊத்திவிட்டார்
ஆள்தூக்கிச்சட்டத்தின் பேரைச்சொல்லி
அடச்சுஉதைச்சுப் போட்டுவிட்டார்

புள்ளைக்குதேசத்துப் பக்திவந்தால்
போரில்இறங்கிய சேதிகேட்டால்
புள்ளைக்குவீட்டிலே சோறுதண்ணி
போடக்கூடாது என்றுசொல்வார்

அப்பனவராதம் கட்டுமென்பார்
ஆத்தாளைபணங் கட்டுமென்பார்
ஒப்பனையாகுமோ உலகத்தீரே
உங்களின் நாட்டி லிதுபோலுண்டோ

காந்திகுல்லாக்களைக் கண்டுவிட்டால்
கலங்கிவெறிப்பார் அந்நாளில்
காங்குத்துணிகளைக் கண்டுவிட்ட
காளைமிரண்டு வெறிப்பதுபோல்

ஓடிப்புடிச்சு உதைச்சிடுவார்
ஓங்கினகம்பாலே போட்டிடுவார்
தேடியலைஞ்சு பிடிச்சுடுவார்
தேசத்துத்தொப்பி கிழிச்சுடுவார்

பேட்டைமதராசுப் பட்டணத்தில்
பிரம்படிப்பூசை நடக்கையிலே
பேட்டனென்றேயொரு பாதிரியை
பெரட்டியடிச்ச கதைகேளும்

காந்தித்துணிசூட்டுப் போட்டிருந்தார்
கதருத்தொப்பியும் மாட்டிருந்தார்
சாந்தசவுளிக் கடைமறியல்
தன்னையேவேடிக்கைப் பார்த்திருந்தார்

ஓடிவந்தானையா சார்ஜண்டு
ஓங்கித்தடியாலே போட்டுவிட்டான்
கூடியிருந்த சனங்கள்எல்லாம்
கூகூவென்றுமே கத்துதையா

அய்யய்யோஎன்னை அடிக்காதே
ஆண்டவன்சேவகன் என்றுசொன்னார்
பொய்யையாசொல்லுறே என்னிடத்தில்
போலீசுக்காரன் நானில்லையோ

குல்லாய்க்கதரு போட்டிருக்கே
கோணிக்கதரும் கட்டிருக்கே
நல்லாயுதைச்சு விட்டுவிட்டான்
நாட்டுத்துணிகட்டிக் கொண்டதனால்

கதருத்துணிகளைக் கட்டிக்கொண்டால்
கையும்காலும் நம்முதல்ல
காந்திமகானுட புண்ணியத்தால்
கம்படிதாங்கும் கதருத்துணி

நாட்டுச்சுதந்திரப் போராட்டம்
நாடகமேடைக்கும் போச்சுதையா
பாட்டுக்கும்கூத்துக்கும் போலீசு
பதிலுகேக்க லாச்சுதையா

காந்திபாட்டுப் பாடக்கூடாது
கதருச்சட்டை போடக்கூடாது.
சாந்திசத்தியம் என்றுசொல்லி
தத்துவம்பேசவுங் கூ டாது

அரிச்சந்திரமஹா ராஜனுக்கும்
அடக்கு முறைக ளுண்டுமையா
வரித்தண்டல்நாயம் சத்தியமும்
வாய்மைதூய்மை யென்றுவிட்டால்

பழிக்குப்பழிகொடு பாண்டியனே
பத்தினிகண்ணீரி லென்றுசொன்னல்
அழிச்சுப் போடுவே னென்றுசொல்லி
ஆக்கினைசெய்வார் அந்நாளில்

நாடக மேடையில் காந்திப்பாட்டு
நாளும்முழங்கும் நகரமெங்கும்
பாடத் தெரியாத பேர்கள்கூட
பகவத்சிங்கத்தைப் பாடிடுவார்

வீதிச்செவுத்துக்கும் சட்டமுண்டு
வீட்டுச் செவுத்துக்கும் சட்டமுண்டு
பாதி தெரியுர நோட்டீசைப்
பத்துப்பேர் கூடிக் கிழிப்பதுண்டு

தேசத்தலைவர் படங்களையே
செவுத்தில்மாட்டவுங் கூடாது
ராசத்துவேஷ மதென்றுசொல்லி
ரவாணுவிட்டா ரந்நாளில்

பாரதி பாடலைப் பாடிவிட்டால்
பதறித் துடிப்பார் கொக்கரிப்பார்
யாரது பாடுவ தென்றுசொல்லி
அரட்டி கண்டு கை நெரிப்பார்

முப்பது ரூபாய் தண்டனைக்கு
மோட்டார் காரையும் சப்தி செய்வார்
நாற்பது அம்ப தபராதம்
நகை நட்டெல்லாம் சப்தி செய்வார்

ஆட்டையும் மாட்டையும் சப்தி செய்வார்
அப்பம் பாட்டஞ்சொத்தை சப்தி செய்வார்
நாட்டை விடுதலை செய்யவந்தோர்
நல்ல முதல்கள் பறிமுதலாம்

ஏலமும் போட்டுத் தமுக்கடிப்பார்
எடுக்க மனிசன் வரமாட்டான்
காலமெல்லாம் நின்னு கூறிவிட்டு
கால்கை கடுக்க போய்விடுவார்

சூடுஞ் சொரணையு மற்றசிலர்
சொந்தநாட் டுப்பை மறந்திருப்போர்
மாடும் மனையுஞ் சதமெனவே
வாழ்வை நம்பி மதிகெட்டபேர்

முப்பது காசுக்கும் நாற்பதுக்கும்
மோட்டார்க்காரு கிடைக்குதென்றே
சொற்ப முதலுக்கு ஆசைப்பட்டே
சோக்காகவாங்கி யனுபவிப்பார்

துண்டுப் பிரசுரம் கொடுத்ததற்கே
தொண்டர் பலரைச் சிறைபிடிப்பார்
உண்டு சுதந்திர மென்றுசொன்னால்
ஊரை வளைத்துச் சிறைபிடிப்பார்

தமுக்கை யடிச்சுமே சேதிசொன்னால்
சவுக்கை எடுத்து அடிச்சுடுவார்
கமுக்கமாகவே சேதிசொன்னால்
கைவிலங்கு போட்டுப் பூட்டிடுவார்

ஊரைவிட் டொருவன் போவதென்றால்
உத்தரவு கேட்டுப் போகவேண்டும்
யாரையும் சோத்துக் கழைப்பதென்றால்
அன்னிய ருத்தரம் வேண்டுமையா

சொந்த நாட்டுக்காரத் தொண்டருக்கே
சோறுந் தண்ணீருங் கொடாதீ ரென்று
வந்த நாட்டுக்காரன் சொல்லிடுவான்
வார்த்தையை மீறினல் வம்புவரும்

ஆனாலுஞ் சட்டக் கொடுமையெல்லாம்
ஆகுதிநெய்போ லாச்சுதையா
போனாலும்போகட்டு மிந்தஉயிர்
புண்ணியம் மிஞ்சிடுமென்றுசொல்லி

சட்ட மறுப்புசெய் தொண்டருக்கே
தாயும் பொதுஜன மாகிவிட்டார்
கிட்ட நெருங்கி முகம்பார்த்து
கேட்டுக் கொடுத்தார் நாட்டுமக்கள்

தாகத்துக் கிளநீர் தந்திடுவார்
தயிறுஞ் சோறும் ஊட்டிடுவார்
ஆகட்டு மென்றபேச்சில்லையையா
அள்ளிக் கொடுப்பா ருள்ளதெல்லாம்

வேட்டியும் சட்டை துவைச்சிடுவார்
வெத்திலை பாக்கு கொடுத்திடுவார்
வேண்டிய தெல்லாம் தந்திடுவார்
வீர மரியாதை செய்திடுவார்

தேசத் தலைவர்கள் என்று சொன்னால்
தெய்வத்தைக் கண்ணாலே கண்டதுபோல்
தேசத்துத் தொண்டர்கள் என்றுசொன்னால்
செல்லக் குழந்தையைக் கண்டதுபோல்

என்னைக்கும் வெள்ளை வெளுத்தளிக்கும்
ஏகாலி மக்கள் கூட்டத்திலே
சின்னத் தனமுள்ள சீமைத்துணி
சிந்தித் தொடவே மாட்டமென்றார்

காந்தி மகாராஜன் தந்ததுணி
காங்கிரசாலிங்கே வந்ததுணி
சாந்தக் கதர்த் துணி யொன்றைமட்டும்
சலவை செய்குவோம் என்றுவிட்டார் 1330

அன்னிய நாட்டுத் துணிகட்டிய
ஆளுகள் யாராயிருந்தாலும்
தன்னுட கையாலே தொட்டுஇனி
தலை வழிப்பது மில்லையென்றார்

கண்ட விடமெங்கும் சீமைத்துணி
காத்திகைச் சொக்கப்பான் போலெரிய
கொண்டு கொண்டுவந்து போட்டுஅதைக்
கொளுத்திச் சத்தியம் செய்திடுவார்

எங்கெங்கு பாத்தாலும் பத்திரிகை
எட்டுப் பத்துப்பங்கு வித்ததையா
சங்கம் முழங்குது சென்னையிலே
சப்த சமுத்திர ஓசையிட்டே

தேசீயப் போர்களின் சேதியெல்லாம்
சிந்தைகொதிக்க வெளியிடுவார்
ஆசியமாகப் படம் வரைவார்
ஆணி யடிச்சது போலுறைக்கும்

பேப்பர் படிக்கச் செனங்களெல்லாம்
பிரியங் கொண்டது மந்நாளில்
பாப்பரும் பேப்பர் படிச்சிடவே
பக்கத்து வீட்டை நாடிச்செல்வார்

சேதி படிப்பதில் போட்டியுண்டு
சிந்தை துடிப்பதில் போட்டியுண்டு
தேசத்துப் போரில் குதிப்பதிலும்
சேவையில் முந்தவும் போட்டியுண்டு

கண்டதும் அந்நிய ராசாங்கம்
கண்ணை யவிக்கத் துணிந்ததையா
காரியம் சொல்லிடும் பேப்பரெல்லாம்
கட்டணுஞ் சாமீன் என்றதையா

ஆயிர மாயிரம் சாமீன்கட்டு
அளந்து போடணும் சேதியெல்லாம்
காயிதந் தன்னை நிறுத்திடுவோம்
கணக்காப் போடணும் சேதியெல்லாம்

உள்ளூருச் சண்டையைச் சொல்லாதே
உருளைக் கிழங்கைப் பத்திச் சொல்லு
வெளியூரு சேதியைப் போடாதே
வெங்காயச்செடி போடச்சொல்லு

கட்டியசாமீன் பறிமுதலாம்
காகிதம் அச்சு பறிமுதலாம்
ஒட்டியெழுதிய ஆசியர்தமை
உள்ளரத்தள்ளியே பூட்டிடுவார்

எத்தனை நட்டங்கள் வந்தாலும்
இல்லாமலே பேப்பர் போனாலும்
சித்தம் நினைப்பதைச் சொல்லியப்போ
சேவை புரிந்தது பேப்பரெல்லாம்

கள்ளைக் குடித்தவன் விட்டுவிட்டான்
காந்தி வழியையே தொட்டுவிட்டான்
வெள்ளைச் சரக்குப் பழகினவன்
வெக்கமும் துக்கமும் பட்டுவிட்டான்

மாமன் மருமகன் சண்டைவிட்டார்
மாமியும் நாத்தியும் சண்டைவிட்டார்
சீமைச் சனமெல்லாம் ஒத்துமையாய்
தேசத்துச் சண்டையில் பூந்துவிட்டார்

இந்துவும் முஸ்லீமும் சண்டைவிட்டார்
ஏழை பணக்காரன் சண்டைவிட்டார்
வந்தவன் தன்னை விரட்டுவதில்
வல்லவர்யாவரும் கூடிவிட்டார்

பெண்கள் அடிபட்டுக் கொண்டதுண்டு
பிள்ளைஅடிபட்டுக் கொண்டதுண்டு
கண்களிரண்டில் அடிவிழுந்தே
கவ்வோதியானவர் மெத்தவுண்டு

அன்னைநேருவும் அடிபட்டார்
ஆயிரம்பேர்கொண்ட கூட்டத்திலே
தன்னிகரில்லாத பட்டேலின்
தாயார்கூட அடிபட்டார்

தடிஅடி பட்டவர் எத்தனையோ
தள்ளி மிதிச்சவர் எத்தனையோ
அடிஉதை பட்டு விழுந்ததிலே
ஆவியைவிட்டவர் எத்தனையோ

ஜுகல்கிஷோர்என்னும் சிங்கம்ஒன்று
சதி வழக்கினில் கைதிஐயா
சாக்ஷியம் சொல்லவே கூண்டேறி
தலை வணங்காமல் நின்றிருந்தான்

தேசத்துக் காரியம் செய்யவந்த
தீரனைக்கண்ட சிறுசொருத்தி
மீரத்து வீரன் தனைமணந்து
வீர மரியாதை செய்யவந்தாள்

கூண்டைவிட் டிறங்கி வந்ததுமே
கோரட்டு வாசலில் பரிசமிட்டாள்
தூண்டிய காதலைக் கண்டுஅந்த
தோப்பனும் தாயாரும் சம்மதிச்சார்

தாலியைக் கட்டிய ராத்திரியே
தண்டனை தந்தது ராசாங்கம
நாலிரண்டு மாசம் தானுமல்ல
நல்லதோர் மாமாங்கம் தண்டனையாம்

பன்னிர்ண் டாண்டு தண்டனையான
பர்த்தாவைக் கொண்டுமே போகவிட்டு
கன்னிகை மஞ்சளும் குங்குமமும்
கண்ணுங் கண்ணீருமாய் வாழ்ந்திருக்காள

அத்தனை நாட்டாரும் தான்வியக்க
சத்தியப் போரும் நடக்குதையா
ஆசியாக்கண்டம் பேரெடுக்க
அஹிம்சைப்போரும் நடக்குதையா

அமெரிக்காவும் நம்ம பக்கம்
அத்தனை பேரும் நம்ம பக்கம்
அடக்கு முறையைக் கண்டுவிட்ட
ஆங்கில மக்களும் நம்மபக்கம்

எல்லா நாடும் பிரிட்டனையே
ஏளனம் செய்யப் புறப்படவே
இந்திய நாட்டுச் சத்தியப்போர்
எரிநெருப்பாய் மூண்டிடவே

தந்திரக்காரன் சீமையிலே
இந்திய நாட்டு மந்திரியும்
சர்வகக்ஷி மகாநாட்டை
சல்நியில்கூட்டு மென்றுரைத்தான்

கூடிப்பேசவே நாட்டுமக்கள்
கும்பிடுந்தெய்வத் தலைவரெல்லாம்
வாடிச்சிறையில் தானிருந்தால்
வந்தவன் போனவன் பேசுவதோ

## சத்தியப்போரின் ஜயம்

### காந்தி இர்வின் ஒப்பந்தம்

சாப்ரு ஜெயகர் என்ற பேர்கள்
சட்டம் படிச்சவர் கெட்டிக்காரர்
சண்டைபிடிக்கவே தாய்வயித்தில்
தாயாதியாகப் பிறக்காமல்

என்னையும் சீனுவையும் போலே
இணை பிரியா திருப்பவர்கள்
இவர்கள் கூடியிருதரப்பில்
இராசி பேச முன்வரவே

காந்தி மகானை விட்டுவிட்டார்
கமிட்டி மெம்பரை விட்டுவிட்டார்
காரியக் கமிட்டி மெம்பர்களும்
காந்தியும்கூடியே பேசிக்கிட்டார் 1360

சீமைக்கு நாங்கள் வந்திடுவோம்
சேதி எடுத்துமே சொல்லிடுவோம்
வட்டமேஜை மகாநாட்டில்
வழக்கை எடுத்தும் சொல்லிடுவோம்

அத்தனை சேதிக்கும் முன்னாலே
ஆங்கில ராசாங்கம் ஒன்றுசெய்தால்
இத்தனை நாளும் பட்டதெல்லாம்
இருவர் மறந்து பேசவேணும்

செயிலுக்குள் போட்ட தொண்டரெல்லாம்
திரும்பி விடுதலை செய்யவேணும்
பறிமுதல் செஞ்ச பணத்தையெல்லாம்
பாக்கி யில்லாமல் கொடுக்கவேணும்

வேலையை விட்டு விலக்கினபேர்
மீண்டும் வேலைக்கு வைக்கவேணும்
கள்ளுக் கடையும் வெளிநாட்டு
கடையும் மறியல் நடக்கவேணும்

போலீசு ராஜ்ஜியம் தான்புரிஞ்ச
பொல்லாக் கொடுமை யெல்லாமும்
தீர விசாரணை செய்துவிட்டு
தீங்குக்கு மன்னிப்பு கேக்கவேணும்

என்றே காந்தி எடுத்துரைச்சார்
இணங்கி மசியல்லை ராசாங்கம்
ஏழெட்டு நாளைக்கி மேலாச்சு
ஏதும் பலனு மளிக்கவில்லை

இராஜப் பிரதிநிதி இர்வினுடன்
ஏழை மகாத்மா பேசிவந்தார்
இர்வின் பிரபுவும் விட்டுக்கொடுத்தார்
எங்கள் தலைவரும் விட்டுக்கொடுத்தார்

உப்பையெடுக்கவு முபயோகிக்கவும்
உரிமை தந்தது ராசாங்கம்
ஓராளொருதலை உப்பெடுக்க
உத்தரந் தந்தது ராசாங்கம்

கள்ளுக்கடைக்கும் மதுக்கடைக்கும்
காருண்யமறியல் செய்திடலாம்
சத்தியப் போரின் சட்டதிட்டப்படி
சவுளிக் கடைகள் மறிச்சிடலாம்

என்றே சொல்லி இறங்கிவந்தது
இங்கிலீஸ்காரர் ராசாங்கம்
ஒன்றே சத்தியம் வெற்றி பெறுமென
உலகங்கண்டது அந்நாளில் 1970

இத்தனை நாளும் தலைவணங்கா
இர்வின் பிரபுவும் வணங்கிவிட்டார்
சத்தியப் போரின் சந்நிதியில்
கத்தி யெடுத்தவன் கையெடுத்தான்

## ஒப்பந்தத்தை மீறுதல்

இந்தப்படிக்கிங்கே செஞ்சுப்புட்டு
இர்வினும் சீமைக்குப் போய்ச்சேர
இந்திய நாட்டை இரண்டாக்கி
இருக்க வந்தான் வில்லிங்கிட்டன்
வில்லிங்கிட்டன் ராசாங்கத்துக்கு
விருப்பமில்லை சமரசத்தில்
வேறோ டறுக்கவே எண்ணிவிட்டான்
வெல்லிங்கிட்டன் துரைமகனும்

நேத்தைக்கு வந்த மணியாரன்
நெருப்பைக் கட்டி அடிச்சுப்புட்டான்
காத்துக் கிடந்தது வந்ததுமே
காயிதப் பேச்சை வெட்டிவிட்டான்

ஐ. ஸீ. எஸ்ஸு. படிச்சுப்புட்டு
ஆளவந்தவன் கூட்டமெல்லாம்
அத்திரிமாக்கு இப்படியா
ஆச்சு ஒப்பந்தம் என்றானும்

ஒப்பந்தம் மீறிச் செயல்புரிய
ஊக்கம் மிகுந்த கலெக்டரெல்லாம்
கைப்பந்தம் ஏந்தியும் கண்தெரியாக்
காரியம் செய்யத் துணிஞ்சுவிட்டார்

சட்ட மறுப்பை நிறுத்திய தால்
தவ்விக் குதிச்சது ராசாங்கம்
சப்தி வசூலும் நடந்ததையா
சனத்தைக் கசக்கிப் பிழிஞ்சுதையா

## வட்டமேஜை மகாநாடு

இப்படியாகவே இங்கிருக்க
இங்கிலாந்துச் சீமையிலே
வட்டமேசை மகாநாட்டை
வக்கணையாகவே கூட்டவெண்ணி

வந்தவன் போனவன் யாவரையும்
இந்திய நாட்டுப் பிரதிநிதியாய்
கூட்டத்துக் கழைப்பைத் தானனுப்பி
கூடவே காந்திக்கும் ஓலைவிட்டார்

ஐயன் காந்தி அதைப்பார்த்தார்
அன்சாரிக்கு அழைப்பில்லையாம்
தேசீய முஸ்லீம் தலைவருக்கு
ஸீட்டுக் கொடுக்கவே காணலையாம்

இந்திய நாட்டுச் சுதந்திரத்தில்
இரக்க முள்ளவர் அன்ஸாரி
இஸ்லாங்காரர் கூட்டத்திலே
ஏகத்தலைவரும் அன்ஸாரி

நாட்டைப் பிளக்கவே சம்மதியா
நல்ல முஸல்மா னுனதனுல்
கூட்டத்துக்கு இவரைக் கூப்பிடல்லை
குண்டுணி வேலை யிதென்று சொல்லி

ஒப்பந்தம் மீறிய பேர்களுடன்
உடனிருக்கவும் சம்மதியோ ?
நாணயம் மீறிய பேர்களுடன்
நானுங் கூட உட்காருவதோ

வட்ட மேஜைக்கு ஓடிப்போயி
வாங்க வேணுமோ சுயராச்சியம்
வந்தால் நம்மோட வீடுதேடி
வரட்டும் பின்னாலே பாத்துக்குவோம்

என்றே காந்தி சொல்லிவிட
எதுக்கும் தயார் வில்லிங்கிட்டன்
சென்றே வாருங்கள் சீமைக்கிங்கே
செம்மையாயிடு மென்றுசொல்லி

ஒப்பந்தப்படிக்குத்தான் நடக்க
உறுதி கொடுத்தான் வில்லிங்கிட்டன்
ஊருக்குப் போகிற காந்தியிடம்
உறுதி கொடுத்தான் வில்லிங்கிட்டன்

முப்பத்து முக்கோடி இந்தியர்க்கும்
ஒப்பற்ற காந்தி தலைவரென
முப்பத்தி யோராண்டு ஆகஸ்டு
முப்பத்து வாக்கில் புறப்பட்டார்

## காந்திஜி லண்டன் பிரயாணம்

(* கப்பலிலே அயிலசா காந்திமஹான் ஏலேலோ
காங்கிரஸின் பிரதிநிதியா யேறிவிட்டார் அயிலசா—ஏலேலோ

அப்பொழுதே அயிலசா அரபியாவில் ஏலேலோ
அரபியரும் இந்தியரும் அன்புடனே அயிலசா—ஏலேலோ

கூடிநின்னே அயிலசா கும்பிடவே ஏலேலோ
கூட்டமொன்று போட்டுக் கதர்கொடிநடவே அயிலசா—ஏலேலோ

ஏடனிலே அயிலசா தானிருந்த பிரிட்டிசார்
ஏசண்டுமே இக்கொடியை இறக்கிவிடச் சொன்னானும்

காங்கிரசுக் கொடியையே கழட்டிவிட்டா லங்கனேயே
காந்திமகான் வந்து நிற்கக் கருதவில்லை என்றதே

உத்தரவும் கொடுத்திட்டான் ஊமைக்கனைக் கண்டாப்போல்
ஊரு கூடிக் கும்பிட்டது உத்தமனார் தம்மையே

தடியடிகள் பட்டதுவும் சண்டையிலே செத்ததுவும்
கொடியிதுக்கே யென்று சொல்லி கும்பிட்டாராம் காந்தி மகான்

வழி நெடுகப் பூமாலை வகை வகையாய்ச் சம்மானம்
வணங்காத பேர்களெல்லாம் வணங்கினராம் காந்தியைத்தான்

இங்கிலாந்துச் சீமையிலே இறங்கினதே கப்பலுந்தான்
ஏழை மக்கள் குடிசையிலே இருந்துக்கிட்டார் காந்திமகான்

## சக்ரவர்த்தியை சந்தித்தல்

தடியடி பட்ட தேசத்துக்கே
    தலைவனை காந்திதன்னை
ஜார்ஜு சக்கரவர்த்தியுமே
    தனியாய்க் கூப்பிட்டுப் பேசிக்கிட்டார்

முழங்கா மட்டுக்கும் வேட்டி கட்டி
    முரட்டுத் துப்பட்டி போத்திக்கிட்டு
வணங்காமுடியன் மன்னனையே
    வந்தனம் சந்திப்பும் பண்ணிக்கிட்டார்

அம்பேத்காரு ஷவுக்கத்தலி
    ஆனவ ரெல்லாம் வம்பு பண்ணி
தம் போக்குப்போல் தான்பேசி
    தாய்நாட்டுக்குச் சதிபுரிஞ்சார்

சாதிக்கொடுமை சகிக்கவில்லை
    சரியாயெம்மை நடத்தவில்லை
ஆதிக்குலத்தவரான எம்மை
    ஆனதோர் ஹிந்துவில் சேர்க்காதீர்

சரிசமானம் நடக்கவில்லை
    தனியாய்ப் பிரியு மென்றுசொல்லி
அரிஜனங்களுக்காக வந்த
    அம்பேத்காரும் சொன்னாராம்

மலைபெயர்ந்து விழுந்ததுபோல்
    மண்டை பிளக்க அடித்ததுபோல்
தலைவனை காந்தி இந்த
    சங்கதிகேட்டு மனசு நொந்தார்

அண்ணனுந் தம்பியும் சண்டை யிட்டால்
    அகன்றுபோக விரும்புவதோ
தன்னுட மக்கள் பிரிந்திருந்தால்
    தாயார் நாடு தவிக்காதோ

தீண்டாப்பேரென்ற சாபமிதை
    சிரஞ்சீவியாய்ச் செய்யவந்த
வேண்டாப்புத்தியி தென்றுசொல்லி
    வெட்டிவிடாதீ ரென்றுரைத்தார்

எங்கள் சுதந்தரம் கேட்டுவந்தோம்
இங்கிலிஷ் மத்திசம் கேட்கவில்லே
தங்களுக்குள் உள்ள பேதமெல்லாம்
தாங்களே பேசித் தீர்க்கவிடும்

ஒப்பனே யில்லாது செய்யாதீர்
ஊரையிரண்டு படுத்தாதீரென
கப்பலேறி வந்த காந்திமகான்
கனிந்து உருகிப் பேசிவிட்டார்

கூப்பிட் டனுப்பிய இந்தியரைக்
கொண்டே வெள்ளேயர் வஞ்சகமாய்
ஆப்பிட்ட மட்டும் சாக்குச்சொல்லி
அய்யனேத் திருப்பி அனுப்பிச்சிட்டார்

கட்டின வேட்டி முளத்துண்டு
கையில் தடியைப் புடிச்சிக்கிட்டு
எட்டின மட்டும் கொடிபறக்கும்
இங்கிலீஷ் ராஜ்ஜிய பெங்குஞ்சுத்தி

லங்காஷயரில் கூட்டமிட்டு
லச்சரும் பண்ணிப் போட்டுப்புட்டு
லக்ஷிய மொண்ணும் கூடாமல்
லண்டனே விட்டுத் திரும்பிவிட்டார்

கொடுக்க மாட்டாத வெள்ளேயரும்
குத்தம் குறைகளேச் சொல்லிவிட
பொறுக்க மாட்டா வருத்தத்துடன்
புறப்பட்டுட்டார் காந்தியுமே 1410

## வில்லிங்டன் தர்பார்

இதற்குள்ளாகவே வில்லிங்கிட்டன்
ஏழெட் டவசரச் சட்டமிட்டான்
எதற்கும் தயா ராகிவிட்டான்
எரிநெருப்பைக் கக்கிவிட்டான்

ஒப்பந்த ஷரத்தில் ஒண்ணுன
உழு நிலத்தின் வரிகொடுப்போர்
சொப்பமுதல்களே ஜப்திபண்ணி
சூறைகளாடியும் விட்டானும்

இந்தக் கொடுமையை ஜவஹர்லால்
ஏழை பங்காளன் கேட்டுவிட்டு
நொந்த விவசாயி கூட்டத்திலே
நோக்கத்தை எடுத்துச் சொல்லிடவே

பண்டித நேருவைக் கைதுபண்ணி
பட்டாண்ணி காந்தியைக் கைதுபண்ணி
கண்டினை தண்டனை செஞ்சுப்புட்டு
காத்துக்கிடந்தான் காந்திவர

காந்தி பம்பாயில் வந்திறங்கி
காதிலே சேதி கேட்டதுமே
சாந்தமுடனே வில்லிங்டனை
சந்திப்புத் தாருமென்றுரைக்க

பேட்டி கொடுக்க மறுத்துவிட்டான்
பெரும்படியாகவும் பேசிவிட்டான்
ரூட்டிகள் ரொம்பவும் காட்டிவிட்டான்
ருத்திராக்ஷப் பூனை வில்லிங்கிட்டன்

எழுபது வயசான மகான்
எங்கள் தலைவரான மகான்
அழுவதை நிறுத்திப்பிள்ளை யெல்லாம்
ஆனந்தமாகப் பார்க்கும் மகான்

சட்டமறுப்பிலே தன்னுடைய
சமத்தைக் காட்டிய காந்திமகான்
தட்டி யெழுப்பி இத் தேசத்தையே
தலை நிமிர்ந்திடச் செய்தமகான்

சத்திய மார்க்கத்தை இவ்வுலகில்
சாச்வதமாக்கப் பிறந்தமகான்
புத்தரும் ஏசுவும் கண்டகனா
பூவில் நடைபெறச் செய்தமகான்

இந்தியநாட்டுக்குச் சொந்தமகான்
எல்லா நாட்டுக்கும் சொந்தமகான்
நொந்தவர் யாவர்க்கும் சொந்தமகான்
நோக்கத்தி லின்பத்தைத் தந்தமகான்

உள்ளம் நிறைந்தவன் காந்திமகான்
உண்மை புகழ்ந்திடும் காந்தியையே
கள்ளன்களவாணி போலவெண்ணி
காரிருட்டிலே கைதி செய்தான்

வானம் உறங்கும் கடல் உறங்கும்
வையம் உறங்கும் மனை உறங்கும்
கானம் உறங்கும் தரு உறங்கும்
காலமும் சற்று உறக்கங் கொள்ளும்

ஊருமுறங்கும் உறக்கங்கெட்ட
உள்ளமுங்கூட நினைப்பயரும்
யாருமுறங்குர நேரத்திலே
அதிகாரிமட்டு முறங்காமல்

கோதமனை மோசம் செய்யவெண்ணி
குருட்டுப்பூனை வடிவெடுத்து
மாதவர் கோபத்திலிந்திரனும்
மருப்படைத்திட்ட நேரத்திலே

நாலாந் தேதி நடுநிசியில்
நாட்டை யரசாண்ட வில்லிங்கிட்டன்
காலாக்கினியைக் கக்கிவிட்டான்
கார்க்கோடகனும் வில்லிங்கிட்டன்

நூறாயிரங்கோடிப் பேருக்கருள்
நோக்கங் கொடுத்திடும் காந்திமகான்
ஆறாயிரமைல் கப்பலிலே
ஆடி அசைஞ்ச அலுப்போடு

கண்ணை அசந்து படுத்திருக்கும்
காலை யிரண்டு மணி அளவில்
மண்ணை விளங்கவே செய்யவந்த
மாதவயோகியைக் கைது செய்தான்

தூக்கத்தை விட்டு எழுப்பச் சொல்லி
துப்பாக்கிச் சிப்பாயை ஓட்டி விட்டான்
போக்கத்த நாட்டுக்குத் தெய்வம் தந்த
புண்ணியன் காந்தியைக் கைது செய்தான்

வில்லிங்டன் செஞ்ச அநியாயம்
வேறொருத்தன் செய்ய முடியாது
சொல்லிச் சகிக்கவும் மாளாது
துரைமகன் செய்த அநியாயம்

லக்ஷத் தறுபதி னாயிரம் பேர்
லகுவாய்க் கைதியும் பண்ணிப்பிட்டு
மிச்சத்துக் கேழெட்டுச் சட்டமுமே
வீசி எறிஞ்சான் வில்லிங்கிட்டன்

## தனித்தொகுதி ஹரிஜனப் பிரிவினை

இப்படியாகவே காந்திமகான்
எறவாடா சிறையில் தாமிருக்க
இன்னென்று செஞ்சது ராசாங்கம்
இரண்டு படச் செய்யும் சாயலிலே

இந்து முஸ்லீமை பிரிச்சிட்டல்லோ
இன்னைக்கும் நாளைக்கும் ஆளுகிறோம்
தந்திரமாகவே ரெண்டு மதம்
தன்னைப் பிரித்தல்லோ ஆளுகிறோம்

தனதாய் நமக்கு ஆளிருக்க
சனத்தை ரெண்டு படுத்திப்பிட்டு
ஊரை யிரண்டு படுத்தியல்லோ
ஒய்யாரமாகவே வாழுகிறோம்

இந்துவும் முஸ்லீமும் கூடிக்கிட்டா
ஏதுக்கு மாகாது சமஸ்தானம்
இன்னொரு சாதி பிரிச்சுப்புட்டால்
இரட்டை ஆட்சி ஆண்டிடலாம்

தாழ்ந்த வகுப்பைப் பிரிச்சுப்புட்டால்
சனங்களை ரெண்டு பண்ணிடலாம்
சாதி வித்யாசத்தைச் சாக்குவைத்து
சாச்வதமாகவே ஆண்டிடலாம்

இந்திய மக்களின் கூட்டத்திலே
ஏழைப் பறையரை வெட்டிவிட்டு
எந்தெந்த நாளைக்கும் ராசாங்கம்
இங்கே நிலைத்திடச் செஞ்சிடலாம்

என்றே யோசனை செய்துவிட்டு
இந்தியா மந்திரி எடுத்துவிட்டார்
தீண்டாமக்கள் தனித்தொகுதி
சின்ன வருக்க மிதென்றுராம்

இந்துக்கள் என்றதோர் எண்ணிக்கையில்
ஏழைப் பறையர்கள் சேராது
என்றோர் அறிக்கை விட்டிடவே
என்னையன் காந்தி கேட்டுப்புட்டு

## உண்ணுவிரதம்

### ஹரிஜன சேவை

இந்திய நாட்டை இரண்டாக்கும்
இந்தக் கொடுமைக்குச் சம்மதியேன்
என்னுயிர் தன்னை பிணைகொடுத்தே
இந்தக் கொடுமையை நான் தடுப்பேன்
எங்களுக்குள் வந்த சிங்கலைக்கு
இன்னொருத்தன் வந்து வெட்டுறதோ
தங்களுக்குள் சண்டை மூட்டிவிட்டு
தண்ணி கடந்தவன் ஆளுறதோ

அண்ணனும் தம்பியும் அடிச்சுக்கிட்டா
ஆள வந்தவன் வெட்டுறதோ
தனித்தொகுதியைத் தீர்த்தொழிக்க
சாகு மட்டும் விரதங் கிடப்பேன்

என்னுயிர் தன்னையே விட்டாலும்
ஏழைப் பறையைப் பிரிக்கவிடேன்
என்றே காந்தி துவக்கிவிட்டார்
என்றென்றும் பட்டினி யாய்க்கிடக்க

பட்டினி கெடந்து நான்சாவேன்
பள்ளுப் பறையைப் பிரிக்கவிடேன்.
கட்டின கோயிலைத் தானிடிச்சு
கம்பு விதைக்குது ராசாங்கம்

வருணாசிரமத்தைச் சாக்குவச்சு
வம்பு விதைக்குது ராசாங்கம்
ஒருநாளுமிதை நான் பொறுக்கேன்
உயிரைக் கொடுத்துத் தடுத்திடுவேன்

பட்டம்பதவிக்கு ஆசைப்படும்
பஞ்சைப்பிரதிநிதி யானசிலர்
பைசாக்காசுக்கு ஆசைப்பட்டு
பங்களாவாசத்துக் காசைப்பட்டு

வட்டமேசை மகாநாட்டில்
வம்புக்குப்பேசிய பேச்சு இது
கஷ்டம்சகிக்க முடியாது
காதுலேகேக்கச் சகியாது

இங்கிலீஷ்காரன் கொடிபறக்க
இதுக்குக்கீழே கையையேந்திநிற்க
ஏழெட்டுப்பேர்செஞ்ச ஏற்பாடு
இதுக்கொருகாலமும் சம்மதியேன்

இதுமுதல்பட்டினி தான்கிடப்பேன்
எள்ளத்தனைசோறும் தின்பதில்லை
என்றேகாந்தி துவக்கிவிட்டார்
இந்தியமக்களைக் காப்பாத்த

சாதித்திமிர்கொண்ட இந்தியர்கள்
சம்பாதிச்சுள்ள பாவத்துக்கு
தன்னைஉயிர்ப்பலி தான்கொடுக்க
தயாரானார் காந்திமகான்

தேசம்நடுங்கி வெலவெலக்க
சின்னஞ்சிறுவர் கலகலக்க
நாசம்வந்தது நமக்குஎன்றே
நாலுவருணமும் தான் துடிக்க

கோயில்தன்னைத் துறந்துவிட்டார்
குடிதண்ணீர்க்கேணியைக் கட்டிவிட்டார்
நாவில்நயம்பல பேசிவிட்டார்
நாட்டுக்குள்சேரியைக் கூட்டிக்கிட்டார்

ஐயாசாமியே தாழ்ந்தவரே
அரிஜனங்களே வேண்டுகிறோம்
செஞ்சபிழையைப் பொறுத்திடுங்கோ
தெய்வீகக்காந்தியைக் காப்பாத்தும்

சாதித்திமிரட்டகாசம் விட்டோம்
சத்தியமாக நடத்திடுவோம்
தனித்தொகுதிகள் வேண்டாம்என்று
தாழ்ந்தவர்யாவரும் கேட்டிடுங்கோ

எங்கள்பிழையைப் பொறுத்திடுங்கோ
ஏந்தலுயிர்ப்பிச்சை தந்திடுங்கோ
என்றேதேசம் வேண்டிக்கிட
இரவும்பகலுமாய் ராஜாஜி

ஓட்டமும்நடையுமாய்த் திரிஞ்சு
ஊரெங்கும்கையொப்பம் வாங்கிவந்தார்
நாட்டுமக்கள் துயர்போக்கவந்த
நாதன்உயிர்தன்னைக் காப்பாத்த

தேசியத்தொண்டர் கூட்டமது
சேரியில் சென்றுமே கைகூப்ப
செந்நெல் அளந்திடும் சீமான்கள்
தேசத்துஅரிஜனமான மக்கள்

இப்படிச்சேதி நடக்கிறதோ
எங்களுக்கொண்ணும் தெரியாதே
தப்படியாகஎம்மைப் பிரிக்க
தந்திரம் செஞ்சவன் சண்டாளன்

இப்பவேஒப்பம் கொடுத்திடுரும்
என்னையன்காந்தி பிழச்சிடட்டும்
பட்டினிக்கொலைக்கும் ஆளானல் அந்தப்
பாவத்துக்கெங்கே பிறந்திடுவோம்

ஏணிக் கடைசிப்படி நாங்கள்
இன்னும் இறங்கப்படியேது
என்றே கையொப்பம் போட்டுவிட்டார்
ரெண்டாய் பிரிக்க ஒப்பவில்லை

எங்களின் சென்னை ப்ரதிநிதியாம்
எம். ஸி. ராஜா என்பவர்தான்
ஏழைபங்காளனைக் காப்பாற்றி
இந்தப்பெருமைக்கு ஆளானர் 1460

அம்பேத்காரும் ஆனமட்டும்
ஆகாத்தியங்கள் செய்துவிட்டு
ஆவிதுடிப்பதைக்கண்ட பின்னே
ஆகட்டுமொப்பந்தம் செய்வோமென்றார்

சட்டசபைக்குள்ளே கூடிடுவோம்
சங்கதியெடுத்துப் பேசிடுவோம்
இட்டத்தைச் சொல்லியே போரிடுவோம்
இந்த உரிமைகள் வேண்டுமென்றே

உயிருதுடிக்கிற நேரத்திலே
ஒப்பந்தப் பேச்சுகள் பேசிவந்து
தயிரும் கடைந்த சமத்தனவன்
தாழியும் காத்து தந்ததவன்

கையொப்பம் போட்டுக் கொடுத்துவிட்டார்
கட்சிக்கு சீட்டுகள் தேடிக்கிட்டார்
பொய்யொப்பம் போட்டுக் கொடுத்தேன் என
பொறகு அம்பேத்கார் கூறிவிட்டார்

சட்டத்தின் பேரால் தனித்தொகுதி
தானே கிளம்பி ஹிந்துமதம்
வெட்டுவிழுந்து குலையாமல்
விருட்சத்தைக் காத்தது ஒப்பந்தம்

சாதிக்கொடுமைக்கு ஆளாகித்
தவியாய்த் தவிக்கும் நாட்டுக்குள்ளே
சட்டக்கொடுமையும் சேராமல்
தட்டிக்கழிச்சது ஒப்பந்தம்

தீண்டாமைதனை ஓட்டவென்றே
தேசத்து பக்தர் புரிந்ததெல்லாம்
வேண்டாச் செயலுமாகாமல்
வெருகம்பழமாப் போகாமல்

நாட்டு நடப்பில் சரிசமமாய்
நாலொருபங்கு உழைப்பவரை
கூட்டுத்தொகுதியென் றுக்கிவைத்தே
குலவச்செய்தார் காந்திமகான்

இந்தச் சேதியைத் தந்தியிலே
இந்தியாமந்திரி கேட்டுவிட்டு
ஆறேநாளில் தனித்தொகுதி
அநியாயத்தையும் மாத்திவிட

காந்தி உயிரும் பிழைச்சுதய்யா
கடவுள் கருணை தழைச்சுதய்யா
சாந்திமகத்துவம் கண்டதிலே
சாவும் பயந்து ஓடுதையா

சாதிமிகுந்திடும் இந்நாட்டுச்
சாபக்கொடுமை துலைத்துவிட
தானுள்ளமட்டும் உழைக்கவென்றே
சாவிலிருந்து பிழைத்துவந்தார்

ஆனாலும் எங்கள் காந்திமகான்
அன்றைக்கொரு திட்டம் போட்டுவிட்டார்
ஆவியுடல் காயமத்தனையும்
அரிஜனத்துக்குத் தத்தமென்றார்

தீண்டாமைக் கொடும் பேய்தனையே
தீத்துவிட இந்த ஜென்மமென்றார்
பள்ளுப்பறையன் எனும் பேச்சை
பதறி அடிக்கவேண்டுமென்றார்

ஊரை விளக்கஞ் செய்வார்தமையே
    ஓதுப்புறத்தில் விரட்டாதீர்
சேரியில் வாழவே செய்யாதீர்
    சேர்ந்து வாழ்ந்து வளம்பெறுவீர்

பாம்பும் எலியும் பதுங்கும்வளை
    பருந்து வட்டமிடும் வானம்
சாம்பலும் குப்பையும் கொட்டும் வயல்
    சாணக்குழியிலே தள்ளாதீர்

தீண்டாப் பேரென்று சொல்லாதீர்
    சின்னச்சாதியென்றுஞ் சொல்லாதீர்
வேண்டாப்பேர்களைப் போலாக
    விலக்கி விலக்கிப் பேசாதீர்

வீதிபெருக்கிடும் சாதியென்றே
    விரட்டி யடிக்கும் கொடுமை யுண்டோ
வீட்டுக்குள் அன்னை குழவிக்கதை
    விரும்பிச்செய்வதறியீரோ

மத்தளம்துத்தி மணிமுரசம்
    வாருடன்தோலும் தருபவரை
அத்தனின்கோவில் நுழையவிடீர்
    அத்தனைவாத்தியம் தட்டுகிறீர்

கள்ளுக்குடிப்பவ ருண்டுமென்றே
    கண்ணில்காணாமல் விரட்டுகிறீர்
கள்ளைக்கொடுத்து கெடுத்தவனின்
    காசுக்குப்பூசை நடத்துகிறீர்

சுத்தம்சுகங்களு மில்லையென்றே
    சொல்லித்துரத்தி விரட்டுகிறீர்
தூக்கிக்குளிக்க குளத்தருகே
    தோணாமுன் ஆளை மிரட்டுகிறீர்

ஆழக்கிணறுகள் தோண்டினோரை
    ஆகாசத்தையே பார்க்கவிட்டீர்
வாழப்பலதொழில் செய்தவரை
    வயிற்றுச்சோற்றுக் கலையவிட்டீர்

செம்மண்குழைத்திட்ட கை அவர்கை
    செங்கல் அறுத்திட்ட கை அவர்கை
செவுறுவைத்திட்ட கை அவர்கை
    சித்திரந்தீட்டிய கைவேறு

சித்திரம்தீட்டிய கைகளுக்கே
செம்பொற்கடகங்க ளிட்டிடுவோர்
செம்மண்குழைத்த திருக்கரத்தை
திண்டாடவிட்டு மகிழுவதோ !

ஊரணிவெட்டிய கைஅவர்கை
உழவுபிடித்திட்ட கைஅவர்கை
தேரணிகட்டிய கைஅவர்கை
சேவிக்குங் கைகளோ வேருச்சு

கதிரையறுத்திட்ட கைஅவர்கை
களமும் அடித்திட்ட கைஅவர்கை
குதிருகளஞ்சியம் தன்னில் நெல்லைக்
கொட்டிக்குமித்திடும் கைவேறு

பொலிபொலிஎன்று மரக்காலை
போட்டுஅளந்திட்ட கைகளையே
வலிமைகுறையச் செய்துவிட்டால்
வாழ்வுகுறையாதோ மேற்குலத்தீர்

உழுதவன்கையில் வலுக்குறைந்தால்
உங்களின் வங்கிசம் அற்றுவிடும்
அழுதவன்விட்டிடும் கண்ணீரில்
ஆயிரங்காலப்பயிர் கருகும்

உங்களைஊட்டி வளர்ப்பவர்கள்
உறவும்பணமும் உடல்வலுவும்
தங்களுக்குற்றது போலவரும்
தான்பெற்று வாழுதல் தர்மமன்றே !

ஆண்டவன் மண்ணில் உருவெடுத்தான்
ஆதாரந்தீனி யளிப்பதற்கே
பூண்ட உருவமே தீண்டாதார்
பூமி தழைக்கவே செய்பவராம்

ஊட்டுங்கடவுள் நம்மாயவனே
உலகில்பிறந்து அரிஜனமாய்
நாட்டுப்பசிதனை தீர்த்துவரும்
நடமாடுந்தெய்வத்தைக் காணீரோ !

அரிபொருக்கி அடித் தளக்கும்
ஆதிக்குலத்தவர் பஞ்சமரை
அரிஜனங்கள் எனஅழைத்தே
அன்பொடுபூசனை செய்யுமென்றார்

எந்தெந்த வேலைகளானாலும்
இவர்களைத் தள்ளிடக் கூடாது
ஏழை அரிஜனப் பிள்ளையெல்லாம்
எடுத்துப் படிக்க வைக்கவேணும்

தேசப்பொதுப்பள்ளிக் கூடத்திலும்
திறந்துவிட்ட குளங்களிலும்
வாசத்துக்குஉள்ள சத்திரங்கள்
வண்டியும் வாகனம் யாவற்றிலும்

கோவில்குளங்கள் கூட்டத்திலும்
கொடுமைசெய்வது நிற்கவேணும்
நாவில் நயத்துடன் பேசவேணும்
நல்லதுசெய்ய நினைக்கவேணும்

சர்க்கார்எண்ணத்தை மாற்றிவிட்டோம்
சரி யென்றிருக்கக்கூடாது
சாதிக்கொடுமைதனை மாற்ற
சகலப்பேரும் துவங்கவேணும்

என்றேகாந்தி எடுத்துரைத்து
இன்னும் இருபத்தி யோருதினம்
உண்ணாவிரதம் தானிருக்க
ஊக்கம்கொண்டார் காந்திமகான்

சட்டத்தைமாத்த இருக்கவில்லை
சண்டையைத்தீர்க்க இருக்கவில்லை
தானும்பிறந்த ஓர் ஹிந்துமதச்
சாதிக்கொடுமைக்குப் பரிகாரம்

தேசத்திலிந்நாளும் செய்துவந்த
தீண்டாமைக்குப் பரிகாரம்
மாசற்றபுண்ணியன் காந்திமகான்
மக்களின்பாபத்தை யேற்றுக்கொண்டார்

அன்றுமுதல் அவர் ஓர்விரதம்
அரிஜனங்களின் சேவைக்கென்றே
காசுபணங்களைச் சேக்கிறதும்
கைநீட்டிப்பிச்சை யெடுக்கிறதும்

அரசியல்கட்சி கலக்காமல்
அரிஜனங்களுக் குழைக்கிறதும்
ஆனஉறுதி எடுத்துக்கிட்டார்
ஐயன்பெருமையைப் பார்த்தியளோ !

## அவசரச் சட்ட சத்தியாக்ரகம்

### சபர்மதி ஆசிரமத்தை தியாகம்செய்து மகாத்மா புறப்படுதல்

இந்தப்படிக்குள்ள நாளையிலே
இங்குள்ள வில்லிங்டன் என்னசெஞ்சார்
தந்திரம்வஞ்சம் தகிடுதத்தம்
தண்டனையாவையும் கையாண்டார்

சட்டமறுப்பையே செய்தவர்கள்
தங்களைத்தேடியே தண்டிச்சார்
சத்தியப்போரையும் வேருடே
கொத்தியெடுக்கவே தான்பார்த்தார்

காந்திக்கும் சந்திப்புத்தாரவில்லை
காங்கிரஸ்தன்னை மதிக்கவில்லை
இட்டதே சட்டமென்றெண்ணிக்கிட்டு
இருந்து ஆண்டார் வெல்லிங்கிட்டன்

செஞ்சட்டைத் தொண்டரைக்கண்டுவிட்டால்
சீறிக்கிளம்புது ராசாங்கம்
காங்கிரஸ்தொண்டரைக் கண்டுவிட்டால்
கம்பையெடுக்குது ராசாங்கம்

சட்டமறுப்புகள் கண்டுவிட்டால்
சுட்டுக்கொளுத்துது ராசாங்கம்
சவுளிமறியலைக் கண்டுவிட்டால்
தலையை உடைக்குது ராசாங்கம்

அவசரச்சட்டத்தைப் போட்டுக்கிட்டு
ஆட்டம்போட்டான் வெல்லிங்கிட்டன்
அவசரச்சட்டம் தனைஒழிக்க
ஆரம்பித்தது சத்தியப்போர்

அவசரச்சட்டத்தைக் கண்டமகான்
ஆத்திரமிகவும் கொண்டமகான்
ஆட்சிக்கொடுமைக்குப் புத்திசொல்ல
ஆரம்பம்செய்தார் மற்றொருபோர்

இந்தியநாட்டுச் சுதந்திரத்தில்
இறங்கிப்போரிடும் வீரருக்கே
இரும்புக்கம்பிக் கதவுக்குள்ளே
இருக்கும்வீடதே நல்லதென்றே

ஆசிரமந்தன்னைக் குடிசைகளை
அங்குள்ளகைத் தொழிற்சாலைகளை
பேசிவளர்த்த பழமரத்தை கிளிப்
பிள்ளைகளைப் பசுக்கூட்டங்களை

அத்தனைசொத்தையும் தத்தம்செய்தே
அன்னையும்ஐய னிருவருமாய்
சத்தியம்அஹிம்சை பின்தொடர
சபர்மதிவிட்டுக் கிளம்பிவிட்டார்

ஏக்கர்கணக்கிலே தோட்டமுண்டு
இதுக்கும்வரிகள் எதேட்டமுண்டு
யார்க்குக் கொடுத்தாலும் தானவர்கள்
அந்தவரிக்கட்ட வேண்டுமென்பார்

வாழ்ந்தகுடிசையை தானம்பண்ணி
வரிகொடாமைக்கு நான்கிளம்ப
வாங்கியதானத்தைக்காக்க அவர்
வரியும்கட்டுவர் ஆனதனால்

வரிகொடாமையும் தோற்றுவிடும்
வாங்கியதானம் நிலைத்துவிடும்
வரிகொடாமலிருந்து விட்டால்
வாங்கியதானமே தோற்றுவிடும்

வரிகளும்கட்ட மறுத்து விட்டால்
வாயிதாபாக்கிக்கு ஜப்திசெய்வீர்
பறிமுதலாயிடும் தோட்டங்களும்
பட்டமரம் மிஞ்சும் ஆனதனால்

தோட்டத்தைநீங்களே தானெடுத்துத்
தொழிலுந்துறையும் தானடத்தி
நாட்டுக்குநல்லது செய்யுமென்றே
நல்லதோர்காயிதம் தானெழுதி

சர்க்கார்தன்னையுங் கேட்டுக்கொண்டார்
சரியெனச்சொல்லல்லை ராசாங்கம்
தந்தார்அரிஜன சங்கத்துக்கே
சபர்மதியாச்ரமம் முச்சூடும்

அன்றைக்கிராம னிருந்தவிடம்
அயோத்தியென்ற கதைகேட்டோம்
இன்றைக்குக்காந்தி இருக்குமிடம்
எங்குமேசத்தியம கண்பார்த்தோம்

சத்தியக்கோவிலின் சாமியிவன்
சாந்தகுணத்திலே பூமியிவன்
நித்தியம்நாமிவன் பேரைச்சொன்னால்
நீங்கிடும்பாவவினைக ளெல்லாம்

ஆச்ரமந்தன்னையும் தியாகஞ்செய்து
அரிஜனங்களுக்கே கொடுத்து
அகிம்சைப்போரும் புரிந்திடவே
அய்யன்காந்தி புறப்படவே

ஆனதோர் முப்பத்திமூணாண்டு
ஆகஸ்டுமாதம் முதல்தேதி
அய்யனும்சத்தியப் போர்புரிய
ஆரம்பித்தபின் நாலாம்நாள்

காந்தியைக்கைதியும் பண்ணிவிட்டார்
கடுங்காவல் தன்னில் போட்டுவிட்டார்
கையை ஒடிச்சு முறிச்சதுபோல்
காயிதம் பென்சிலுமில்லையென்றார்

கள்ளன் களவாணி கைதியைப்போல்
காந்தியை நடத்தப்பார்த்தாங்க
கருணை அரிஜன சேவைசெய்ய
காயிதம் பென்சில்மறுத்தாங்க

புண்ணாகியது சின்னத்தனப்
புதுக்கொடுமையைக் கண்டதுமே
உண்ணாவிரதம் தானிருக்க
உத்தமன் காந்தி தொடங்கிவிட்டார்

தன்சாமர்த்தியம் தேசத்தையே
தட்டியெழுப்பிடு மென்று கண்டு
அஞ்சாநாளில் விடுதலையாக்கி
அரும்பழிவிட்டான் வெல்லிங்கிட்டன்

உண்ணாவிரதம் காரணமாய்
உடனே விடுதலையானதனால்
அந்நாள் முதலோர் வருஷம்மட்டும்
அரிஜனசேவையே செய்வதென்று

தண்டனைதந்த ஒருவருசம்
தானும் அரசியல் காரியத்தில்
கொண்டுசெலுத்துவ தில்லையென்று
கொண்டார் விரதம் காந்திமகான்

## 1934. சட்டமறுப்பை நிறுத்துதல்

நேசமுள்ளமக்கள் அரிஜனத்தை
நேரில்பழகிக் குறையறிய
தேசமுச்சூடும் பிரயாணம்
செஞ்சார் காந்திமகாத்மாவும்

தேசநடப்பைத் தெரிஞ்சுக்கிட்டார்
திடீரென்று போரை நிறுத்திவிட்டார்
மாசறுசத்தியப் போர்தனையே
வகுத்துவிட்டதோர் காந்திமகான்

கொல்லுக்கொலைகளுக் கஞ்சாமல்
குண்டுமருந்துக்கு மஞ்சாமல்
தடியடிக்கும் சலிக்காமல்
தண்டனை வாங்கத்தயங்காமல்

சத்தியப்போரின் சமர்க்களத்தில்
தாவிக்குதித்த சனங்களெல்லாம்
நித்தியகண்டத்துக் காளாகி
நேத்திருந்தாரின்று காணாமல்

எங்குமே இந்திய மக்களெல்லாம்
இளைத்து அலுத்துப் போனதையும்
தங்களின் சக்தியை தேசத்துக்கே
தத்தம்புரிஞ்சு விட்டதையும்

கண்டே காந்தி மகாத்மாவும்
காருண்யப்போரை நிறுத்திவிட்டு
தொண்டே செய்து அலுத்தவரே
சோர்வைத்தீருங்க ளென்றுசொல்லி

இன்றேடு சட்டமறுப்புமில்லை
எல்லோருங்கூடிச் செயல்வேண்டாம்
ஒன்ருய் நான்மட்டும் செய்திடுவேன்
ஊர்கூடிச்செய்வது இல்லையென்ருர்

நாலுவருசம் நடந்த சண்டை
நாட்டைக்கலக்கிய சத்தியப்போர்
வெள்ளையன் தன்னிரு கண்ணிலுமே
விரலைவிட்டு ஆட்டியபோர்

முப்பதாமாண்டில் துவக்கியபோர்
மூன்றரையாண்டு நடத்தியபோர்
அற்புதமாயிரம் கண்டுள்ளபோர்
அடிமையெண்ண மகற்றியபோர்

தேசத்துமக்களின் சிந்தையிலே
தியாகத்தை வீரத்தைஊட்டியபோர்
மாசற்றசத்தியந் தன்னுடைய
மகத்துவந் தன்னைக்காட்டியபோர்

மகாத்மாகாந்தியை நாட்டுடைய
மாணிக்கமாகவே ஆக்கியபோர்
மாநிலத்தோர்க்கு கிழக்கினிலே
மறுபடிதெய்வீகங் காட்டியபோர்

உப்புசத்யாக்ரகம் என்றுசொல்லி
உலகைக்கலக்கிய சத்தியப்போர்
ஒப்பும் உவமையும் இல்லாத
உத்தமன் காந்தி நடத்தியபோர்

தப்புவழிதன்னில் செல்லாமல்
தாரணியில் மக்கள் வாழ்ந்திடலாம்
அற்புதமொன்றுமே யில்லையென்று
அஹிம்சை விந்தையைக் காட்டியபோர்

இப்புவிபோற்ற நடந்துள்ளபோர்
இந்தியர்பெருமை கண்டுள்ளபோர்
இரண்டரைலெட்சம் பெயருக்குமேல்
இன்முகத்தோடு சிறைசென்றபோர்

ஊரும் பெயரும் தெரியாத
உத்தமத்தொண்டர் பல்லாயிரம்பேர்
யாரும் புகழ்வதை யெண்ணுமல்
அன்னையைக்காக்க அடிபட்டபோர்

நன்று முடிந்தது ஆண்டவனுர்
நல்லருள் வாழ்த்தி வணங்கிடுவோம்
தொன்று நிகழ்ந்த பழங்கதையாய்ச்
சொல்லும் தலைமுறை சொல்லுமிதை

## 137

### நாட்டின் நிலைமை

சட்டமறுப்பை நிறுத்தியதால்
சஞ்சலம் குழப்பமுண்டாச்சு
திட்டமானசெய லில்லையப்போ
சிந்திக்கநேரமும் உண்டாச்சு

வித்தல்பாயும் சுபாஷ்போசும்
வியன்னாவில் சுகவாசம் செய்தோர்
சத்தியப்போர்முறை தோற்றதென்றே
சாட்டியறிக்கையும் விட்டார்கள்

சத்தியப்போரில் குதித்த பலர்
தன்னைமறந்து இறங்கியபேர்
மித்திரபேதத்தைக் கேட்டுவிட்டு
வீணுழைப்பானதோ யென்றார்கள்

நாலாறுமாதம் சிறைபுகுந்தே
நானும்பெரியவ னென்றசிலர்
மேலாகயோசனை சொல்லிக்கொண்டே
வேதாந்தம் பேசிடலானார்கள்

கெட்டசிறையில் கிடந்துஉடல்
கெட்டுமெலிந்து மனசுநொந்தோர்
கஷ்டமும் பட்டதில் குத்தமுண்டோ
காணோம் சுதந்திரம் காணோமென்றார்

நாட்டில் சுதந்திர எண்ணமது
நாலுதிசையிலும் தான்பரவி
வீட்டுக்குவீடுள்ள மக்களெல்லாம்
வேண்டும் சுதந்திரம் வேண்டுமென்றே

நம்பிக்கைவீரம் வளர்ந்ததையும்
நாடியேகேட்கத் துணிந்ததையும்
தெம்புக்கடையாளம் இந்தமட்டும்
ஜெயம் கிடைத்தது என்பார்சிலர்

சட்டசபைப் பிரவேசம் செய்தே
சமர்புரிந்திட வேணுமென்று
திட்டமொன்றுகொண்டு வந்தார்கள்
தேசத்தலைவர்கள் பல பேர்கள்

**காங்கிரஸ் சமதர்ம கட்சி**

தீவிரவாதி ஜயப்பிரகாஷ்
திரட்டிவிட்டார் கட்சியொன்று
தேசமகாசபைக் காரியத்தைத்
தீவிர மாக்கவே திட்டமிட்டார்

காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியென்றே
கண்டபுதுக்கட்சி உண்டாச்சு
காங்கிரசுக்குள்ளே கட்சிஒண்ணு
கண்டதுமேசபை ரெண்டாச்சு

இந்தப்புதுக்கட்சிக் காரர்களோ
இளம்பிள்ளைச் சிங்கங்கள் ஊக்கமுள்ளோர்
சிந்தையில் தேசத்துச் சேவையன்றி
சேதிகள்வேறு நினைத்தறியார்

ஓங்கபுரட்சியும் ஓங்கவென்றே
உள்ளந்துடித்து அறைகூவி
தாங்கிடுவா ரெந்தத் தண்டனையும்
தாய்நாட்டுக்கு உயிர்கொடுப்பார்

சத்தியம் அஹிம்சை சாந்தமெல்லாம்
யுக்திவகையினில் ஒன்று என்பார்
புத்தம் புதியநல் லாயுதத்தால்
புரட்சி செய்திட வேணுமென்பார்

ஜெயப்பிரகாசர் சேதிகளைத்
தெரிந்தமட்டிலுஞ் சொல்லுகிறோம்
பயப்படுதைய்யா பேனவும்
பாட்டாளிகூட்டக் கதையெழுத

பட்டிக்காட்டுமக்கள் கூட்டத்திலே
பாலன்ஜயப்பிரகாஷ் வந்துதித்தார்
பட்டணவாசத்தைப் பார்த்ததெல்லாம்
பத்தொன்பதாம்வயசான பின்னே

அமெரிக்காவில் படிக்கவென்றே
ஆசையுங்கொண்டங்கு போய்ச்சேர்ந்தார்
ஆப்பிளுதோட்டத்தில் கூடைதூக்கி
ஆப்பிட்டகூலியிலே படித்தார்

மோட்டார்துடைச்சுக் கூலிபெற்று
முத்தனையகல்வி கத்துக்கிட்டார்
போர்ட்டராகவும் மூட்டைதூக்கி
புத்திப்படிப்புகள் கத்துக்கிட்டார்

காப்பிக்கடையிலே வேலைசெய்து
காசில்படிப்பு படிச்சுக்கிட்டார்
கஷ்டப்பட்டுக்கூலி வேலைசெய்து
கஷ்டமும்சுகமும் கத்துக்கிட்டார்

மக்கள் பிறந்தது மண்ணிலேதான்
வாழ்வதில்பற்பல வித்யாசம்
மானிடரில்சிலபேர்கள் மட்டும்
மாடியில்மெத்தையில் வாழுகிறார்

மோட்டாரேறி ஒருவன்செல்ல
முக்கிநடந்து ஒருவன்செல்ல
வீட்டாரோடொத்தன் வாழ்ந்திருக்க
வேலைசெய்யப்பலர் காத்திருக்க

புளிச்சேப்பம் விட்டுச்சிலர்வாழ
புடிச்சோறுமின்றிச் சிலர்சாக
களிச்சோடிச்சிலபேர் விளையாட
கஞ்சிக்கு மின்றிப் பலர்வாட

லெச்சமும் கோடி சிலர் சேர்க்க
பிச்சையிடென்று பலர் கேட்க
அச்சத்தை விட்டுச் சிலர் பாட
அஞ்சி அஞ்சிப் பலர் திண்டாட

இந்த நிலைமைக்குக் காரணமோ
ஏழை பணக்காரர் பேதமென்றே
நொந்து புரையோடிப் போனஇந்த
நோய்க்கு மருந்துகள் தேடவெண்ணி

ஏழை பணக்காரன் பேதமெல்லாம்
இந்திய நாட்டுக்குக் கூடாது
எல்லோரும் சமமாகு மென்றே
இந்திய தேசச்சபை பூந்தார்

கண்ணியமாக உழைத்து வந்தார்
காந்தி சொல்கேட்டுச் சிறைபுகுந்தார்
எண்ணியகாரியம் தான்நடத்த
இன்றொருகட்சி துவக்கிவிட்டார்

## காந்தி மகாத்மா காங்கிரசிலிருந்து விலகுதல்

காங்கிரசில் சமதர்மக்கட்சி
கண்ட மகாத்மா சிந்தை நொந்தார்
பாங்கில்லை நம்முடை நாட்டுக்கிது
பலாத்காரப் புரட்சியென்றார்

வலியவருக்கு வலியவர்கள்
வையகத்திலே தானுமுண்டு
எலியைப் பூனை பிடிக்குமப்பா
இந்தப் பூனைக்கொரு நாயுமுண்டு

அந்த நாய்தன்னை அடித்தவனை
அடிக்குமதிகாரி தானுமுண்டு
அதிகாரிதன்னை அதட்டுகிற
ஆளுமரசன் தானுமுண்டு

ஆளுமரசன் றனைமிரட்ட
அடுத்தநாட்டில் ராஜனுண்டு
அடுத்தநாட்டு அரசனுக்கும்
ஆனபகைவர்கள் மெத்தவுண்டு

இந்தப்படிக்கு பலாத்காரம்
எல்லையில்லாததோர் பாலைவனம்
நொந்துமடிவது ஏழைமக்கள்
நோக்கமொன்றும் நிறைவேறாது

கத்தியைத்தெய்வமென வணங்கி
கைதொழுதேபணி செய்துவந்தால்
கத்திக்குமக்கள் இளப்பமென்ற
காலமும்சீக்கிரம் வந்துவிடும்

கத்திக்குமேலொரு ஈட்டியுண்டு
கம்புக்கு மேலொரு அம்புமுண்டு
சத்தியமான அஹிம்சையிலே
சண்டையுமில்லையே சாவுமில்லை

சத்தியவாழ்விலே நன்மைவரும்
சமாதானமும் கூடிவரும்
வெற்றிகிடைக்காமல் போனாலும்
வேதனையேதும் கிடையாது

சத்தியஞானிக்கு லோகமெல்லாம்
தன்னுடைமக்கள் எனத்தோன்றும்
சத்தியஞானிக்கு ராசரெல்லாம்
தாசானுதாச ராகிடுவார்

சத்தியவாக் கரிச்சந்திரனை
தாரணிமக்கள் புகழ்ந்திடுரூர்
அத்தனைபேரும். அரிச்சந்திரன்
ஆகவழி சொன்னேன் கேட்கவில்லை

என்னைநெருங்கி யிருந்திடுவோர்
எல்லாமுந்தியாகம் புரிந்திடுவோர்
இன்னும்இதனை உணராமல்
இம்சைவழியே நினைப்பதென்ருல்

தத்துவம்தானே சரியில்லையோ
சாற்றும்முறை நான் அறியல்லையோ
இத்தரைமீதிலே சத்தியந்தான்
இருக்க நேரம் வரவில்லையோ

நான்சொல்லும்சத்திய மென்னவென்ருல்
நரம்பில்ஓடிடும் ரத்தமதே
தான்சொல்லும்சத்தியம் என்னவென்ருல்
தாயின்வயிற்றில் குழந்தையைப்போல் 158)

தூக்கத்தில்நம்மை யெழுப்பிவிட்டு
சொல்லுநினைப்பதை யென்றுசொன்னல்
ஊக்கத்துடன் சொல்ல வேண்டுமட்டும்
உண்மைப்பழக்கம் வரவேண்டும்

என்னநினைக்கிரு யென்ரெருவர்
இடைமறித்துமே கேட்டுவிட்டால்
இம்மென்று மென னுமுழுங்காமல்
எண்ணத்தைச்சொல்ல வரவேண்டும்

இரகசியமென்பது ஏதுமின்றி
எண்ணமும செய்கையும் ஒண்ணுகி
பரசியமாகவே செய்யவேண்டும்
பயந்துசெய்வது சத்தியமோ

அன்பில்குதிப்பது நல்லதுதான்
அந்தகராகிக் குதிப்பதுண்டோ
என்சொல்புரிந்து குதித்திருந்தால்
எதிரில் நிற்காதோ சுயராஜ்யம்

கொடிதனில்ராட்டினம் போட்டுவிட்டார்
கொள்கையைகாற்றில் பறக்கவிட்டார்
முடியும்மட்டும்ராட்டை சுற்றச்சொன்னேன்
முன்னும்பின்னும் பார்த்துமுழித்திடுறார்

தீண்டாமைவிலக்குச் செய்வதிலே
தீவிரமாக இறங்கவில்லை
தூண்டாவிளக்குக் குடிசைத்தொழில்
சுடரைத்தட்டி விடுவதில்லை

தந்திரமாகவே அஹிம்சையைத்
தானேகருதிடும் பேர்களுண்டு
மந்திரமாகவே சொல்லுகிறார்
வாழ்க்கையிலேஅதை ஏற்கவில்லை

இத்தனைகுத்த மிருந்தாலும்
என்னுடைகண்மணி காங்கிரசு
சத்திய மார்க்கத்தில் போரிட்டபேர்
தானே நிறைந்தது காங்கிரசு

தந்நலமில்லாத தொண்டர்களும்
சகலசொத்தும் இழந்தவரும்
இந்நிலந்தன்னிலே காங்கிரஸ்போல்
எந்தச்சபையிலு மில்லைகண்டேன்

இந்நிலையாக இருந்தாலும்
என்னென்னமோ பலபேசிடினும்
என்னுடையுத்தரம் கேட்டுவிட்டால்
எதுவந்தாலும் தாங்குகிறார்

சட்டமறுப்பில் இறங்கச்சொன்னால்
சாவுக்குமஞ்சாமல் சாயுகிறார்
நட்டங்கள்பாராதீ ரென்றுசொன்னால்
நவநிதிதானு மிழந்திடுறார்

தன்மனச்சாட்சி தடுத்தாலும்
தலைவன்நான் எனக்கட்டுப்பட்டு
பொன்மனைவாழ்வு பொருள்யாவும்
புண்ணியபூமிக்குத் தத்தம்செய்தார்

காங்கிரஸ்கட்சிக்குள் நாமிருந்தால்
கட்டுப்பட்டுஅவர் நைந்திடுவார்
ஆங்கிலத்தோரின் அடக்குமுறை
அதுக்கும்மேலாகும் என்செயலே

கண்ணியமில்லாத கால்விலங்கு
கழட்டியெறியப் போர்புரிந்தால்
புண்ணியன்காந்தியின் கட்டுதிட்டம்
பொன்விலங்கா வந்து பூட்டுதென்பர்

ஆளுங்கொடுமையை நீக்கவந்தே
அன்புக்கொடுமையில் மாட்டிக்கொண்டு
நாளும்பொழுதுமே எண்ணி யெண்ணி
நாடுஞ்செயல் செய்யமுடியாமல்

திண்டாடும்காங்கிரஸ் காரரெல்லாம்
திட்டத்தைதாங்கள் வகுத்துக்கொண்டு
கொண்டாடும்புண்ணிய பூமிக்குமே
கொண்டுவரட்டும் சுயாட்சியென்றே

தந்தைமகனை வளர்த்தெடுத்து
சங்கதியாவும் படிச்சுவிட்டு
சாவியைக்கையில் கொடுப்பதுபோல்
சாந்தமகானுமே செய்துவிட்டார்

காங்கிரஸ் மாசபை தன்னிலெந்தக்
காலமும்நானினி மெம்பரல்ல
ஆங்கிலராஜ்ஜியந் தன்னைவிட்டு
அன்னையை விடுதலை செய்யுமென்றார்

காங்கிரசைவிட்டு நான்விலகக்
காலமும்வந்தது ஆனாலும்
காங்கிரசுக் கெந்தக் காலத்திலும்
கைகட்டிச் சேவகம் செய்திடுவேன்

சத்தியசோதனை தான்நடத்த
தனிவழியிலே போய்வருவேன்
உத்தமமாக நடந்திடுவீர்
உழைத்து நாட்டையே காப்பாற்றும்

என்றெங்கள் காந்திதவராஜன்
இந்தியக் காங்கிரஸ் தன்னைவிட்டார்
அன்றுமுதல் இந்த உலகத்திலே
அனைவருக்கும் பொதுவாகிவிட்டார்

சிந்தைதுடித்தது காங்கிரசு
சிவந்துகண்களில் நீர்வழிய
எந்தையே தங்களின்சேவைதனை
என்றைக்குந்தந்திட வேண்டுமென்றார்

யுத்தத்தைக் கண்டுமே கண்கலங்கா
உள்ளம் படைத்தவர் கண்ணீர் விட்டார்
ரெத்தத்தில் சோர்வையறியாத
அத்தனை தலைவரும் கண்ணீர்விட்டார்

காந்திமகான்சொன்ன திட்டமெல்லாம்
காங்கிரசுக்குள்ளே சேர்த்துக்கொண்டார்
சாந்தமகானுக்கு ஓர்சலுகை
சட்டமறுப்பைக்கொடுத்துவிட்டார்

இந்தப்படிக்குமே தேசமெல்லாம்
எழுப்பி தட்டிக் கொடுத்தமகான்
இந்தியமக்களின் சிந்தையிலே
என்றைக்குமே குடிகொண்டமகான்

காங்கிரஸ்காரரின் கூட்டத்துக்கே
கடவுளாகிய காந்திமகான்
ஆங்கிலமக்களும் நேசமுடன்
அன்பெனக் கொண்டாடும் காந்திமகான்

காங்கிரஸ்தன்னை யுலகத்துக்கே
கருத்தில்பதியச் செய்தமகான்
பாங்குடன் சத்திய தர்மத்துக்கே
பாஷியமாய்வந்த காந்திமகான்

இந்தியநாட்டுக்குச் சொந்தமகான்
எல்லாநாட்டுககுஞ் சொந்தமகான்
சுந்திரமான சுயராஜ்ஜியந்தனைத்
தோன்றச்செய்த காந்திமகான்

ஏழைஎளியவர் போற்றுமகான்
எங்கள்தலைமுறை சாற்றுமகான்
வாழையடி வாழையாக வந்து
வாய்மையுபதேசஞ் செய்யுமகான்

கட்சிப் பகைக்குள் கலக்காமல்
காந்தியும் காங்கிரஸ் தன்னைவிட்டு
காற்று மழையும் கதிர்போலே
காசினிக்கே பொதுவாகிவிட்டார் 1610

சொத்துக்கள் எந்நாளும் கைமாறும்
சொல்லெந்த நாளைக்கும் மாருது
தத்துவம் காந்தி கொடுத்ததெல்லாம்
தாரணிக்கெந்நாளும் செல்வமையா

தேசசுதந்திரச் சண்டையிலே
　　தியாகம் செய்தவர் பேர்களெல்லாம்
செப்புச்சிலைக்குள் ளடங்கிவிடும்
　　செப்பேடுசொல்லிடும் காந்தியையே

அரசியல்சண்டைக்குக் காந்திமகான்
　　ஆயிரங்காரியம் செய்தாலும்
அன்பும்அஹிம்சையும் சத்தியமும்
　　அளித்த பெருமைக்கீடாமோ

ராமாவதாரம் எனவுரைத்தால்
　　ராக்ஷசனாயினும் கொல்லவெண்ணான்
கிருஷ்ணாவதாரம் எனவுரைத்தால்
　　கேலிக்கும்சூளுரை சொல்லவெண்ணான்

புத்தாவதாரம் எனவுரைத்தால்
　　பூமிசைவாழ்வை வெறுத்தறியான்
பத்தவதாரங்கள் தன்னிலுமே இந்த
　　பரிபூர்ண ரூபத்தைக் கண்டறியோம்

மண்ணைப்படைத்த இறையவனார்
　　மானிடர்தம்மைப் படைத்துவிட்டே
பொன்னைப் பொருளைப் படைத்ததனால்
　　பூமியில் மானிடர் சண்டையிட்டார்

மானிடர்சண்டையை தீர்க்கவென்றே
　　மண்ணி லவதாரந் தானெடுத்து
ஆனவகையில் நெறிமுறைகள்
　　ஆண்டவன்வந்து எடுத்துரைத்தும்

சின்னமனிதர்கள் வாழ்வினிலே
　　சீர்திருத்தமும் காணாமல்
எண்ணியெண்ணி மனம்புண்ணாகி
　　ஏகாந்தமாக தனித்திருந்து

சண்டைக்கும் பூசற்குங் காரணமாய்
　　தானுள்ள மாத்சர்யம் போக்கிடவே
அண்டையச லுள்ளபேரை யெல்லாம்
　　அன்புடன் வாழ்பவ ராக்கிடவே

சாந்திசாந்தியென்று நான்முகனார்
　　ஜபமும்செய்து கைமண்ணெடுத்து
காந்தி காந்தியென்ற ரூபத்தையே
　　கருவுருவார்த்து கண்மூக்கெழுதி 1620

அன்பைக்குழைத்து புனல்பூசி
அமுதத்தைவாசக மாக்கிவைத்து
இன்பத்துடன்மக்கள் வாழ்வதையே
இதயத்தில் ஓடிடும்மூச்சாக்கி

தன்னலமற்ற பெருவாழ்வும்
சத்தியபோதனை செய்கைகளும்
எந்நிலமக்களும் சரிசமமாய்
எண்ணுமிதயமும் தானமைத்து

தாயிலும்சிறந்த அன்புடையான்
தாரத்திலும்மிக்க காதலுள்ளான்
சேயினும்தெள்ளிய சிந்தையுள்ளான்
தெய்வத்தைகாந்தி மகாத்மாவை

பூமிதிருத்தி மனிதரையே
புத்தியுடன் வாழச்செய்யுமென்று
சாமியருளிய சங்கநிதியான
சாந்தமகாத்துமா காந்தியையே

புண்ணியபூமியில் நாமடைய
புண்ணியந்தா னென்னபண்ணினமோ
கண்ணிமைபோல விந்நாட்டுக்கொரு
காந்திபிறக்குமென் றெண்ணினமோ

கத்தியும் ரத்தமுமில்லாமல்
யுத்தம்நடக்குமென் றெண்ணினமோ
சத்தியமார்க்கத்தில் சண்டையிட்டால்
வெற்றிகிடைக்குமென் றெண்ணினமோ

காங்கிரஸ் மாசபை தன்னருளால்
காந்திமகாத்மாவைக் கண்டுகொண்டோம்
காந்திமகாத்துமா தன்னருளே
காங்கிரசென்பதைக் கண்டுகொண்டோம்

காந்தியின் பொன்னடி போற்றுகிறோம்
காங்கிரஸ்தன்னையும் போற்றுகிறோம்
காந்தியைகாங்கிரஸ் தன்னையுமேஇரு
கண்ணென்ன வணங்கிப் போற்றுகிறோம்

## 1937 மாகாண சுய ஆட்சி

மாகாணவாரி சுயராஜ்ஜியமெனும்பேர்
மத்தியிலே வெள்ளையண்ணன் வச்சதேசட்டம்
மாகாணக் காரியத்தில் மந்திரிகளாட்சி
மத்தியிலேஇங்கிலீஷ் மகுடத்தின்மாட்சி

வரவுசெலவெல்லாமும் மந்திரிகளிஷ்டம்
வண்டியும்தவ்வாலும் வைசிராயிஷ்டம்
தரவும் மாட்டான் தள்ளியும் போகான்
தர்மசங்கடமான மாகாண ஆட்சி 1630

என்னென்னஆனாலும் மந்திரிகள்செயலாம்
எந்தநேரத்திலும் டில்லிதடுத்திடலாம்
இந்தவிதமாக ஒருதிட்டம்வரவேதான்
என்னதான்செய்வதெனக் காங்கிரசு பார்த்து

சட்டசபையாக்ஷியிதை விட்டிடுவோமானல்
சல்லிகளும்துரோகிகளும் உள்ளே நுழைவார்கள்
கிட்டவரும்சுயராஜ்யம் கிடைக்காமற்போகும்
கேலிக்குஆளாவர் இந்தியரென்றெண்ணி

கோடாலிக்காம்பதுகள் கொல்லனுடன்கூடி
கொம்பீந்தமரந்தனையே வெட்டவருவார்கள்
ஏடாகூடம்பெருகும் இந்தியர்க்குஇனிமேல்
எந்நாளும்சுயராஜ்ய மில்லாமற்போகும்

மத்தியஅசம்பிளியில் காங்கிரசுகட்சி
மகத்தானஜெயத்தோடு விளங்கிவரக்கண்டு
மாகாணஆச்சியிலும் காங்கிரசுசென்று
வந்ததொருசட்டமிதை உடைத்துவிடவெண்ணி

நாமேபோய்சட்டசபை நடத்தியதிலேறி
நாளடைவில்திட்டமிதை உடைத்துவிடவேணும்
சட்டசபையாட்சிதரும் திட்டமிதைத்தானே
தானேற்றுநடத்திடவுஞ் சரியென்றுசொன்னர்

## சட்டசபை மோஹம்

சட்டசபைக்குள் காங்கிரஸ்சேரும் சங்கதிகேட்டதுமே
பட்டம்பதவியி லாசைப்பட்ட பலரும்சேர்ந்தார்கள்

தொண்டர்கள்பட்ட துயரில்லாபம் கண்டிடலாமென்றே
துரோகிகளெல்லாம் காந்தியினுடைய தொப்பிபோடலானர்

காந்திமகானின் பேரையும்வித்துக் காசுபண்ணவெண்ணும்
கயவர்பலரும் காங்கிரசுக்குள் கருதிநுழைந்தார்கள்

கொள்ளைவட்டியே குலத்தொழிலாகக் கொண்டவர்சிலபேரும்
கும்பல்கும்பலாய் உள்ளேநுழைந்து கோவிந்தம்போட்டார்

உள்ளும்புறமும் சத்தியமென்பதைஒருபோதும்காணு
உத்தமர்பலரும் காங்கிரசுக்குள் உறவுதேடிவந்தார்

வங்கிலிருந்து ஈசல்கிளம்பி வந்ததுபோலவேதான்
வகைவகையான பேர்வழியெல்லாம் வந்தார் காங்கிரசில்

ஒத்துழையாமை உப்புப்போரில் ஊரும்சண்டையிட
உட்கார்ந்திருந்து காட்டிக்கொடுத்து ஊரையாண்ட பேரும்

நாயம் என்பது தாங்கள் செய்வது நாட்டை மறந்திடுதல்
நாட்டுப்போரிலிறங்கிய பேரை காட்டிக் கொடுத்திடுதல்

இந்திய நாட்டுத் தலைவரையெல்லாம் ஏளனம் பேசிடுதல்
இங்கிலீஷ்காரன் வாலுபுடிச்சுச் சாமரம் வீசிடுதல்

தெய்வம் பொய்யே திருமுறை பொய்யே திருவாசகம் பொய்யே
தேடும்பணமே மெய்மெய் மெய்யெனத் திருகுதாளம் பேசல்

நியாயம் என்பது மருந்துக்குமில்லா நிஷ்டூரம் பேசி
தாயும்கண்டு பயந்திடும் வண்ணம் தர்மநாயம் விட்டோர்

இருந்த வேலையைப் பங்கு போடவே இவர்கள் கூடிடுவார்
ஏழைக்கென்றே இன்றும் நாளையும் ஏதுஞ் செய்தறியார்

இந்தக்கட்சி காங்கிரசோடே எதிரிபோடலாச்சு
இருந்த இடம் தெரியாமல் கூட்டம் கலைந்து ஓடலாச்சு

எந்தக்கட்சியில் சேருவதென்று இடமுந்தேடலாச்சு
எல்லாருக்கும் காங்கிரஸ்சபையோ இடமுந்தரலாச்சு

கதருச்சட்டை காந்திக்குல்லாய் புதுசாவாங்கிட்டார்
கால்ரூபாயை வீசியெறிஞ்சு காங்கிரஸ் சேர்ந்திட்டார்

கள்ளுக்கடையை மச்சான்பேரால் கந்திராட்டெடுப்பார்கள்
காந்திநிதிக்குத் தன்னுடபேரால் காசுகொடுப்பார்கள்

காங்கிரசுக்குள் ஓட்டுக்காகக் கலந்தவரேயன்றி
கருணை சத்தியம் அஹிம்சையைத்தங்கள் கனவிலும் கண்டறியார்

பொன்னும் புகழும் காங்கிரசாலே புவியில் கிடைக்குமென
இன்னும் சிலரும் காங்கிரசுக்குள் இறங்கினரிந்நாளில்

தீயில் விழுந்த சாணம்நீந்து திருநீறானதுபோல்
தீமைக்காரர் தியாகிகளுறவால் தேசபக்தராவார்

காவிரியாத்தில் சிந்தாமணியின் கலங்கல் விழுந்தாலும்
கங்காநதியில் சாக்கடைக்கும்பி கலந்துவிழுந்தாலும்

கங்கையும்காவிரிபோலவே காங்கிரஸ் கலங்காமல் வாழும்
காசினிமானிடர் மாசையொழிக்கும் காங்கிரஸ் என்றார்கள்

புளியைப் போட்டு விளக்கிய் பித்தளை பொன்னாயாகிடுமோ
பொங்கல் வைத்துக் கும்பிட்டாலும் பொறவிக் குணம்போமோ

## சட்டசபை பிரசாரம்

ஆனந்தவிகடன் தினமணியும்
அத்தனை காங்கிரஸ் பேப்பர்களும்
வானங்குமுறு மிடிமழைபோல்
வாக்கு ப்ரசாரம் செய்துவர

சத்தியமூர்த்திச் சிங்கமது
சரமழையாய்ப் பேசிவர
சட்டசபைப் பிரவேசித்துக்கே
சங்கநாதம் செய்துவர

ஆணிமுத்து மழைபெய்ததுபோல்
ஆனந்தவாரி அலைகளைப்போல்
பேணிவளர்த்த குழந்தையது
பேசும்மழலை இனிப்பினைப்போல்

பூமழைதேவர் பொழிந்ததுபோல்
பொன்மணிநாதம் முழங்கினப்போல்
தேவர்கள்துந்துபி தானிதுவோ
செந்தமிழின்பம் இதுதானோ

சத்தியமூர்த்தியின் பேச்சுக்குமுன்
சங்கீதம்நின்று தலைவணங்கும்
எத்திசையாரும் சனத்திரளாய்
இருந்து பிரசங்கம் கேட்டிடுவார்

ராஜாஜியின் பிரசங்கத்திலே
ராஜ்ஜியம் நம்மளதென்றறிவோம்
ரத்தக்கண்ணீரை வடித்திடுவோம்
ராத்திரித்தூக்கமும் கெட்டுவிடும்

குட்டிக்கதைகளைச் சொல்லிடுவார்
குருத்துவிட்டிடும் தேசபக்தி
தட்டிஎழுப்பிடும் சிந்தனையை
தன்னலமற்று பணிசெய்யுவோம்

சீவானந்தம் பிரசங்கத்திலே
சிந்தைகொதிச்சு எழுந்திருக்கும்
செய்யும்வகைகள் தெரியாமல்
சீறியெழுந்திடும் கோபக்கனல்

காமராஜநாடார் பேச்சுக்குள்ளே
கக்கண்டும்பாலும் கலந்திருக்கும்
மாமன்மருமகன் சேதியைப்போல்
மண்டலச்சேதியைச் சொல்லிடுவார்

மட்டப்பாரைச்சிங்கம் பட்டாபி
மார்தட்டிஅஹிம்சை பேசிடுவார்
கட்டப்பாரையடி பட்டதுபோல்
கலங்கிவிரியும் நெஞ்சமெல்லாம்

சங்குசுப்ரமண்யம் ராமய்யா
சங்கரன்கூடியே பேசிவர
தங்குதடையின்றித் தான்பொழியும்
தருணமழைபோல் பெய்துவர

தூத்துக்குடி சோமயாஜுலுவும்
தொண்டர் சுப்பையாபேசிவர
சாத்துக்குடிப் பழச்சாறுபோலே
சனங்களுள்ளத்தில் வீறுவர

திருகூடசுந்தரம் பிள்ளையுமே
தேன்போலே தமிள் பேசிவர
தென்னாடெங்குமே தேசபக்தி
தென்றலைப்போலே தவழ்ந்துவர

குங்குமப்பொட்டுத் துலங்குகிற
கோதைநாயகி அம்மாளும்
கோயம்புத்தூரு குருகுலத்தார்
கொடுமுடிசுந்தரி பாடிவர

தெக்கு வடக்குந் தெரியாமல்
சிதறவடிக்கும் புயல் போலே
உக்கிரமான பிரசாரம்
உலகங்கூடிச் செய்துவர

சுப்பிரமணிய சிவஞானி
தூவியவித்து மரமாகி
எப்பக்கமும் கிளைசூழ்ந்து
இலையும்தழைச்சுப் பழுத்தபழம்

செந்தமிழ்நாட்டின் சிந்தையிலே
தேசபக்தி பயிர்தான் விளைஞ்சு
இந்தியநாடு முச்சூடும்
இன்பச் சுதந்திரம் பெற்றிடவே

ஓட்டுப்போடவந்தார்—ஜனங்கள்
கூட்டங் கூட்டமாக (ஓ).

மாரிலேசந்தனம் பூசிக்கிட்டார்
மஞ்சத்தலைப்பா கட்டிக்கிட்டார்
ஊரிலே உள்ள ஜவந்திப்பூவெல்லாம்
ஒண் ணொண்ணுகாதில் சொருகிக்கிட்டார் (ஓ)

மஞ்சள்பெட்டிக்கு ஓட்டு
மகாத்மாகாந்திக்கு ஓட்டு
வஞ்சகக்காரக் கக்ஷிகளை நீ
வாலைமுறுக்கி ஓட்டு ஓட்டு (ஓ)

சென்னைமாகாணம் தலைதூக்க
செஸ்டிஸ்கட்சி வழிபார்க்க
அன்னையின்நாடு தான் செழிக்க
அனைவரும்நல்லாத் தான் பிழைக்க (ஓ)

தேசத்துக்கும் உழைக்காமல்
சேவிச்சுக்காலைக் கழுவிக்கிட்டு
தெந்தினம்பாடிய ஜெஸ்டிஸ்கட்சி
செத்துமடிஞ்சது சென்னையிலே (ஓ)

வாக்குக்கொடுத்தது தேசமெல்லாம்
வந்ததுகாங்கிரஸ் ஆட்சிசெய்ய
தாக்குதலுக்குத் தலைவணங்கா
சத்தியப்போரின் மகிமையினால் (ஓ)

முக்கால் வாசிக்கு மேலாக
முன்னே வந்தது காங்கிரசு
அக்கால்வாசி ஓட்டுகளும்
அதிகாரப்பே யால்போச்சு

தேர்தல்தன்னில் ஜெயித்தவரே
தேசத்துமக்களின் கட்சியென்பார்
வாக்குகள் பெற்றுவலுத்தகட்சி
மந்திரியாகத் தகுந்ததென்பார்

காங்கிரஸ் கட்சிஜயித்திடவே
கவர்ண்மெண்டாரும் கண்கலங்கி
வாங்களேன் மந்திரியாகவென்று
மாகாண கவர்னர் கூப்பிடவே

காந்தி மகாத்மாவும் பாத்துப்பிட்டு
காங்கிரசுக்கொரு சேதிசொன்னர்
சாந்தமகாத்மாவும் பாத்துப்பிட்டு
சர்க்காருக்குமோர் சேதிசொன்னர்

மக்களின் நம்பிக்கைபெத்தவர்கள்
வாக்குப்பலத்தை அடைந்தவர்கள்
தக்கபடி அரசாட்சிதனைத்
தானே நடத்தச் சமத்துடையோர்

தங்களின் நோக்கம்போல் ஆட்சிமுறை
தானே நடத்தி வரவேண்டும்
உங்கள் குறுக்கீடு வந்துவிட்டால்
உப்புக்குமாகாது சர்க்காரும்

வைசிராய் கவுணர் உத்தரவு
வந்துகுறுக்கிட்டுக் காரியத்தை
பைசாக்காசுக்குமாகாமல்
பதராய்ப்போய் விடுமானதனல்

மாகாண மந்திரி ஆட்சியிலே
வந்துபுகுவது மில்லையென்று
மாகாண கவுணர் வாக்குத்தந்தால்
மந்திரிசபையைச் சேருமென்ருர்

இந்தநல்லபுத்தி தன்னையப்போ
திருந்த சர்க்காருங் கேட்காமல்
வந்துபுகுந்த துரோகியெல்லாம்
மந்திரியாக்கத் துணிந்தாராம்

மன்னவராட்சி நடைபெறவே
வந்தோம்வந்தோம் என்றுசொல்லி
மக்களைச்சற்றும் மதியாமல்
மந்திரியானர் பற்பலபேர்

வாக்குப்பலத்தில் ஜயித்துவந்தோர்
வாசற்படியிலே காத்திருக்க
தாக்கிப்பிடிச்சு தவிச்சுநிற்கும்
தாசானுதாசர்கள் மந்திரியாய் 1690

பாரதமக்களே நாம்மதியோம்
பட்டம்பதவியே வேண்டுமென
காரணகாரியத் தோடுசொல்லி
கவுருமெண்டுக் குறவானார்

தேசமுச்சூடும் எதிர்ப்பாச்சு
சீச்சீஎன்று பழித்தார்கள்
யோசனைசெய்தார் கவுணரெல்லாம்
உடனேகாங்கிரசை யழைத்து

உங்கள்மதிப்படி ஆட்சிசெய்வீர்
ஒன்றிலும் நாங்கள் குறுக்கேவரோம்
எங்கள்உறுதிஇதை உரைத்தோமென
இறங்கிவந்தது ராசாங்கம்

ஆறுமாகாணம் காங்கிரசில்
அன்றே மந்திரியானார்கள்
வேறு மாகாணம் இரண்டிலுமே
விரைவில் காங்கிரஸாட்சி செய்தார்

பம்பாய் பீகார் அஸ்ஸாமில்
பட்டணம் அயிக்கிய மாகாணம்
பகரும் ஒரிசா காங்கிரசே
பாக்கியில் பாதியும் காங்கிரசே

எட்டு மாகாணம் காங்கிரசாய்
ஏற்பட்டு ஆட்சி நட்ந்திடவே
இந்திய ரெல்லாம் பூரித்தார்
எங்களதாட்சி யென்றார்கள்

## காங்கிரஸ் மந்திரி சபைகள்

மந்திரியானார் சென்னையிலே
மதிவல்லவனும் ராஜாஜி
சொந்த நாட்டுக்கு தொண்டுகள் செய்ய
சொக்காய் போட்டார் ராஜாஜி

ஹிந்தி படிக்கவே சட்டமிட்டார்
ஏழை கடனையும் தீத்துவிட்டார்
நொந்துபோனதோர் தென்னைபனைக்கும்
நோக்காடுகளைத் தீர்த்துவிட்டார்

சேலம் கடப்பை சித்தூரு
ஜில்லா மூணில் மதுவிலக்கு
நீலன் சிலேயைத் தூக்கியது
நின்ன இடத்திலே மண் தூவி

திங்கவும் உதவாச்செடிநட்டு
செத்தையும் பில்லும் முளேக்கவிட்டு
எங்களே அடக்கியாண்டுவிட்டால்
இந்தக்கதி தானென்ருராம்

மீதிவரிகளே ரத்துசெய்ய
விற்பனே வரியை போட்டுவிட்டார்
கள்ளேயொழித்து விரட்டிவிட
கடைச்சாமான் வரிபோட்டுவிட்டார்

இன்னும் எத்தனே சட்டங்களோ
ஏழைக்கு நல்லது செய்துவைத்தார்
பின்னும் முன்னும் பார்த்தறியோம்
பேஷாய் ஆட்சி நடந்திடவே

## நல்லதை எதிர்க்கும் கூட்டம்

உழுதுபடைத்து ஊரைக்காத்தும் உண்ணச்சோறின்றி
ஒண்ணும்ரெண்டுமாய்கடனும்வாங்கி உயிரைவாழும்மக்கள்

வாங்கினகடனுக்குப்பத்துப்பங்கு வட்டிகட்டிவிட்டு
வரையோடெடுத்து பிச்சையெடுத்தார் வாழ்வுதந்தமக்கள்

ஒண்ணரைப்பணமேவட்டியும்முதலும் ஒம்பதுருபாய்
உள்ளநாளெல்லாம் ஓடவிரட்டி உறிஞ்சுவதைக்கண்டே

வாங்கினகடனுக்கு மேலொருபங்கு வட்டிமட்டுமென்றே
வலுக்கட்டாயச்சட்டங்கொண்டு வந்ததுகாங்கிரசு

வந்ததுசட்டம்குடியானவர்கள் வயிற்றில்பாலூத்த
நொந்தனர்வட்டிக் காசையடிக்கும் நோக்கமுள்ளபேர்கள்

மூட்டைமூட்டையாய்வட்டியடித்த மோசக்காரரெல்லாம்
மூக்காலழுதார் காங்கிரசாட்சி மோசம்மோசமென்ருர்

கடன்நிவாரணச்சட்டம் கண்டார் காகா கூவென்ருர்
கலியாணத்துக்கும் சாவுக்குமேழை கதறிடுவானென்ருர்

இந்திபடிக்கசட்டம் வந்தது இதுவெண்டாமென்ருர்
செந்தமிழ்காக்கும்சேவைஎன்று திரித்துப்பேரிட்டார்

கள்ளைவிலக்கச் சட்டம்வந்ததும் கடுங்கூச்சல் போட்டார்
களிப்பும்வாழ்வும் ஏழைகளுக்குக் கள்ளிலேதானென்றார்

காசும்பணமும் பேசறபோது கருத்துக்கிடமுண்டோ
கண்ணும்குருடாம் காதும்செவிடாம் காசேபெரிசானால்

ஏழைபாழைகள் வாழ்வுபோச்சுது என்றே அழுதார்கள்
எந்த நாளைக்கும் ஏழைஏழையாய் இருக்கவேண்டுமென்போர்

வட்டியைவாங்கிக் கட்டியவீட்டில் வாசம்செய்திடுவோர்
வகுத்தெரிச்சலில் பணமும்காசும் வங்கியும்வைத்திடுவோர்

வாழும்வாழ்வு ஏழையுழைப்பில் வக்கணைகண்ணீரில்
வாக்கும்மனமும் ஏழையையென்றும் தாக்குஞ்செயல்களிலே

நல்லதையெந்த நாளுமெதிர்க்கும் நாசகாரக்கும்பல்
நாட்டைக்காட்டிக் கொடுத்தேவாழும் நன்றிகெட்டகும்பல்

தன்னலப்பேயே உருவமெடுத்த சதிகாரக்கூட்டம்
தானும் வாழார் பிறருக்குமீயார் தனமே பெரிதென்பார்

குடியானவரும் விவசாயிகளும் கும்பிடுபோட்டார்கள்
குவலயமெல்லாம் காக்கும் கையால் கும்பிடுபோட்டார்கள்

கள்ளும்போச்சு கடனும்போச்சு காங்கிரசாட்சியிலே
கையைக்கட்டி அஞ்சிப்பிழைக்கும் காலம்போச்சென்றார்

ஏழைகளெல்லாம் காங்கிரசாட்சியை எங்களாட்சியென்றார்
இன்றொருசட்டம் முதலில்வந்தது பொன்னுடிதுதனிலே

## ஆலயப் பிரவேசம்

செந்தமிழ்நாட்டுத் தலைநகராகிய தென்னன்மதுரையிலே
தெய்வச்சொக்கர் வந்துமணந்த தேவியின் மதுரையிலே

பைந்தமிழ்பாடிநால்வர்துதித்த பாண்டியன்கூடலிலே
பகருவதெல்லாம் பாட்டாய்ப்பெருகும் பண்புடை கூடலிலே

அன்றும்இன்றும் என்றும்குறையா அழகியதென்மதுரை
ஆற்றிலிறங்கி அழகர்தமிழை அள்ளித்தரும்மதுரை

தாயாருட்டும் பாலுஞ்சோறும் தமிழாய் மாறுமென
தாரணியெல்லாம் பேரணிகூறும் தமிழன் மதுரையிலே

அன்னைமரகத வடிவுடையாளின் ஆசாரக் கோவில்
அதனைத்திறந்தார் அரிஜனமக்கள் ஆசைதீர வேண்டி

சேரிகளெங்கும் தோரணம்கட்டித் திருநாள் கொண்டாடி
செந்தமிழ்மதுரைத் தேவியைக்கண்ணால் தெரிசனம் செய்தார்கள்

கூட்டங்கூட்டமாய் அரிஜனமக்கள் குஞ்சு குழந்தையுடன்
ஓட்டமோட்டமாய் மதுரைக்கோவில் உள்ளே நுழைந்தார்கள்

பாட்டன்பூட்டன் காணுச்செல்வம் பகருந்திருக்கோவில்
பார்க்கும்பாக்கியம் காங்கிரசாலே படைத்தோம் பாரென்ருர்

சனுதனப் புளிமூட்டை சவடால் தன்னில் பயந்திருந்தோர்
தாயிடம்மக்கள் செல்வதுசரியெனக் கண்டு ஓடிவந்தார்

ஆரெஸ்நாயுடு வைத்தினுதய்யர் ஆகியோர் முன்செல்ல
அரிஜனமெல்லாம் அன்னைகோவில் தன்னை வலம்வந்தார்

செம்பொற்கோபுரந்தன்னை வணங்கி சிரமேற் கைகூப்பி
ஜெயஜெயபாரத மாதாவுக்கே ஜெயஜெய வென்ருர்கள்

பொன்னடிபோற்றி மண்ணில்விழுந்து புளகாங்கிதமானுர்
புண்ணியமென்ன செய்தோமென்றே பூரித்துப் போனுர்

பொற்ருமரையில் முழுகி யெழுந்து நற்ருயருள் கொண்டார்
கற்ருரெல்லாம் காணுஅறிவை வற்ருவரம் பெற்ருர்

முற்ருமுலையா ளிளநகைமுறுவல் முல்லைப்பல்லழகி
பெற்ருளுலகைப் பெற்றுவளர்த்தும் பிரியா இளமையினுள்

நற்ருயாகிய மீனுள்பாதம் நாடிப்பணிந்தார்கள்
பெற்ருரின்பம் பெற்ருரின்பம் பெற்றவளைக்கண்டே

பரதம்பழகிய பாதம்சொக்கர் பங்கிலுற்ற பாதம்
பாண்டியன்மதுரை மண்மேல் நடந்து பழகிய பூம்பாதம்

சுரதந்தனிலே ஈசன் வருடிய சுந்தரப் பூம்பாதம்
தொன்னகராகிய மதுரைப்பதியில் துள்ளியாடும்பாதம்

துறவிகளெல்லாம் போற்றிவணங்கும் துல்லியபூம்பாதம்
துலங்குமெட்டி மதுரைப்பெண்கள் தொட்டு இட்டபாதம்

கண்டவர்பிணியை ஒடவிரட்டிக் கருணையருள்பாதம்
காஞ்சனமாலை கையால்தொட்டு காப்பிட்டபூம்பாதம்

தத்திமி தித்தகு என்று சிலம்பு தாளங் கொட்டிவர
தளாங்குததிங்கிண தோமெனவேயிரு தண்டை செண்டைபேச

வித்தகனேடு ஆடியபாதம் வெற்றிகொண்டபாதம்
வீரத்தமிழர் நாட்டுக்கரசி மீனுளின் பாதம்

நலங்குமஞ்சள் துலங்குபாதம் நன்மையருள்பாதம்
நாலுவேதமும் சாத்திரமாறும் நகமாகியபாதம்

கலங்கரைவிளக் காகியபாதம் கதியருளும் பாதம்
கயல்விழியாளின் பாதம்போற்றிக் கண்ணிலொற்றிக் கொண்டார்

பாதச்சுவடில் பச்சைசாத்தி பனிமலர் பெய்தார்கள்
வேதச்சுவடிகள் போற்றிவ்ணங்கும் மெல்லிய பதமலரே

பாதம்போலே பச்சை செழித்து பைம்பொற் க்திர்விட்டு
பட்டினிப்பேயை ஓடவிரட்டும் பாக்கியம் தாவென்றார்

நந்தன்சாம்பான் கதறிக்கதறி நாளைநாளையென்றே
நாதன் தரிசனம் தேடியலைந்தான் நந்திமறைத்ததுவாம்

வந்தான் சிதம்பர வாசல்தனிலும் வைதீகர்கூட்டம்
வழியைமறைத்து பிழை பல செய்தார் மனமும் நொந்திட்டான்

தீயில்விழுந்து தேகமெரித்துத் திருவடிசேர்ந்தானும்
தேசமெங்குமே கதைகதையாகச் செப்பிவரச் செய்தான்

அந்தநாள்முதல் அரிஜனமக்கள் ஆசைகொண்ட காட்சி
அதனைக்காணக் கோவில்திறந்தது காங்கிரசின் ஆட்சி

மதுரைமீனாள் கோவில்திறந்த மகத்துவம் கேட்டதுமே
மாயவன்வாழும் அழகம்பெருமாள் மலைக்கோவில் திறந்தார் 1750

தீண்டாமைக் கொடும்பேயை விரட்டிய தீரச்செய்கையிலே
தென்னாடே முதல்பேரும் பெற்றது சீர்திருத்தங்களிலே

அயிக்கிய மாகாணத்தில் காங்கிரசாட்சி நடக்கையிலே
அடிப்படையாகிய கிராமப்புனருத் தாரணஞ்செய்தார்கள்

பிள்ளை குட்டிகள் படிப்பைவளர்த்தார் பீஹார் நாட்டினிலே
பீரும் பிராந்தியுமோட்டி விட்டார்கள் பெரியதோர் பம்பாயில்

கட்டுப்பாடும் மரியாதைகளும் கவனித்துப் பார்த்தார்
காங்கிரஸ்பார்லி மெண்டரிபோர்டார் கவனித்துப் பார்த்தார்

தேசம்போகிற வேகத்தைப் பார்த்து சீமைப் பேப்பரெல்லாம்
திகைச்சுப்போயி காங்கிரசாட்சித் திறமை புகழ்ந்தாராம்

அரசியல்வாதிகள் சண்டைப்பிடிப்பா ராளத் தெரியாதென்
றரட்டையடிச்ச பேர்வழியெல்லாம் அதிசயம் இதுவென்றார்

ரெண்டரை வருசம் காங்கிரசாட்சியை ரெடியாய் நடத்தியபின்
சண்டை கிளம்பியதாலே மந்திரி சபையை விட்டார்கள்

## 1939 யுத்தம்: காங்கிரஸ் ராஜீனமா செய்தல்

ரெத்தக்கறையில் வெற்றியைக்காணும் சித்தம் படைத்தவர்கள்
புத்தம்புதிய யுத்தம் ஒன்றை புடிக்கத் துவக்கினராம்

இருபது வருசம் முன்புசெயித்து ரெக்கை வெட்டிவிட்ட
இராசாளிக் கொடி சர்மனிக்காரன் எழுந்தே நின்றானும்

சண்டையில் வெற்றி கிடையாதென்னும் தத்துவம் நிசமாச்சு
சமாதானமே உலகத்துக்கு இல்லாமல் போச்சு

சர்மனிக்காரன் போலந்து நாட்டை தீத்துக்கட்டப் போனுன்
சிந்தைகனிந்து பிரிட்டிஷ்காரன் சர்மனிமேல் பாய்ந்தான்

வெள்ளைக்காரன் தங்களுக்குள்ளே வீம்புச் சண்டையிட
வேத்து நிறத்துக் கல்லாக்காரனை விதியும் விடவில்லையாம்

இங்கிலீசுக்கு அடக்கமாகிய எல்லா நாடுகளும்
எதிரியாகிறார் சர்மனிக்கென்று இங்கிலாந்து சொல்லி

தாயாதிப் பகை சண்டைக்குள்ளே தான்மட்டுமின்றி
தன்னுடையாட்சி நடக்கும் நாடுகள் தனையும் சேர்த்தானும்

எங்கோ எவனோ சண்டைகள்போட எங்களை கேக்காமல்
இந்தியநாட்டை சண்டைக்குள்ளே இளுத்துவிட்டானையா

காங்கிரஸ் சபையும் கூட்டம்கூடி கருத்துடன் யோசித்தார்
கவர்மெண்டுக்குத் தாக்கல்எழுதி காரியம் கேட்டிட்டார்

சர்மனிக்காரன் பொல்லாப்பயல்தான் சங்கதி நாமறிவோம்
சனநாயகத்தைக் காப்பாத்திடவும் சம்மதமாக வுளோம்

ஆனாலும்நீர் யுத்தம்புரியும் அந்தரங்கமென்ன
அதனைக்கொஞ்சம் எடுத்துச்சொன்னால் அலசிப்பாத்திடுவோம்

சண்டைபிடிக்கும் காரணமெதுவும் தானேதெரியாமல்
தாயார்நாட்டை சண்டையிலிறங்கத் தானே சொல்லுவதோ

என்னத்துக்காக நாங்களுஞ்சேரணும் என்று நீங்க சொன்னால்
இந்தியநாட்டை கேட்டுப்போரில் இறங்கச் செய்திடுவோம்

யுத்தலட்சியம் இன்னது என்றே உரையுங்கள் என்றே
ஊரை ஆளுற காங்கிரஸ் சபையும் உறுதியுடன் கேட்க

லட்சியம் இன்னது என்பதைநாங்கள் லட்சியம் செய்யவில்லை
லட்சியமெல்லாம் ஜயிச்சதின் பின்னே லச்சர் பண்ணிடுவோம்

என்றே பிரிட்டிஷ் மந்திரிமாரும் எதவுகெட்டுப்பேச
இந்தா பிடியும் மந்திரிவேலை எடுத்துக்கொள்ளென்றார்

ஆறு மாகாண மந்திரிமாரும் அரை நாழிகைதனிலே
ஆட்சிப் பொறுப்பை விட்டு எறிந்தார் அரசை உதறிவிட்டார்

இந்திய நாட்டை யுத்தந்தனிலே எங்களை கேக்காமல்
இளுத்துவிட்டது குத்தம் என்றே ராஜிநாமா செய்தார்

என்னத்துக்காக சண்டை பிடிக்கிறோம் என்பதை அறியாமல்
இறங்கிப்போரும் புரிந்தால் பின்னால் இறந்தவர் வருவாரோ

சண்டைபிடிக்கக் காரணமின்றி மண்டை உடைத்திட்டால்
சண்டைதீரும் மண்டை வருமோ சாவு பிழைத்திடுமோ

நாடுபிடிக்க சண்டைபிடிச்சு நாசமாகிப் போனார்
பொண்டு பிடிக்க சண்டைபிடிச்சு பூமியை இழந்திட்டார்

சூதுசெயிக்க சண்டைபிடிச்சு தோத்தவர் ரொம்பப்பேர்
ஆதிமுதல்இச் சண்டையினாலே அழிந்தது பலகோடி

ஆட்டுச்சண்டை மாட்டுச்சண்டை அடுத்த நிலச்சண்டை
ஆளுஞ்சண்டை அரசுச்சண்டை அத்தனையும் ஒன்றே

யுத்தம்வந்தால் தேசத்துமக்கள் உழைத்துச் செத்திடுவார்
கத்திபிடிச்சவர் களத்தில்விழுந்து ரத்தப்பலி யாவார்

உண்ணச்சோறும் கறியும் இன்றி உலகம் தடுமாறும்
எண்ணற்றவர்கள் விதவைகளாவார் எல்லாம் தடுமாறும்

தேசத்தாரின் செயலும் சொல்லும் சிந்தனையும் மாறும்
சீச்சீகெட்ட யுத்தம் இதனைச் சீண்டுவரோ மக்கள்

ஆனதினாலே உங்கள் யுத்தத்தில் ஆழந்தெரியாமல்
ஆளும் பணமும் தந்தால் தேசம் அல்லல் படுமென்றே

அண்ணன் தம்பியுமாகிய வெள்ளையன் அடிச்சுக்கொள்ளுகிறான்
அதிலே கலந்து கருப்பன் போரிட யாருக்கென்ன லாபம்

இந்திய நாடும் போரிலிறங்கி இளைவைப்படத்தானே
என்ன பாவத்தைப் பண்ணினோமென்று எல்லோரும் கேட்டார்

கேட்டதுக்கெல்லாம் பதிலைச் சொல்ல பாட்டன் பாட்டிகளோ
நாட்டைப் புடுச்சி ஆளுறவன் நீ கேட்டால் சொல்வானோ

மந்திரியாட்சி குட்டு உடைந்தது மாகாணக் கவர்னர்
தந்தலையாட்டம் ஆரம்பமாச்சு தன்னுடையாட்சியென்றார்

இந்திய நாட்டை சண்டைக்குள்ளே இழுத்துப்போட்டார்கள்
எரிஞ்ச விளக்கையும் அவிச்சுப் போட்டார் எங்கும் கரி பூசி

பகல்ஒருசட்டம் இரவொருசட்டம் பலபல சட்டங்கள்
பாதுகாப்புக்கு சட்டம்பலது பட்டாக்கத்திகள் போல்

வீதிகளெல்லாம் விளக்குகளில்லை வீதியிலுமில்லை
வீட்டுக்கார இந்தியர் நெஞ்சிலும் வெளிச்சமில்லையில்லை

## 1941 யுத்த மறுப்பு சத்யாக்ரகம்

காங்கிரசும் சும்மாதானிருக்க
கவுர்னர்மாரும் ஆட்சிசெய்ய
காத்திருந்ததோர் காந்திமகான்
கடுங்கொலேச்சேதிகள் கேட்டுப்பிட்டு

யுத்தம்புரிந்திடும் நாடுகளில்
ரத்தம்சிந்தும் வகைகேட்டுப்பிட்டு
நித்தமும்ஆயிரம் செத்துவிழும்
நீசத்தனத்தையும் கேட்டுப்பிட்டு

ராஜப்பிரதிநிதி தன்னிடமே
ராவும்பகலும் நடைநடந்து
மாசற்றஅஹிம்சைக் கொள்கைதனே
மக்களிடத்தில் எடுத்துரைக்க

காங்கிரஸ்கொள்கை அஹிம்ஸையா
கத்தியும்ரத்தமும் கூடாது
கண்டபடியுத்தம் செய்வதனல்
கடுங்கொலேகள் விழுந்திடுதே

இந்தக்கொடுமைக்கு இந்தியனும்
ஏஞேஉடந்தை யாகவேணும்
சிந்தினரத்தத்தில் பங்கெடுக்க
சேர்ந்துஏஞே உழைக்கவேணும்

யுத்தத்தில்தேசம் இறங்கவில்லே
உதவிசெய்வது பாவமென்றே
சித்தத்தில்நினேக்கும் சேதியிதை
செப்பவேஉத்தாரந் தாருமென்ருர்

பெரியதத்துவமாம் இதனே
பேசவேஉத்தாரம் தாருமென்ருர்
அரியதத்துவந் தன்னேயிங்கே
அனேவர்அறிய வேணுமென்ருர்

வைசிராய்பிரபுவும் மறுத்துவிட்டார்
வாய்ப்பேச்சுப் பேசஇடந்தரலே
மனசால்நினேக்கும் சேதிதனே
வாயெடுத்தேபேச மார்க்கமில்லே

பேச்சுசுதந்திரம் இல்லையிங்கே
பேயும் வாழத்தரியாது
வாக்குசுதந்திரம் இல்லையென்றால்
வாழ்வதிலின்பம்கிடையாது 1800

என்றேகாந்தி எடுத்துரைத்தே
இறங்கிவிட்டார் மறுபோராட்டம்
அன்றேயுத்த மறுப்புக்குமே
ஆரம்பித்தது சத்தியப்போர்

காகிதந்தன்னிலே யுத்தமிதை
கண்டிக்கிறோமென்று தானெழுதி
கூட்டம் ஒண்ணும் போடாமல்
கொண்டுபோயதிகாரி கைக்கொடுத்து

நெஞ்சிலேதோணும் நினைப்புஇதை
நிலையும்நாட்டிட வேணுமென்றார்
அஞ்சிப்பிழைத்தவர் செத்தவரே
ஆயிரம்ஆண்டுயிர் வாழ்ந்தாலும்

சட்டசபையில் புகுந்தவர்கள்
தாரணியாண்டு இருந்தவர்கள்
மந்திரியாகப் பிறந்தவர்கள்
மாநிலமுள்ள தலைவரெல்லாம்

தனிப்பட்ட சத்தியப்போரிதிலே
தானீடுபட்டுச் சிறைப்புகுந்தார்
கனிக்குள் இனிப்பைக் கடவுள் எனக்
கருதும் வினோபாவும் சிறைப்புகுந்தார்

ராஜாஜீயும் செயில்புகுந்தார்
ராபிஅகமத் செயில்புகுந்தார்
விஸ்வநாததாஸ் சிறைப்புகுந்தார்
வீரர்பந்தும் சிறைப்புகுந்தார்

பி. ஜே. கேரும் சிறைப்புகுந்தார்
விஜயலக்ஷ்மி சிறைப்புகுந்தார்
பிரகாசமும் சிறைப்புகுந்தார்
பின்னுள்ளபேரும் சிறைப்புகுந்தார்

சொக்கலிங்கம் கல்கிராமரத்னம்
சுதந்திரந்தன்னை முழக்கியபேர்
அக்கரையாக எழுதியபேர்
அத்தனைபேரும் சிறைப்புகுந்தார்

ஏழுமாகாணத்து மந்திரிமார்
இருண்டசிறைக்குள் புகுந்தார்கள்
வாழப்பிறந்த மனிதரெல்லாம்
வன்கொலைச் சிறையில் புகுந்தார்கள்

ஏழெட்டுமாதம் சிறையினிலே
இருந்துவந்தார் பலபேரும்
அஞ்செட்டுமாதம் சிறையினிலே
ஐயன் சொல்லுக்காகத் தானிருந்தார்

தேசம் பொறுக்கவுமில்லையிதை
சிரமம்பொறுக்கல்லை மக்களுக்கே
நாசயுத்தத்துக் கொடுமைக்கெல்லாம்
நாட்டுமக்கள் பலியாகுறப்போ

இந்தப்படியேதான் நடந்தால்
என்னைக்குத்தானோ சுயராச்சியம்
என்றேகாந்தி யிடத்தினிலே
எல்லோருங் கூடியே வாதாட

காந்திமகானும் போராட்டம்
கடிசாச்செய்திட எண்ணமிட்டார்
சாந்தமுனிவரும் போராட்டம்
சல்தியில் செய்திட எண்ணமிட்டார்

## அமெரியின் ஆகஸ்டு அறிக்கை

எங்கள் தலையான காந்திமகான்
ஏழைக்கு நல்லவன் காந்திமகான்
இன்னொரு போராட்டம் என்றதுமே
இந்தியா மந்திரி சொன்னதென்ன ?

இல்லை இல்லையென்று சொல்லுவதில்
இணையில்லாதவன் ஏமரியும்
இந்து முஸ்லீம்உற வில்லையதால்
ஏதும் தருவதற் கில்லையென்றான்

குடியேத்த நாட்டாட்சி தந்தாலும்
குத்து வெட்டுப்பழி போட்டுக்கொள்வீர்
அடியோடு நாங்கள் தராதிருந்தால்
அடித்துக்கொள்ளாமல் வாழ்ந்திடுவீர்

என்றே இந்தியா மந்திரியும்
என்னென்னமோ சாக்குச்சொல்லிக்கிட்டு
கொன்றே குமிக்கும் யுத்தத்துக்கு
குண்டுகளை யிங்கே செய்துவந்தான்

ஒன்பது கோடி முசல்மானும்
ஒத்துமையா யில்லை இந்துவுடன்
என்பதை நன்ரு யெடுத்துச்சொல்லி
இருந்து ஆண்டான் ஏமரியும்

ஆகஸ்ட்டு மாதம் எட்டாந்தேதி
ஆனதோர் நாப்பத்தி யோராண்டில்
வாகற்ற இந்த அறிக்கையினால்
வகுத்திலடிச்சான் ஏமரியும்

ஏமரி விட்ட அறிக்கையெல்லாம்
இந்திய மக்களின் நெஞ்சத்திலே
எரி நெருப்பாய்ப் பத்திடுமாம்
எண்ணெய் திரியேது மில்லாமல்

## சப்பான் சண்டை பயம்

இந்த நிலைமையில் நாட்டுக்குள்ளே
எங்குமே நிம்மதி யில்லாமல்
வந்த கொடுமையை நீக்குதற்கே
வழிகள் தேடி யிருக்கையிலே

வங்கக் கடலுக்குள் நீர்மூழ்கி
வந்துவிளையாடு தென்று சொன்னார்
கங்கை நதிக்குள்ளும் நீர்மூழ்கி
காவேரி யாத்திலும் கண்டேனென்றார்

தெப்பக் குளத்திலும் நீர்மூழ்கி
செப்பான் கப்பல் கிடக்குதென்றார்
குப்பைக் குழிகளைத் தோண்டுறப்போ
குண்டு வெடிச்சது என்றார்கள்

ஒண்ணுக்குப் பத்தா யுரைத்துவிட்டு
ஊரைக் கலக்குற பேர்களெல்லாம்
கண்ணுக்கு முன்னாலே கண்டதுபோல்
கதை கதையாக அளந்தார்கள்

இந்தநிலையிலே தேசமெல்லாம்
எங்கும் கிலிபிடித் தாடையிலே
வந்தது புலியும் வந்ததென்ற
வாசகமும் நிசமாச்சுதையா

நாற்பத்தி ரண்டாம் வருசத்திலே
நல்லதோர் ஏப்பிரல் மாதத்திலே
நடுநிசி யானதோர் நேரத்திலே
நாழியிருபதுக் கப்புறத்தில்

சென்னையில் கப்பல் துறையருகே
செப்பான்காரனோர் குண்டெறிஞ்சான்
அன்னையின் நாட்டு மண்மேலே
அன்னியன் வந்தொரு குண்டெறிஞ்சான்

கோவில் குளமுள்ள தேசத்திலே
குள்ளப்பயல் ஒரு குண்டெறிஞ்சான்
பூவில் கருணைக்கு புத்தர்வந்து
புறந்தநாட்டிலே குண்டெறிஞ்சான்

பொம்மைகள் வித்துப் புளைக்கிறவன்
புண்ணிய பூமியில் குண்டெறிஞ்சான்
அம்மையின் மேனி வடுப்படவே
ஆசியாக்காரனே குண்டெறிஞ்சான்

இமிட்டேசன் சாமானைச் செஞ்சுவித்து
எங்கள் பணத்திலே சாப்பிட்டவன்
இந்தியத் தாய்நாட்டு மண்மேலே
இங்கிலீ சாட்சியால் குண்டெறிஞ்சான்

விட்டு எறிஞ்சிட்ட குண்டதுதான்
வெடிச்சாலுமே ஒண்ணும் சேதமில்லை
கெட்டதோர் சண்டைக்குப் போகவில்லை
கேடு விளையல்லை தேசத்திற்கே

குண்டுகள் வந்து விழுந்தஇடம்
குட்டையு மாச்சு குளமாச்சு
சண்டைப் பிடிக்காத நாட்டுமண்ணில்
சாமி யிருப்பது நிசமாச்சு

பூமிக்குச் சேதம் விளையவில்லை
பொன்பொரு ளேதும் அழியவில்லை
சாமியிருக்குது நம் பங்கிலே
சத்தியங் காக்குது தேசத்தையே

குண்டு விழுந்ததைக் கண்டதுமே
கூகூவென்றது ராசாங்கம்
பெண்டு புள்ளைகளைக் கூட்டிக்கிட்டே
பிடித்தாரோட்டம் வெள்ளையர்கள்

ஓடிப்போ ஓடிப்போ என்றுசொல்லி
ஊரைக்கலக்கியும் விட்டார்கள்
உசுரு புழைக்கவும் வேணுமென்றால்
ஊரைவிட் டோடுங்க ளென்றார்கள்

ஜப்பான்காரனிப் பாரதத்தை
செயித்திடுவா னென்று பயந்தார்கள்
அப்போ நம்முட யார்ப்பாட்டம்
அடங்கிப் போகுமே என்றுஎண்ணி

சப்பான் தன்னை ஜெயிச்சிடவே
சனத்தைத் திரட்ட வேண்டுமென்று
தாசாப்பண்ணவே கிரிப்சு என்னும்
தந்திரக்காரனைத் தூதுவிட்டார்

## கிரிப்சு திட்டம்

கிரிப்சு துரையும் வலுவாயன்
கிழக்கத்தி நாட்டை யறிந்தவனும்
திப்பிசம் ரொம்பவும் கத்தவனும்
தித்திக்கத் தித்திக்கப் பேசுவானும்

சண்டைகள் மூட்டி விடுவதிலே
சமத்தனானவன் கிரிப்சு துரை
சமதர்மம் பேசின ரஷ்யாவை
தண்ணிக்கிழுத்தவன் கிரிப்சு துரை

திப்பிசக்கிரிப்சு துரை மகனும்
தேதி குறிப்பிட்டு வந்துவிட்டான்
திட்டமொன்றுமின்றி வந்துநின்றான்
தேசச் சுதந்திரம் பேசவந்தான்

பத்தொன்பது நாள் டில்லியிலே
பலத்த டிகாணப் போட்டுக்கிட்டு
பலபல பேரையும் கூட்டிவச்சே
பாரதப் பேச்சுக்கள் பேசிவந்தான்

யுத்தகாலத்திலே சர்க்காரில்
ஊருக்குடையவர் சேருமென்ருன்
யோசனை பாசனை சொல்லுமென்ருன்
யுத்தம் செயித்திடவேணுமென்ருன்

இந்திய நாட்டைச் சுதந்திரமாய்
இருக்கச் செய்யவே வந்தமென்ருன்
இங்கிலீஷ் வைசிரா யிங்கிருப்பார்
இவருக் கடங்கவும் வேணுமென்ருன்

சீமைப் பிரிட்டிசு மன்னருக்கும்
தேசத்து மந்திரி மார்களுக்கும்
பூமியை ஆள்வதி லுள்ள முறை
போலவே நீங்களும் ஆண்டிடலாம்

இதுக்குச் சம்மத மில்லை யென்ருல்
இரண்டுபட்டுமே போயிடலாம்
எதுக்கும் என்னுட திட்டத்திலே
இருக்குது எடமென்ருனும்

யுத்தம்முடிந்து பொறுப் பாட்சி
உங்களுக்கே தரப்போகிருேம் நாம்
ஒத்துப்போயி மட்டும் கேக்கவேணும்
உஷார் உஷார் என்றுஞ் சொன்ஞன்

முன்னுக்குப் பின்னே முரணுக
முடிந்தமட்டும் குழப்பிவிட்டு
ஒண்ணுக்கும் அஞ்சிட வேண்டாம் நீர்
யுத்தம் முடிஞ்சதும் பாரு மென்ருன்

இன்றைக்கொரு சேதி சொல்லிடுவான்
இரவுக்குள்ளே யதை மாத்திடுவான்
அன்றைக்கு அன்றைக்குப் பேசுவதை
அழிச்சுப் பேசுவான் மற்றைய நாள்

காந்தி மகானே திட்ட மிதை
கவைக்குதவா தென்று சொன்ஞர்
காசுக்குதவாத திட்ட மிது
காயிதக்கேடு என்று சொன்ஞர்

பிளாங்கிச் செக்கு வங்கியிலே
பிரளாது பணமென்று சொன்ஞர்
பிளாஸ்திரி போட்டு ஒட்டியதால்
பித்தவெடி போகாதென்று சொன்ஞர்

கிரிப்சுதிட்டம் கிழிஞ்சுபோச்சுது கிழக்கத்திக் காத்தினிலே
திரும்பிப்போனார் கிரிப்சுதுரையும் தீமை செய்துவிட்டு

மாகாணங்கள் பிரிந்துபோக மார்க்கம் உண்டென்றே
வாயவல்தந்தான் லீகுக்காரர் மாரைத் தட்டிவிட்டான்

இந்தியநாட்டைத் துண்டம்போட இவனே விதைதூவி
இந்து முஸ்லீமின் பகையைவளர்க்க ஏதுசெய்துவிட்டு

போனானய்யா கிரிப்சுஎன்னும் புண்ணியவான் தூதன்
புடிச்சது நெருப்பு தேசம் எங்கும் புகையும்தெரிந்திடுதே

என்னவந்தாலும் திட்டம் இதனை ஏற்றுநடத்திடலாம்
என்றே சிலரும் காங்கிரசுக்குள் எடுத்துப்பேசலானார்

கொஞ்சங் கொஞ்சமாய் இடத்தைப்பிடித்துகொண்டு உட்கார்ந்திடலாம்
கொடுத்தமட்டுமே வாங்கிக்கொண்டு கூடக்கேட்டிடலாம்

என்றே சொல்லிக்கேட்டுக்கொண்டார் எங்கள் ராஜாஜி
இந்தப் பேச்சுக் காங்கிரஸுக்குள் ஏறவில்லை காதில்

இணையில்லாத சண்டைதுவக்க எண்ணியதே காங்கிரஸ்
இந்துமுஸ்லீமின் ஒத்துமைமுன்னால் என்றார் ராஜாஜி

அகிம்சைப்போரைத் துவக்கிட காங்கிரஸ் ஆரம்பம் செய்ய
அகிம்சைப்பெருமையை ஜனங்கள் சரியாய்அறியவில்லை என்றார்

திரும்பத்திரும்பச் சண்டைபிடித்துச் செயித்திடமாட்டோம் நாம்
செயித்துவிட்டாலும் தீராப்பகையில் தேசம் இரையாகும்

இந்துமுஸ்லீமும் ஒத்துமையாகி இந்தப் போர் செய்தால்
இன்னொரு சாக்குச் சொல்லி ஒதுக்க இடமும் கிடையாது

தன்னுட மக்கள் யாவருமொன்றாய் தலைநிமிர்ந்து விட்டால்
சத்தியப்போரில் வெத்திகிடைக்கும் சந்தோஷம்பெறலாம்

தனிச்சுப் போக விரும்புறபேரைத் தழுவிக் கட்டவேண்டாம்
தருவோம் பாகிஸ்தானம் என்றே சம்மதி கொடுத்திடுவோம்

என்றே சொன்னார் தேசம் முழுதும் எதிர்ப்பு பெரிசாச்சு
இந்திய நாட்டைத் துண்டம் போட எவருமொப்பவில்லை

தனித்துப் பிரிந்து விட்டாரையா தலைவர் ராஜாஜி
தமிழர் நாட்டின் சாபத்தேடோ சாமிக்குறைதானோ

சத்தியமான வழியிதுதானோ தவறிய பாதையிதோ
சரித்திரம் தானிதைச்சொல்லிட வேண்டும் சமத்தில்லைநான்சொல்ல

## 1942–ஆம் வருஷ காங்கிரஸ்

### மௌலானு அபுல்கலாம் ஆசாத் அவர்கள் தலைமை

கானுக்குள் மானென்று வேடன்—கொடுமைக்
கையிலே அகப்பட்டுக் கதறிட்டபோது
மானுக்குப் பிணையாக நின்ற—எங்கள்
மகமூது நபி போதம் மறவாத பெரியார்

சினவேங்கைப் புலிதன்னைக்கூட—மாந்தர்
செல்லுகின்ற வழியிலே நில்லாதேயென்று
மனமாற்றம் உபதேசம் செய்த—எங்கள்
மக்மூது நபி போதம் மறவாதபெரியார்

கல்லாலே அடித்திட்ட பேர்க்கும்—மிக்கக்
கருணையுடன் ஈமானைக் கற்பித்த நயினர்
சொல்லாலே விளைகின்ற மதமாம்—இஸ்லாம்
சொந்த மதமாய்க்கொண்டு வந்த மகராஜன்

வாள்கொண்டு தாக்க வரும்போதும்—கருணை
வள்ளலெமைக்காக்குமெனும் வாய்மையதுசொன்ன
தாள் பணியு மன்புமதம் தனிலே—தோன்றி
தானொருவனய் வந்த தாடாளன் ஆசாத் 1870

நபி நாவில் விளைவான வேதம்—தன்னை
நவிலாது ஒருநாளும் நடவாத ஆசாத்
அபிமான முடனிங்கு மக்கள்—அதனை
அறியவே பாஷியம் ஆக்கியோன் ஆசாத்

கருணைக்கு உருவான இஸ்லாம்—சமயக்
கடலுக்குள் முத்தாகக் கதிர்வீசுமா சாத்
தருணத்தில் உபகாரம் செய்வார்—உயிர்
தன்னையே வேண்டினும் தருவார் நம் ஆசாத்

இமாமுல் ஹிந்தென்று சொல்வார்—இவரை
இசுலாமின் போதகரென்றெல்லோரும் பணிவார்
நமாசு தொழுகின்றபோது—வந்து
நாயகத்தின் போதனையை நயமாயுரைப்பார்

மகமூது நபி யென்னும் அரிய—மகிமை
மாணிக் கந்தனையீன்ற மக்க மாநகரில்
மகமூது நபி போதம் மறவா—துள்ள
வங்கிசந்தன்னிலே வந்தவர் களா சாத்

மக்கத்தில் மழைபோல வந்தார்—கெய்ரோ
மன்றத்தில் மவுலீது குர்ஆன் பயின்றார்
திக்கற்றுத் திண்டாடும் நமது—துயரைத்
தீர்க்கவே வந்தவன் தீனீந்த செல்வம்

சிங்கத்தைப் போன்ற நடையுடையான்—சற்றும்
செம்மைக்கு மாறாத சீல நடையுடையான்
தங்கத்தைப் போன்ற நடவடியான்—தன்னைத்
தாக்கினார் தம்மையும் தழுவும் நடவடியான்

காவியமும் ஓவியமும் அறிவான்—தேவ
கானத்தை உயிராகக் கருதிடும் பெரியான்
பூவினி யல் செவ்வானம் காலை—வானப்
புள்ளினைய பொருளழகில் பூரித்துப் போவான்

பலதேசக்காவியங்கள் கற்பான்—பட்டம்
பதவியைக் கண்டாலோ எட்டிப்போய் நிற்பான்
பலதேசத் தோவியங்கள் காண்பான்—தன்னைப்
படத்திலே எழுதினால் பரிசல்லவென்பான்

கலைஞானி மவுலானா ஆசாத்—தேசக்
கஷ்டத்தைக் கண்டுள்ளம் கனிந்துருகும் ஆசாத்
நிலையாத உடலென்றுகண்டு—என்றும்
நீங்காத அன்புவழி நேசிக்கும் ஆசாத்

கருணை மழை பொழிகின்ற பேச்சு—நாவில்
கடவுளை எந்நாளும் மறவாத பேச்சு
தருணமறிந்தே பேசும் பேச்சு—சற்றும்
தானென்ற அகங்காரம் இல்லாத பேச்சு

ஆசாது பேச்சென்று சொன்னால்—தேசம்
அத்தனையும் சற்றேனும் அசையாமல் கேட்கும்
ஏசாது பேசுவார் பேச்சை—அந்த
எதிராளியானாலும் இதமாகச் சொல்வார்

தான்வந்த இசுலாம் மதத்தில்—உள்ள
தம்மவர்கள் உலகத்தில் தனிக்கூட்டமான
தவறுக்குப் பரிஹாரஞ் செய்தே—இந்த
தாரணியில் தீனெங்கும் தழைக்கவேயெண்ணி

முசல்மான்கள் கற்றறிஞராகி—உலகம்
முழுவதும் அன்பராய்க் காண்பதற்காக
அசலான்கள் காபிர்கள் என்று—உலகில்
யாரையும் குறை சொல்லலாகாது என்பார்

கிலாபத்துக் கூட்டத்தில் சேர்ந்தார் —இந்த
கெவுர்மெண்டுக் காரனையும் ஏசியேவிடவே
ஆபத்துவரு மிவராலென்றே—ஆசாதை
அடைச்சிட்டான் சிறையிலே புடிச்சிட்டான் பாணம்

நாலாண்டு ஜெயிலிலே போட்டு—இந்த
நாட்டார்கள் சிந்தையிலே ஆசாது தன்னை
மேலான தியாகியிவர் என்ற—உண்மை
விளங்கவே வைத்தார்கள் விளங்காத சர்க்கார்

அன்றுமுத லின்றுவரை காங்கிரஸ்—தன்னில்
ஆதாரமானவரில் ஆசாது மொன்றாய்
குன்றுமேலிட்ட சுடர்போலே—உண்மைக்
கோவிலாயுறைகிறார் குணவாளன் **ஆசாத்**

இவ் வருஷம் காங்கிரஸ் பீடம்—தனிலே
ஏறினா ராசாத்து இசுலாமின் பெரியார்
இந்துவும் முஸ்லீமும் தனியாள்—ஆனால்
எல்லோரும் சேர்ந்ததே காங்கிரசு என்றார்

திப்பிசக்காரதுரை கிரிப்சு—தந்த
திட்டமும் தோற்றுப்போய் தேசத்துமக்கள்
எப்பொழுதுமில்லாத கஷ்டம்—தன்னில்
இடுப்பொடிந்து போவதைக் கண்டார் நம் ஆசாத்

## யுத்தகாலத்தில் வெள்ளையராட்சி

வியாபாரம் செய்வதிலே சூரன்- சாமான்
வித்துமுதல் செய்யுவதில்மிகுந்த விஸ்தாரன்
பூபாரம்தாங்கி யிவனறியான்—சும்மா
புரளிபண்ணி ஆளுவதில் பூமிக்குப்பெரியான்

கட்ட இங்கே துணியில்லை யில்லை—காக்கி
கப்பலிலே போனதுக்குக் கணக்குவழக்கில்லை
சுட்ட பணியாரங்களில்லை—தின்னும்
தோசைக்கு உளுந்தில்லை துவரையும்இல்லை 1890

சோத்துக்குப் போடுதிங்கே தாளம்—அந்தத்
துரைமாரு வளவுகளில் குடியுங் கொம்மாளம்
நூத்துக்கு மேலோடிப்போச்சு—ரூபாய்
நோட்டுண்டு ஏழைவயிர் காத்தாடிப்போச்சு

தண்டவாளம் வண்டிவிட்டான்—இந்தச்
சண்டை வரவே ஏத்திக்கொண்டுபோயிட்டான்
வண்டவாளம் புரிஞ்சுபோச்சு—இவுங்க
வச்சதோர் ரயில்வண்டி யாருக்கென்ருச்சு

தந்திமரம் நட்டுவச்சமென்ருன்—சண்டையில்
தங்களுக்கு மட்டுமே தந்திபோனென்ருன்
விந்தைபல விந்தை செய்துவிட்டான்—நாட்டில்
வேத்தூருக்காரனது ஆட்சி முறைபாரும்

## பர்மா பாதை

பர்மாவில் செஞ்ச அநியாயம்—சொல்ல
பத்தாயிரம் நாக்குப் படைச்சிருக்க வேணும்
கர்மானு சாரவினை போலே—இந்தக்
கயவாளிப் பயகூட்டம் கருப்பனுக்குச்சாபம்

ஓட்டுக்குக் கூட்டிப் போனுப்போல்—சண்டை
யுத்தத்துக்கிந்தியரைக் கூட்டிக்கிட்டுப்போனுன்
வேட்டுச்சத்தம் கேட்டவுடனே—எங்கள்
வீட்டாரை விட்டுவிட்டு ஓடிவரலானுன்

ரெங்கூனில் குண்டு விழுந்ததுமே—செப்பான்
ரெக்கைகட்டி வந்திரங்கி ரெத்தத்தைச்சிந்த
அங்கேயிருந்த சனமெல்லாம்—நொந்து
ஆத்தாடி அம்மாவென்ரூேடி வரும்போது

வெள்ளையன் கொடுமைகளைப் பாரு—ஆளும்
வேத்தாளுக் காரனுட மகிமைகளைக்கேளு
கொள்ளையோ கொள்ளை யெனத்தானே—கும்பல்
கும்பலாச்சனம் பயந்து ஓடி வரும்போது

கப்பலுக்குச் சீட்டில்லை யென்ருன்—கீழக்
கருப்பனுக்கு இடமில்லை காசு தந்தாலும்
ஒப்பனைக்கு நாலு அஞ்சுபேரை—சீட்டில்
உக்காத்தி வச்சுட்டு உதவினே மென்ருன்

குண்டுக்குப் பயந்தோடி வாரான்—தங்கள்
குளந்தை முகம்பார்க்கவே விழுந்தோடிவாரான்
தண்டுக்குப் பயந்தோடி வாரான்—தங்கள்
தாயின் முகம் பார்க்கவே விழுந்தோடிவாரான்

பாதையிலே நின்ருனே வெள்ளை—உள்ள
பாதையை இரண்டாகப் பகிர்ந்தானே வெள்ளை
பாறைவழி இந்தியருக் கென்ருன்—தாங்கள்
பயந்தோட ரோட்டுவழி பார்த்தெடுத்துக் கொண்டான்

மோட்டாரை காடிகளை வச்சான்—தங்கள்
மூட்டை முடிச்சைப்போட்டு ஓட்டிக்கிட்டுப்போனுன்
நாட்டாரை இந்தியா சனத்தை—மட்டும்
நடுச்சந்திப் பாதையில் நடந்துவர விட்டான்

நடந்தாரே லட்சாதி லட்சம்—இந்த
நாட்டுமக்கள் காட்டுவழி மோட்டுமேலேறி
நடந்தாரே லட்சாதி லட்சம்—அதில்
நாலிலொரு பங்குதான் நாடுவந்து சேர்ந்தார்

நடந்த நடை சொல்லி முடியாது—நடந்து
நடுவழியில் செத்தவரைச் சொல்லி முடியாது
கிடந்தபிணம் கிடந்தபடி காய—அதைக்
கீழே போட்டமுதுவிட்டு நடந்தாரே மக்கள்

கஞ்சிக்குத் திண்டாடிச் செத்தார்—வயித்துக்
கடுப்புக்கு ஆளாகிக் காலோஞ்சு செத்தார்
அஞ்சிப் பயந்துசிலர் செத்தார்—காட்டு
ஆனைபுலி கண்டுட்டு அலறியே செத்தார்

மலைமேலே ஏறமுடியாமல்—சிலபேர்
வழுக்கிவிழுந்தே செத்து வானுலகம் போனுர்
தலைமேலே அரிசியைச் சுமந்தே—சொட்டுத்
தண்ணிக்கு வகையின்றி சமைக்காமல் செத்தார்

கால்வீங்கிச் செத்தார்கள் பலபேர்—நடந்த
களைப்பாலே மேல்மூச்சுக் கம்மியே செத்தார்
பால்வாங்கிப்போட்ட வழியின்றி—தங்கள்
பச்சைக் குழந்தையுடன் தாய்மாரும் செத்தார்

இருந்த வழிதன்னை யிரண்டாக்கி—அந்த
இங்கிலீஷ்காரனுக்கு நல்லவழி போட்டு
ஜமனுருக்கேகின்ற வழியை—எங்கள்
இந்தியா மக்களுக்கு ஈந்தானே வெள்ளை

## வெள்ளைக்காரா வெளியேபோ

கேட்டாரே காங்கிரசுக்காரர்—இந்த
நாட்டாரை இந்தவிதம் வாட்டுகிற சேதி

கேட்டாரே காந்திமகராஜன்—இந்தக்
கேடுகெட்ட அன்னியரின் கிருதக்கைக்கேட்டார்

காட்டிக் கொடுத்தானே நாட்டை—தீராக்
கஷ்டத்துக்காளாக்கி விட்டானே நாட்டை

மாட்டிக்கிட்டானென்று சொன்னால்—இந்தியா
மண்ணையும் இதுபோல மாட்டிவிடுவானே

உணவுபொருள் விலை கூடிப்போச்சே—இந்த
யுத்தத்தினால் மக்கள் வயிறு வாடிப்போச்சே

பாலுக்குப் புள்ளை கத்தலாச்சே—தேசப்
பசுவெல்லாம் சண்டைப் படைக்கென்று போச்சே

சண்டைக்கு நிதி தேடுஞ்சாக்கில்—நாட்டுச்
சனத்தைக் கசக்கியே பிழிந்தெடுக்கிறாரே

தண்டவரி போடாமல் போட்டு—உள்ள
தாசிலும் கர்ணமும் தண்டுகின்றாரே

உழவுக்கு உள்ள ஜனமெல்லாம்—கூட்டி
ஒண்ணுக்கு நாலாகச் சம்பளத்தைப் போட்டு

விழலுக்கு அழைத்துப் போனாரே—நாட்டில்
வெள்ளாமை விவசாயம் இல்லாமல் போமே

திண்டாடப்போகுதே தேசம்—நாட்டுத்
திரவியமெல்லாம் கொள்ளைபோகுதே மோசம்

உண்டான பொருளுக்கு நாசம்—இந்த
யுத்தத்தின் சாக்கிலே வந்ததே யுன்னால்

ஆளவே தெரியாத கூட்டம்—நெஞ்சில்
அணுவளவும் அன்பில்லா அதிகாரக்கூட்டம்

மீளவேமுடியாத கொடுமை—செஞ்ச
வெள்ளையா வெளியேபோ வென்றெடுத்துச்சொன்னார்

நாடாளத்தெரியாத மனிசா—இந்த
நாட்டைவிட்டுவெளியே போ போவென்று சொன்னார்

வீடாளத்தெரியாத மனுசா—உன்
மேல்பார்வை போதுமே வெளியே போவென்றார்

கஞ்சிக்குத் திண்டாடவிட்டாய்—கட்டும்
கந்தைக்கு வழியின்றி ஆண்டியாக்கிட்டாய்

வஞ்சித்துக்கேடு கெட்டுப்போனாய்—எங்கள்
வாழ்வைக்கெடுக்காதே வெளியேபோவென்றார்

கெடுவழியைக் காட்டிவிட்டபேர்கள்—ரொம்பக்
கேடு கெட்ட வஞ்சகம் செய்துவிட்டபேர்கள்

நடுவழியில் கைவிட்டபேர்கள்—இந்த
நாட்டுக்குள் நில்லாது நடவுங்கள் என்றார்

தன்னலமே உருவெடுத்த கூட்டம்—நாளும்
தவிச்சவன்முதல் வாரிவிழுங்குவதில் நாட்டம்

எந்நிலமும் இவனுக்குத்தோட்டம்—எட்டி
உதைப்பாரைக் கண்டாலே எடுப்பானே ஓட்டம்

காக்க வகையில்லாமல் போனான்—அமெரிக்காக்
காரனுக்கு எந்நாளும் கடங்காரனானான் 1930

பாக்க வகையில்லாது போனான்—வெள்ளைப்
பாவிகள் என்றதொரு பழிக்கு இடமானான்

தேசத்தைக்காப்பாத்துவானோ—இல்லை
திண்டாடவிட்டுவிட்டு ஓடிப்போவானோ

மாசற்ற இந்தியா மண்மேல்—இன்னும்
மற்றொருவன் வந்தாள வழிகோலுவானோ

என்றெல்லாம் தேசத்துமக்கள்—நெஞ்சில்
எண்ணமிடலானார்கள் புண்ணாச்சு நெஞ்சம்

ஒன்றுபோல் நாட்டார்கள் எல்லாம்—வெள்ளையன்
ஓடிப்போனால் போதும் ஊரைவிட்டென்றார்

அன்பான ஆசாது தலைமை—தன்னில்
ஆகஸ்ட்டு எட்டிலே நாற்பத்திரண்டில்

பம்பாயில் காங்கிரசு கூடி—தேசம்
படும்பாட்டைப் பார்த்துட்டு வழி செய்யநாடி

பூரண சுதந்திரம் தாரும்—இந்திய
புண்ணியபூமியை யெம்கையிலேதாரும்

காரணம் சொன்னதுகள் போரும்—இனியும்
கழிச்சுவிடக்கூடாது கையில்போடென்றார்

## ஆகஸ்ட்டு தீர்மானம்

வெள்ளைக்காரா வெளியேபோவென்னும் வீரவாசகத்தை
விருதாய்வைத்துப் போராட்டம்செய்ய வித்தரிச்சுப்போட்டார்

சுதந்திரதேசம்என்றே இதனைச்சொல்லி போட்டுவிட்டால்
சொத்துசுதந்திரம் சண்டைஜெயிக்க சூரரும்நாம் தருவோம்.

அடிமைநாட்டைச் சுதந்திரமாக்கி அதிகாரம்தந்தால்
ஆளும்பணமும் தந்தே யுத்தம் அடக்கிடுவோமென்றார்

இந்தப்பேச்சுக்கு இணங்காவிட்டால் எங்கள் ஐயன்காந்தி
இஷ்டப்படிக்கே சட்டமறுப்பில் இறங்கிடுவோம் நாங்கள்

என்றேசொல்லி ஆகஸ்டுமாசம் எட்டாந்தேதியிலே
இந்தியத்தாயாம் காங்கிரஸ்மகாசபை எடுத்துச்சொல்லிடவே

காந்திமகானும் வைசிராய்தன்னை கண்டுபேசிப்பார்ப்பேன்
காரியமொன்றும் பலிக்காட்டித்தான் கடும்போர்செய்திடுவேன்

வெள்ளைக்காரா வெளியேபோவென்று வீரப்போர்புரிவேன்
வெற்றியோசாவோ மற்றதுஎதுவும் மத்தியில்கிடையாது

என்றேசொல்லிச் சேனைத்தலைவர் இயம்பியிருக்கையிலே
இரவோடிரவாய் என்னசெஞ்சுது இந்தியராசாங்கம்

## ஆகஸ்ட்டு குழப்பம்

காரியக்கமிட்டிமெம்பரை நமது காந்திமகாத்மாவை
காவல்படுத்தி ரயிலிலேஏத்தி கடுஞ்சிறைபோட்டார்கள்

பலபலபலவெனப் பொழுதுவிடிஞ்சாப் பம்பாய்நகரத்திலே
பத்தியெறிஞ்சது இந்தச்சேதி பஞ்சிலே பிடிச்சாப்போல்

தந்தியடிச்சு ரயிலைநிறுத்தித் தலைவர்கள்சிலபேரை
சத்தியமூர்த்தி காமராஜுவைதள்ளியே சிறையிட்டார்

வீட்டிலிருந்தே தேசத்திற்கு வேலைபார்க்கும்பேரை
விரட்டிப்புடிச்சு ஜெயிலுக்குள்ளே வேகமாகப்போட்டார்

நாலேநாளில் சுயராஜ்ஜியத்தை நசுக்கிப்போடவெண்ணி
நாலாபக்கமும் போலீஸ்ராச்சியம் நடத்திப்போடலானார்

கேட்டது ஓயாதேசம் இதனைகெதிகலங்கிப்போச்சு
கெடுபிடிசெய்யும் கேட்டைப்பாத்து கெதிகலங்கிப்போச்சு

தேசத்தலைவர் சனங்களைப்பார்த்து சேதிசொல்லக்காணோம்
திட்டம்எதுவோ சட்டமறுப்பைச் செஞ்சிடவேஎன்றே

திகையும்முழியுமாசத் தவிக்குது தேசமக்கள்எல்லாம்
திடும்திடும் எனஅறிக்கைபிறந்தது சீமைதன்னிலிருந்தே

இல்லைஎன்றே சேதிகள்சொல்லி எதவுகெட்டஅமெரி
இருக்குதுஎன்றொரு சேதியைவிட்டான் சுருக்குனு தைச்சிடவே

காங்கிரஸ்காரன் சட்டமறுப்பில் கண்டசேதிஇதுதான்
கம்பிஅறுக்க ரயிலைக்கவிழ்க்க தண்டவாளம்பேர்க்க

வெள்ளைக்காரனை வெளியேபோவென வீறுகொண்டுதள்ள
விதவிதமாகத் திட்டமிருக்கென விதைச்சான்ஒருசேதி

சிந்தைகுழம்பிய தேசத்துமக்கள் சேதியிதைக்கேட்டு
செயம்செயம் எனப்போயிவிழுந்தார் தீயசெயல்செய்ய

அய்யய்யோ அதைச்சொல்லவுமென்றால் ஆகாதாகாது
அகிம்சைப்போரை நம்பியபேர் இதைஆதரிக்கலாமோ 1960

தந்தியைஅறுத்தார் கம்பியைஇழுத்தார் தண்டவாளம்பேத்தார்
தாணாட்டேசனைத் தரைமட்டமாக்கி தள்ளித்தீயும்வச்சார்

கொள்ளையடிச்சார் கூட்டங்கூடிக் கொலையும்செஞ்சார்கள்
கொம்பிலேபழுத்த சத்தியநெறியை குழியிலேபோட்டார்கள்

சத்தியம்பேசிய காந்திமகானை தலைவன்என்றுசொல்லி
சத்தியத்துக்கே எதிரிடையாக சங்கதிசெஞ்சுவிட்டார்

ஏமரிவிட்ட அறிக்கையினாலே இந்தியர் சொத்தெல்லாம்
எரியுதுஐயா எரியுதுஐயா எங்கள் நாடுதனிலே

இந்தவேளையில் எவனெவனோதான் இரகசியமாகவுமே
எழுதியும்விட்டார் எரியும்நெருப்பில் எண்ணைவிட்டுவிட்டார்

## ஆகஸ்ட்டு அடக்குமுறை

இத்தனைகாலம் இதையேஎண்ணி எதிரும்பார்த்திருந்த
இந்தியசர்க்கார் இரண்டுபங்கிலே இம்சைசெய்யவந்தார்

கூட்டத்துமேலே குண்டுகள் போட்டு கொடுமைகள் செய்தார்கள்
குச்சுக்குடிசையில் தீயைவைத்து கொளுத்தியும் போட்டார்கள்

துப்பாக்கியாலே சுட்டுத்தள்ளி துலைச்சுப்போடலானார்
துசமுங்கட்டி இந்திய நாட்டை துடைச்சுப்போடலானார்

எங்கு பார்த்தாலும் கூகூவெனவே இரையும் குரல்கேக்கும்
ஏழைகளெல்லாம் குய்யோமுறையோ என்றே அழுதிடுவார்

சுட்டுத்தள்ளிய சேதியை என்னால் சொல்லவும் முடியாது
துயரம் கொடுமை இதுபோல் எங்கும் தோணவும் முடியாது 1970

சாலியன் வாலாபாக்கிலே செய்த சரித்திரக்கொடுமையிலே
சந்தேகம் இல்லை என்றே உலகம் தான் நினைக்கலாச்சு

தேசம் முழுக்கத்தீயும் பிடிச்சுத்திகைச்சுத் தவிக்குதைய்யா
திக்குத்திசையும் புரியாமல் தான் திகைச்சு முழிக்குதைய்யா

திருவாடானைக்குப் பக்கத்திலே
தெற்குக் கடற்கரையோரத்திலே
திருவேகம்பத்து மாகாணம்
தென்னன் மறவரின் சீமையிலே

தீயைக்கொளுத்தியே போட்டார்கள்
சின்னஞ்சிறுசையும் கற்பழிச்சார்
பேயைப்போலவே ஆடிவிட்டார்
பெரும் பழி பாதகம் பண்ணிவிட்டார்

பெண்களின் மானத்தைத் தானழித்தார்
பிள்ளைகுடிக்கும் குடமறுத்தார்
கண் கொண்டு பாக்கச் சகியாத
காரியம் செய்து கறுவறுத்தார்

இந்தியன் மானத்தைக் காப்பாத்த
ஈனப்பட்டுள்ள பெண்டுகளே
எங்களின் ஆய்ச்சியே உங்களுக்கு
இரண்டுகையாலே கும்பிடுறோம்

சண்டைக்குச் சேர்த்த விமானத்திலே
குண்டுகள் போட்டான் இந்தியர்மேல்
தந்த பணங்களும் எங்களதே
தலையில் விழுந்ததும் எங்களுக்கே

அறுபது ஊரிலே பட்டாளம்
அக்கினிக் குண்டையும் விட்டெறிஞ்சான்
அறுநூறிடத்திலே போலீசை
அழைச்சுத் தோக்காலே சுட்டெரிச்சான்.

அறுபதி னாயிரம் இந்தியரை
அடைச்சுப் போட்டான் செயிலுக்குள்ளே
அருதப்பளசான சட்டத்திலே
ஆறு மூவாயிரம் தள்ளிவைச்சான்

தொள்ளா யிரத்து நாற்பதுபேர்
சுட்டுக் கொல்லப்பட்டுப் போனார்கள்
சொல்லால் சொல்ல முடியாது
தொப்பியைப் போட்டவன் சேதியெல்லாம் 1980

அந்தகன் நொண்டி முடமாகி
அனாதியாகவே ஆனவர்கள்
ஆயிரத் தெழுநூறு என்று சொல்லி
அறிக்கை விட்டான் ஆங்கிலேயன்

இங்கிலீஷ் காரன் கணக்கிதுதான்
ஈசன் கணக்கிலே எத்தனையோ
ஆங்கிலம் சொன்ன கணக்கிதுதான்
ஆண்டவன் கணக்கில் எத்தனையோ

ஆட்டையும் மாட்டை அழித்துவிட்டான்
அப்பனை புள்ளையைக் கொன்றுவிட்டான்
நாட்டையும் மானங் கெடுத்து விட்டான்
நல்லெண்ணந் தன்னை யழித்துவிட்டான்

நெல்லு வயலையும் கொள்ளி வைச்சான்
நேசமனையிலே கொள்ளிவைச்சான்
நல்லவர் நெஞ்சிலே கொள்ளி வைச்சான்
நம்பிக்கைதன்னிலும் கொள்ளிவைச்சான்

ஆண்டவன் சாமி யிருக்குதென்றால்
அக்கிரமந் தன்னைக்கேக்குதென்றால்
நீண்டபயல் செய்த கொடுமைக்கெல்லாம்
நிச்சயம் கூலி கொடுக்குமென்றார்

தலைவர்களை சிறையிலே தள்ளி நாட்டைப் படுத்தியபாடு

இந்திய தேசமோ இந்தப்படி
இக்கட்டில் பட்டுத்துடிக்கிறப்போ
வந்தவன் யுத்தம் நடத்துகின்ற
வக்கணை சொல்லுறேன் சொல்லுகிறேன்

காட்டை யழித்துக் கரியாக்கி
கருமருந்துக்கு ஏத்திவிட்டான்
மாட்டை யடித்துக் கறியாக்கி
மாமிசங் கப்பலில் ஏத்திவிட்டான்

வேட்டி துணிகளை யேத்திவிட்டான்
விளையும் பொருள்களை யேத்திவிட்டான்
நாட்டில் பிறந்துள்ள வாலிபரை
நாலஞ்சு கப்பலில் ஏத்திவிட்டான்

கொல்லுக் கொலையை பழக்கிவிட்டான்
குடியைப் புகையை பழக்கிவிட்டான்
மல்லுக்கு நிற்க பழக்கிவிட்டான்
மனிசனை மாடாக ஆக்கிவிட்டான்

எங்கும் புகைவண்டி ஓடுமடா
ஏற இடமும் இருக்காது
எங்கும்புகைவிடும் ஆலையெல்லாம்
ஏழைக்குக் கந்தை கிடைக்காது

பக்கம் குறைந்தது பேப்பரிலே
பாங்கியில்நோட்டுப் பலுகுதையா
வெக்கமும் மானமும் விட்டபலர்
வியாபாரக் கள்ளர்களானார்கள்

கண்ணியமில்லாத பேர்களெல்லாம்
காசு பணத்தைப் படைச்சார்கள்
புண்ணியபாவத்தைப் பார்த்தவர்கள்
பொக்கிகளாகித் திரிஞ்சார்கள்

நோட்டுப் புழக்கம் பெருத்தாலும்
நோட்டமுள்ள பொருள் கிட்டாது
பாட்டுக்கும் கூத்துக்கும் பஞ்சமில்லை
பசிக்குச் சோறு கிடைக்காது

நாட்டையழிச்சுக் கரியாக்கி
நாசகரஞ்செய்யும் நோக்கத்துடன்
நோட்டையடிச்சுப் பறக்கவிட்ட
நோக்கத்திலே நயங் கண்டுவிட்டான்

இந்த மகாராஜன் சீமையிலே
என்னத்தைச் சொன்னாலும் கேள்வியுண்டு
நொந்தவன் கொடுமை சொல்லவந்தால்
நோக்கத்துடன் கேக்க யாருமில்லை

உப்புப்புளிக்கும் கண்ட்ரோலுஉண்டு
உழக்குபடிக்குமே முத்திரியாம்
உடம்பையெடுத்த மனுசனுக்கும்
உயிருக்குமே ஒரு கேள்வியில்லை

### வங்காளப் பஞ்சம்

கங்கைநதியோடும் வங்கத்திலே
கஞ்சிக்குமே பஞ்சம் வந்ததையா
கல்லிலே நெல்லுக் கதிர்காணும்
காசினியில் பஞ்சம் வந்ததையா

மானம் பொழியாமல் போகவில்லை
வையம் விளையாமல் போகவில்லை
தானம் தவறிய தேசமென்றே
தர்மமும் காக்காமல் போகவில்லை

ஆனாலும் பஞ்சமுண் டாச்சுதையா
அன்னியனாட்சிக் கொடுமையிலே
போன உசிருக் கணக்கைச் சொன்னால்
பூமி பொறுக்காது கேட்டிடுவீர்

சீனம் சப்பானியர் சண்டையிலே
செத்து விழுந்ததில் மெத்தவிது
ஜெர்மனி பிரிட்டிசு சண்டையிலே
செத்ததைக் காட்டிலும் மெத்தவிது

எங்குமே இரத்தக் களரியிலே
ஏரோப்பிளேனிலே குண்டுமழை
அங்கு இறந்தவர் மொத்தத்திலே
அஞ்சாறு லக்ஷந்தான் உண்டுமையா

இந்திய நாட்டிலே பட்டினியால்
இறந்தவர் முப்பத்தி அஞ்சுலக்ஷம்
வந்தவனாட்சி தவறுதலால்
மாண்டவர் முப்பத்தி அஞ்சுலக்ஷம்

கள்ள மார்க்கெட்டு நடந்ததையா
காப்பிக்கிளப்பும் நடந்ததையா
வெள்ளையனாட்சி நடந்ததையா
விழுந்து செத்தது செத்ததையா

தண்டவாளத்திலே வண்டி விட்டான்
தாய்ச் சரக்கெல்லாமும் ஏத்தி விட்டான்
உண்டான நாட்டுப் பிரஜைகளையே
உணவுக்குத் திண்டாட விட்டுவிட்டான்

சேமித்து நெல்லைக் கொடுத்தவரை
செத்து மடிஞ்சிடச் செய்து விட்டான்
பூமி திருத்தி உழுதவரை
பூமிக்கு உரமாகச் செய்து விட்டான்

குண்டு தலையில் விழுந்தாலும்
கூண்டோடு கைலாசம் போயிருப்பார்
குஞ்சு குழந்தைகள் மாரெலும்புக்
கூடாகிச் சாவதைக் காண்பாரோ

சண்டையில் செத்து விழுந்தாலும்
தான் மட்டும் செத்து மடிஞ்சிருப்பார்
தாயும் மனைவியும் சோத்துக் கின்றி
தடுமாறிச் சாவதைக் காண்பாரோ

பெத்தவள் சோத்துக்குத் திண்டாட
பிள்ளை பசிச்சு முகம் வாட
உத்த மனைவியும் விட்டோட
உயிரை விட்டவர் எத்தனையோ

குப்பையில் எச்சில் இலைக்காக
குக்கலுடன் சண்டை யிட்டுச் செத்தார்
அப்பைக்கொடி போல் துவண்டார்கள்
ஆலிலை போல உதிர்ந்தார்கள்

காசைப் பணத்தை அனுப்பி வைத்தோம்
கல்லையும் தங்கம் அனுப்பி வைத்தோம்
வீசம் உழக்கு அரிசியையே
வேண்டி அவர் உயிர்விட்டார்கள்

அன்னக் கொடிகட்டி கோவிலெல்லாம்
அள்ளி அள்ளிச்சோத்தை வீசிவந்தோர்
சின்னத்தனமான யுத்தத்திலே
சேர்த்ததில் செத்து விழுந்தார்கள்

கொள்ளை நோய் இத்தனை நேராது
கொடும் பசிக்காரணம் நேராது
வெள்ளைக்காரா வெளியேறு என்ற
வித்தகன் சொல்லையே கேட்டிருந்தால்

சோத்துக்கும் பஞ்சம் வருகுமென்றே
சொல்லிச் சொல்லிவந்தார் காந்திமகான்
காத்துக்குச் சொன்ன கதைபோலே
காதிலே வாங்கலை வெள்ளையனும்

செத்தவர் செத்து மடிந்து விட்டார்
சிந்தையில் தீயும் கொளுத்திவிட்டார்
சீவன் இருந்துமே செத்தவராய்
திரியும் இந்தியர் நெஞ்சினிலே

கங்கை நதி யோடும் வங்கத்திலே
கண்ணீர் ஓடுது ஓடுதடா
மங்களக் காளியின் வாசலிலே
மாண்டவன் பேய் நின்று ஆடுதடா

வெள்ளையன்என்ற பெயர் கேட்டால்
பிள்ளையும் தூக்கத்தில் துள்ளுதடா
வெள்ளையனென்ற பெயர் கேட்டால்
வேதாந்தி கூடத் திடுக்கிடுருன்

வெள்ளையனென்ற பெயர் கேட்டால்
வீட்டுக் கதவும் அடைக்குதுடா
வெள்ளையனென்ற பெயர் கேட்டால்
வீதியில் பட்டி குலைக்குதுடா

வெள்ளையனென்ற பெயர் கேட்டால்
உள்ளந் துடித்து வெடிக்குதுடா
வெள்ளையனென்ற பெயர் கேட்டால்
வெட்டி எறிந்திடத்தோணும்படி

இந்திய மக்களுடன் பிறந்த
இரக்கந் தன்னையும் கொன்றுவிட்டான்
சிந்திய ரத்தத்திஞலே யெங்கள்
ஜீவதயையைக் கழுவிப் பிட்டான்

இத்தனை லெச்சங்கள் செத்தாலும்
இந்தியா யுத்தம் நடத்துதையா
நித்தமும் மீனும் கருவாடும்
நெல்லும் ஏத்துமதி யாகுதையா 2020

வங்கத்தில் கேரள நாட்டினிலே
வாடி உயிர் விடும் சேதிகேட்டு
சங்கடம் மெத்த அடைஞ்சுவிட்டார்
சாந்த மகாத்மா செயிலுக்குள்ளே

## பிரிட்டிஷார் காங்கிரசை மன்னிப்புக் கேட்கும்படி கூறல்

பிரிட்டிஷ் நாட்டுக்கு மந்திரியாம்
பிடிவாதகுண சர்ச்சில் துரை
பேயறைஞ்சாப போலே பேசிடுவான்
பேச்சும் செயலிலும் பேயேதான்

ஓரிக் கிழட்டுப் பயமகனே
ஓநாய் போலவே ஊளையிட்டான்
வாரிச் சுருட்டிக்கிட் டோடுவதோ
வளமுள்ள நாட்டையும் விட்டிடவோ

இந்திய நாட்டை விடமாட்டோம்
என்றைக்கும் நாங்கள் விடமாட்டோம்
இந்திய நாட்டை விடமாட்டோம்
என்று தினந்தினம் ஊளையிட்டான்

இந்திய நாட்டு நிழலறிவான்
இருந்து குளுமை கண்டவனும்
இந்திய நாட்டுப் பணமுந்தின்று
இனிப்பு ரொம்பவும் கண்டவனும்

நன்னி மறக்கிற சாதியிலே
நாயக மாகவே உள்ளவனும்
தண்ணி வெறிச்சியில் பேசிடுவான்
தடிச் சுருட்டுக் குடிக்கிறவன்

எரிமலைபோலவே சர்ச்சில்துரை
எப்போதுமே புகை கக்கிடுவான்
எரிமலை கிட்டத்து நாடழிக்கும்
எங்கே யிருந்தாலும் இவன் அழிப்பான்

இந்தத் துரைமகன் சொல்லிவிட்டான்
எரிநெருப்பிலே எண்ணெ விட்டான்
இந்தியனுக்குஞ் சுதந்திரமோ?
இல்லை இல்லை யென்று கிள்ளிவிட்டான்

மன்னவ ராட்சி நடைபெறுமிம்
மண்டலந் தன்னிலே ஓர் பிடிமண்
தன்னைக் கரைக்கவும் சம்மதியேன்
தாரணியை யாளுஞ் சாதியென்றான்

ஆளும் அரசன் புதைகுழியும்
ஆறடி நீளக் குழிதானும்
ஆண்ட அரசன் சவத்துக்குமேல்
ஆண்டி புதைக்கப் படுவானும்

பூமியை ஆண்டு பிணமாவான்
பூமி இவனை அரித்துவிடும்
சாமி படைப்பில் மனிசனுக்கே
சாச்வத மானது ஒன்று மில்லை

ஆறடி மண்ணுக் கிரையாகி
அழியப் போகும் நரமனிசன்
ஆசையைப் பாருங்கள் பூமியெல்லாம்
ஆளப்பறக்கும் திமிர் பாரும்

பாரதகாவியம் தன்னிடையே
பாம்புச் சகுனி புகுந்ததுபோல்
பாரததேசக் கதையிதிலே
பாவிகளும் இடம் பெற்றுவிட்டார்

## 1943 காந்தி உபவாசமும் காரணமும்

இந்தச் சர்ச்சிலும் ஏமரிதுரையும் என்னென்ன செய்தார்கள்
இந்தியசர்க்கார் செஞ்சது சரியென இரட்டைத்தாளு போட்டார்

இந்தியசனங்கள் செஞ்ச குழப்பம் ஏற்படக்காரணமாய்
இருந்த காங்கிரஸ் மன்னிப்புக்கேக்கணும் என்றுனே அமரி

சுதந்திரம் கேட்டுச் செயிலுக்குப்போயி துயரப்படும் நாட்டுச்
சுதந்திரவீரரை மன்னிப்புக்கேட்கச் சொன்னாரிருபேரும்

இருண்டு கிடந்ததோர் தேசத்தினிலே எழும்பிவந்த ஜோதி
இருபத்திஒருநாள் உபவாசந்தான் எடுத்துக்கொண்டுவிட்டார்

என்ன காரணம் என்ன காரணம் என்னகாரணமோ
இந்தியமக்கள் பலாத்காரத்தில் இறங்கின காரணமோ

அடக்குமுறைக்கி கண்டனப்சொல்ல ஐயன் எண்ணினதோ
அன்னைபூமியின் கவுரவம்காக்க அய்யன் எண்ணினதோ

தள்ளாவயதில் காந்திமகாத்மா சாதம் தண்ணியின்றி
தானே வாரம் மூணு இருக்கத் தாங்கிடுமோ தேகம்

என்றே தேசம் தவிச்சுத் துடிச்சு இருந்திடும் நாளையிலே
இருபத்தொருநாள் உபவாசத்தையும் எதிர்த்துநின்றார் காந்தி

இந்தியநாட்டில் எல்லாம் சரியாய் இருந்தேவந்தாலும்
இதயந்தானே குமுறிக்குமுறி எரிமலை போலாச்சு

வாயால்பேச வகையறியாமல் மவுனம் ஆனாலும்
மனதில் குத்திக்குடையுது ரொம்பவர்மம் தானாச்சு

ஒருதலைவலியோ சொரிசிரங்கோ அது ஒருநாள் காச்சலதோ
ஒத்தடம்மருந்து உள்ளுக்குக்கொடுத்து உடனே சரிபண்ண

ஓடம்போடொட்டின நோவாயாகி உளுத்துப்போச்சு நெஞ்சம்
உடைகிறநேரம் ஒருவரும் அறியார் உருமல் கேட்குதங்கே

காந்திமஹானைச் செயிலிலே போட்ட கபடமான கூட்டம்
கால் தலை தெரியாதாடும் சேதியை கண்ட காந்திராசன்

காயிதம் ஒண்ணு எழுதிப் போட்டார் கவர்ண்மெண்டாருக்கு
கைதிகள் செய்ய கலகமுண்டாக்க காரணமேதென்றார்

என்னைச் சிறையில் தள்ளிய காரணம் ஏது சொல்லவேணும்
இந்திய சுதந்திரம் கேட்டதுக்காக இந்தக் கொடுமைகளோ

காரியக்கமிட்டிக் கூட்டத்திலே நான் காரியமுறை சொன்னேன்
கவர்மெண்டாரைக் கேட்டுப்பார்க்கக் கருதுகிறேனென்றேன்

கண்டுபேசியும் பலனில்லையென்றால் கடும்போர் என்றேன் நான்
காணுமுன்னாலே பேசுமுன்னாலே கைது செய்துவிட்டீர் 2050

கம்படிப்பூசை குண்டுகள் போட்டுக் கலகம் பலசெய்தீர்
கலகஞ்செய்தே பதிலடிபட்டு காங்கிரஸாலென்றீர்

பலாத்காரத்தை ஆதரிக்காத பாதை யெந்தன் பாதை
பகட்டுக்கபடம் படைபலமில்லாப் பாதை யெந்தன்பாதை

இந்தப் பாதையில் நாங்களிறங்க இடமும் இல்லாமல்
எடுத்தீர் சனியன் தொடுத்தீர் யுத்தம் இந்திய ரெங்கள்மேல்

இந்தக்கொடுமைக்குக் காரணம் என்ன எடுத்துச்சொல்லவேணும்
இல்லாவிட்டால் இருப்பேன் பட்டினி இருபத்தொரு நாள்கள்

இந்தச்சேதிக்கு வைசிராய்தானும் எழுதிய பதிலென்ன
இந்திய நாட்டுத் தலைவர் காந்திக்கு எழுதிய பதிலென்ன

கம்பிகள் பேத்து ரயிலை நிறுத்திய கலகத்திற்கெல்லாம்
காந்திமகானே காரணமென்று காயிதம் போட்டானும்

இந்தக் காயிதம் வந்ததும் காந்தி எழுதிய பதிலென்ன
இதயங்கொதிச்சு காந்திமகாத்மா எழுதிப் போட்டதென்ன

குத்தம் சாட்டிச் சிறையிலடைக்கும் கொள்கைக்காகத்தான்
குத்தம்சொன்னீர் கொடுமைநாங்கள் கொஞ்சமும் செய்தறியோம்

கோரட்டுதன்னில் என்னை நிறுத்தி கூடிக்கேட்கவேணும்
குற்றவாளிதானென்றால் என்னைகொன்னாலும் சரியே

சாக்குச் சொல்லி எங்களைச் சிறையில் தள்ளிப் பூட்டிவிட்டு
தன்னிச்சையாக ஆள நினைக்கும் சங்கதிதானிதுவே

நாயம்நடுவு மிருந்திச்சானால் நாட்டையாளுவோரே
நாங்கள் செய்த குத்தம் சொல்லி நடத்தும் நாயத்தை

அரசாங்கந்தான் நாயந்தவறும் ஆண்டவன் தவறானே
ஆண்டவன் முன்னே நாயங்கேட்பேன் அவனறிவானெல்லாம்

குத்தவாளிகள் நாங்களுமல்ல குற்றவாளி நீங்கள்
கொடுமைக்காரர் நாங்களுமல்ல கொடியபாவி நீங்கள்

கலகஞ் செய்தது காங்கிரசல்ல கவர்மெண்டே செய்தார்
கடவுள்முன்னே சொல்லுகிறேன் இனி கை நனைக்கமாட்டேன்

உண்ணா விரதந்தானே இருந்து உண்மை காட்டுகிறேன்
உயிரும் மெய்யாயுள்ளவ னாண்டவன் ஒருவன் கேட்கட்டும்

குத்தம் செய்தவன் நானென்றாலோ கொண்டேபோயிடட்டும்
குத்தம் செய்யாதவன் நானென்றாலோ கூடநின்றுகாக்கும்

சாமியைத்தானே சாக்கிகள்வைத்து சாந்த மகாத்மாவும்
சாப்பாடன்னந் தண்ணியில்லாமல் தவங்கிடக்கலானார்

எழுபத்திநாலு பிராயமாச்சுது எங்களையன் காந்தி
இரத்தக் கொதிப்புக்கார ராச்சுதே எங்களையன் காந்தி
செயிலுக்குள்ளே தள்ளியடைச்சு சீரழிஞ்சதேகம்
சிந்தனையெல்லாம் நாட்டுத்துயரம் செல்லரித்த தேகம்

என்ன ஆகுமோ என்ன ஆகுமோ என்றது நாடெல்லாம்
சின்னத்தனத்தைச் செய்யும் வைசிராய் செவியிலேறவில்லை

தெய்வம் நம்மள் பங்கிலிருக்குது சீலன் காந்தியாலே
தெய்வம் நம்மள் பங்கிலிருக்குது தெய்வ காந்தியாலே

இருபத்தொருநாள் பட்டினி கிடந்தார் ஏதும் செய்யவில்லை
ஏழைபங்காளன் பிழைத்தார் காந்தி இந்திய நாட்டுக்கே

காந்தியின் பங்கில் நாயமிருப்பதைக் கடவுள் அறியானோ
கடவுள் காக்கும் என்பது பொய்யோ கருணை பொய்யாமோ

அமெரிக்காவும் சேதியைக்கேட்டு அலறித் துடிச்சிச்சு
ஆளும் பிரிட்டனை கேளுவிகேக்க ஆசைப்பட்டிச்சு

சீனாதேசம் சேதியைக்கேட்டு சிந்தை கலங்கிச்சு
சிங்களை வந்திடும் நமக்குத்தானென சிவனேனிருந்துச்சு

ருஷியாதேசம் அடிக்கடி இதனை ருசியாச்சொல்லிச்சு
ரொம்பப்பேசக்கூடாதெனவும் ரோசனை பண்ணிச்சு

எல்லா நாடும் அடக்கி ஆளவே எண்ணமுள்ளததனால்
இன்னொரு வம்புக்கேன் போகணுமென இதயத்தில் எண்ணிச்சு

## வேவல் வருகை

வந்தானையா வந்தானையா வைஸ்ராய் வேவல் துரை
வயிறும் மனமும் குளிரவைக்கவே வந்தான் வேவல் துரை

வங்காளத்திலே பஞ்சம் தீர்த்தான் வைசிராய் வேவல் துரை
வாடியநெஞ்சுக்கு ஆறுதல்சொன்னான் வைசிராய் வேவல் துரை

பட்டாளத்துக்கு குமிச்சுக்கிடந்த பண்டங்களை வாரி
பட்டினிகிடக்கும் மக்களுக்கெல்லாம் பகிர்ந்தேகுடுத்தானும்

நல்லவன்வந்தான் நாட்டுக்கினிமேல் நல்லகாலமென்றே
உள்ளவரெல்லாம் பூரித்தார்கள் உலகும்பேசிடவே

வேவல் துரையும் முதமுதலாக விட்டானொருசேதி
வெந்தபுண்ணிலே மிளகாய்த்தூள்போல் விழுந்தது அச்சேதி

காங்கிரஸ்காரர் நல்லவர் நல்லவர் கண்டேன் கண்டேன் நான்
காரியமெல்லாம் பொல்லாததுஎனக் கண்டும்கொண்டேன் நான்

சண்டை நடக்கும் போதினிலேயவர் சட்டமறுப்பென்றே
தவிக்கும் பிரிட்டிசுநாட்டை இவரும் தாக்குதல் செய்தார்கள்

சட்ட மறுப்புக்கொள்கை பிசகெனத் தானறிந்துகொண்டே
தவறுதல் தவறுதல்என்றே தேசத்தலைவர்கள் செப்பிவிட்டால்

விட்டிடுவோம் சிறைக்கூடம் விட்டுவிடுதலையாய் என்றே
விருந்துக்கூட்டத்தில் பேசிவிட்டானும் வேவல் வைசிராயும்

வைசிராய்புதிதாய் வந்திட்டாலும் வழக்கம் பழசென்றே
வாயைமூடி மவுனிகளாகி வாழ்ந்தாரிந்தியர்கள்

## ஆகாகான் அரண்மனையில் அன்னை, மகாதேவ தேசாய் பிரிவு

இருபத்திரண்டு மாசமாச்சுது ஏந்தல் சிறைக்குப்போய்
எலும்புந்தோலுமே மிஞ்சியிருக்குது என்னையன்தனக்கே

அன்னையும் அய்யனும் அன்பருமாக அன்றைக்குப் போனார்
அய்யன்மட்டுமே மிஞ்சியிருந்தார் ஆண்டவன் தயவாலே

தாயும்சேயும் மந்திரியாயும் தத்துவஞானியுமாய்
தானேயிருந்த கஸ்தூரிபாயும் தவறியேபோய்விட்டார்.

ஆண்டையுமடிமையாகப் பழகிய அன்பு மகாதேவ்பாய்
ஆண்டவன்பாதம் சேர்ந்தாரையா அரைகுறை மனதோடு

காந்திமகானே தெய்வம்என்று கருதிய தேசாயும்
காலனுக்கேயிறையானார் தேசம்கலங்கித் துடித்திடவே

கஸ்தூரிபாயே பெற்றவள்என்று கருதிய தேசாயும்
கண்ணைமூடினார் அன்னைபூமியின் மண்ணோடு மண்ணானார்

கணக்குவழக்கும் காரியம்பலதும் காணும் கண்ணாகி
கையாய்காந்தியின் மெய்யொடு பங்காய்கருதிய தேசாயும்

பலதேசத்தார் பாபுவைக்காணப் பதறியோடிவருவார்
பத்திரிகைக்குச் சேதிகள்கேட்கப் பகலிரவும்வருவார்

காணிக்கைகட்டிக் கையொப்பம்வாங்கக் கருதியபேர் வருவார்
காந்திமகானின் யோசனைகேட்க காசினியோர்வருவார்

தெரிசனம்செய்ய வருவார்பலபேர் திரண்டு ஓடிவருவார்
அரிஜனமக்கள் துயரம்சொல்ல ஆயிரம்பேர்வருவார்

இத்தனைபேரும் காந்திமகானை எறும்பாய் மொய்க்காமல்
இடமும்பொருளும் ஏவலுஞ்சொல்லும் இலட்சுமணன் தேசாய்

நீட்டியகையால் பிச்சையெடுத்து நிதிகள்சேர்த்தாலும்
நிமிசம்மாசம் தேதியும்போட்டுப் பதியனும்காந்திக்கே

அத்தனை பணமும்காசும் பவுனும் அளிப்பாரிவர்கையில்
அணுவுந்தவறா தெழுதிமுடித்து அயன் தொகை தருவாராம்

ஆசிரமத்தை பார்க்கவும்வேணும் அரிஜன்நடத்தோணும்
அன்னைசொல்லும் காரியம்செய்து அப்பனைப் பார்க்கோணும்

அரிஜன்பேப்பர் தன்னைநடத்திய ஆசிரியர் தேசாய்
அய்யன்பேசிய மணிமொழியெல்லாம் அள்ளித்தரும் தேசாய்

கரிசனமாக காந்தியின்உடலை காத்துவரும் தேசாய்
கண்ணுக்கிமைபோல் முன்னோடிவரும் கர்மவீரன் தேசாய்

தாரணிக்கெல்லாம் பெரியமகாத்மா தடுமாறும்போதில்
தன்னுடை யோசனைசொல்லும் தகுதி தான்படைத்த தேசாய்

ஈசன்திருவடி சேர்ந்தாரையா இந்தச் சிறைதனிலே
எழுபத்திரண்டு வயதுமகாத்மா இதயந் துடித்திடவே

மைந்தனிறந்ததுபோலவே காந்திமகாத்துமா அழுதார்
மகாதேவபாய்உடலைத் தன்னுடை மார்பினிலேபோட்டார்

தன்கையாலே கட்டையடுக்கித் தகனம்செய்தாராம்
தன் கையாலே பாலும்தெளித்துச் சடங்கும்செய்தாராம்

சமாதிகட்டித் தன்னுடையகையால் தளமும் பூசிவைத்து
சத்தியமந்திரம் ஓம் என்றெழுதி தரிசனம்செய்தாராம்

மகாதேவ பாயீசன் திருவடிமலரில் சேர்ந்தாலும்
மறதியிலின்றும் அய்யனடிக்கடி மகாதேவ என்பார்

நாளைக்கிருமுறையாகிலும் சொல்லி நடுங்கியே மூச்சுவிடும்
நம்பிக்கையான மகாதேவையும் நமனுக்கிறையாக்கி

உயிரும்உடலும் போல இருந்த உத்தமியாமன்னை
உலகுக்கெல்லாம் தாயாராகிய உத்தமியாமன்னை

நெஞ்சுநினைக்கும் நினைப்பும் காந்தியின் நிழலுமான மனைவி
நெறிமுறை வந்து யோசனைகேட்கும் நிகரில்லாத துணைவி

கஸ்தூரிபாயையும் விட்டுப்பிரிந்து கண்ணீருதிர்த்திட்டார்
காந்திக்கு மிந்தவயதிலே கஷ்ட-காலம்விடவில்லையாம்

பாரதமாதா பெத்துவளர்த்த பாக்கியமெங்கள் தாய்
பத்தினித்தெய்வம் இத்தரைசெய்த பாக்கியமெங்கள் தாய்

உத்தமத்தெய்வம் சுமங்கலியாகி உயிர்துறந்த தாய்க்கே
உள்ள இந்தியர் படைப்பு படைத்து உறவுகொள்ளவேணும்

காந்தியைக் கண்ணாலம் கட்டிக்கிட்டுக்
கண்ட சுகமுண்டோ தாயார்க்கு
சாந்தனைக்கண்ணாலம் கட்டிக்கிட்டு
சந்தோஷந்தானுண்டோ மாதாவுக்கு

எல்லோருக்குமே நல்லமகான்
எம்முடையன்னைக்கு நல்லவரோ ?
ஈவுமிரக்கமு மில்லாமல்
ஏவியகாரியம் எத்தனையோ

நாட்டினுடைய நவநிதியை
நாற்பது கோடிக்குத் தாயாரை
தோட்டிவேலைசெய்து கூட்டச்சொன்ன
தோதகமெங்கேயும் கண்டதுண்டோ

உப்பைவிட்டேனென்று அப்பன்சொன்னால்
உடனேவிட்டேனென்று அன்னைசொல்வார்
உணவு ருசிகெட்டுப் போனாலும்
உள்ளம் ருசித்திடும் அன்னைக்குத்தான்

வருஷம் அறுபது ஆனாலும்
வாயிலிருந்துபல் போனாலும்
புருசன் மனநிலை கோணாமல்
பொங்கி வடித்தவள் தாயல்லவோ 2120

கட்டும்புடவை கதர்ச்சாக்கு
கையிலேகாப்பு கருப்புவளை
பொட்டுகுங்கும மிட்டதல்லால்
பொன்னும் மணிகளும் போட்டதுண்டோ

கோயில்குளத்திலே ஆசையுண்டு
கொண்ட புருஷனுக்கொவ்வாது
வாயில்ஜபதபம் செய்துகொண்டே
வாழ்வுநடத்திய தாயல்லவோ

காசிக்குப்போகவும் ஆசையுண்டு
கங்கைகுளிக்கவும் ஆசையுண்டு
காசியும்கங்கையும் காந்தியென்றே
காலங்கழித்தவள் தாயல்லவோ

பிள்ளையும்குட்டியும் பெத்துமென்ன
பேரனும் பேத்தியிருந்துமென்ன
உள்ளமட்டும் இந்தக் கிழவனுக்கே
உழைத்துஉழைத்து இறந்தாள் தாய்

தன்பதிபாத கமலங்களை
தண்ணீரைவிட்டுத் தானலம்பி
தன் தலைமேலே தெளித்துக்கொள்ளும்
தர்மந்தவருத தாயெங்கள்தாய்

முந்தாணைதொட்டுக் கால்துடைத்து
முளரிக்கண்ணிலே ஒத்திக்கொண்டு
சந்தாபம்தீரக் கால்வருடி
சாப்பிட்டஎச்சிலைத்தானருந்தி

பதியேதெய்வம் எனப்பணிந்து
பாதமேகோவில் குளங்களென்று
விதியேஎமக்குப் புருஷனிடும்
வேலையே தெய்வத்தின் சேவையென்று

நாதன்சிறைக்குள் கிடந்தாலும்
நாட்டுக்குள்சுற்றி யலைந்தாலும்
ஈசன்உடம்பில் ஒருபாதி
இருக்கும் சக்தியைப் போலிருந்தார்

நீங்காநிழலும் கஸ்தூரி
நெஞ்சுநினைப்பும் கஸ்தூரி
பாங்காயிந்திய பெண்களுக்கே
பத்தினித் தெய்வமும்கஸ்தூரி

கஸ்தூரிபாயன்னை தன்னையுமே
காலம்பிரித்தது பாருமையா
பெத்தமகராசி தனையிழந்தே
பிரமிச்சுநிக்குது தேசமெல்லாம்

காந்திமகானும் தன்னுடைய
கண்ணின்மணியை இழந்தவராய்
சாந்திமகானும் தன்னுடம்பில்
சரிபாதியை இழந்தவராய்

முள்ளுக்கம்பி வேலிக்குள்ளாற
மூங்கில்படர்ந்த வனந்தன்னிலே
கள்ளுக்குடித்திடும் சிப்பாயின்
காவலுக்குள்ளே தான்கிடந்து

நெஞ்சம்கொதிச்சுக் கொதிச்சுநல்ல
நித்திரைகெட்டு உடம்புகெட்டு
வஞ்சம்புரிந்திடும் சர்க்காரின்
வர்மத்தையெண்ணித் துயரப்பட்டு

காந்தல்மிகுந்தஸ்தி காங்கையுமாய்
காயலாவாகிக் கிடந்தாராம்
ஏந்தலுயிருக்கு மோசமென்றே
எங்குமே சேதிபறந்திடவே

விட்டார்வெள்ளையர் வெளியினிலே
வித்தகன்காந்தியை விடுதலையாய்
தொட்டாலும் பழிஒட்டுமென
தொஞ்சுகிடந்த உடலோடு

காந்திமகான் சிறைவாசல்விட்டு
காயலாச்சீக்கும் குணமாகி
மாந்தர்துயர் தன்னைத்தீர்த்துவைக்க
மற்றுமோர்யோசனை செய்யலானார்

## 1944 காந்தி ஜின்னு பேச்சு

யுத்தம் தன்னை ஜெயித்துத் தருவோம் உதவிகளும் செய்வோம்
உடனே சுதந்திரந்தந்தாலும்முடன் ஒத்துழைப்போமென்றே

காவல் நீங்கிய காந்தி மகானும் கவர்மெண்டாருக்கே
காகிதமொன்று போட்டாரையா கவர்மெண்டாருக்கே

வைசிராய் வேவலும் இதனைப் பார்த்து மனசும் மாருமல்
வந்தே பேசவும் இணங்காமல்தான் வார்த்தை சொல்லிவிட்டான்

இந்துவும்முஸ்லீம் ஒத்துமையாகி இதைக் கேட்போமென்றே
ஏழை பங்காளன் ஜின்னு வீட்டுக்கு எழுந்தருளிப் போனுர் 2140

ஜின்னு சாயபு தன்னைக் காணத்திருமுகம் போட்டாராம்
தேசத்துக்காக அவரைப் பார்க்க திருமுகம் போட்டாராம்

காயிதே ஆஜம் ஜின்னு அவர்களே காந்தியின் வந்தனங்கள்
கடிதம் இதனை நாட்டுக்காக கண்திறந்து பாரும்

இந்தியநாட்டு முஸ்லீம்களுக்கு எதிரியென்றெண்ணுதீர்
எல்லோருக்கும் தொண்டு செய்யவே இந்த உடல் எடுத்தேன்

ஆனதனுலே நானும் நீங்களும் அமர்ந்து பேசவேணும்
அடிமை நாட்டை விடுதலை செய்ய அலசிப்பேசவேணும்

என்றே காந்தி யெழுதிய திருமுகம் இதைக் கண்டார் ஜின்னு
எவருக்காகப் பேசவந்தீர் என எதிர்த்துக் கேட்டிட்டார்

காங்கிரசுக்குப் பிரதிநிதியானுல் காயிதம் கொண்டாரும்
கமிட்டிமெம்பராய் பணமும்கட்டி கச்சாத்துக் கொண்டாரும்

இந்துக்களுக்குப் பிரதிநிதியானுல் எம்முடன் பேசிடுவீர்
இஸ்லாத்துக்கு பிரதிநிதி நீங்கள்யில்லை யென்று சொன்னுர்

ஒத்துழையாமை நடத்தியநாள் முதல் உலகுபோற்றும் தீரன்
ஒரு பேச்சுக்கே உலகம் பின்னுல் ஓடிவரும் தீரன்

சத்தியஞானி இந்தியநாட்டுச் சனங்களெல்லோருக்கும்
தானே தலைவன் ஆகிய தியாகி சாந்த மகாத்மாவும்

தனக்குத்தானே பேசுகிறேன் இதில் சமாதானம் வந்தால்
சனங்களை யெல்லாம் சொல்லித்திரட்டி சரி செய்வேனென்றுர் 2150

## ராஜாஜி திட்டம்

திட்டம் இதிலே கண்டதைக்கொஞ்சம் தெரியச்சொல்லிடுவோம்
தேசமகாசபை விஷயம் இதனைத் தெரியச்சொல்லிடுவோம்

முஸ்லீம் லீக்கும் காங்கிரசுடனே முன் வந்தேநின்று
மோசமாகிய வெள்ளையராட்சியை ஓட்டிவிரட்டோணும்

இந்தியர் கையில் ஆட்சி கொடுக்க இயலாதுஎன்றே
இங்கிலீஷ்காரன் சொல்லும் காரணம் இது ஒன்றே உண்டு

இந்தியநாட்டில் இந்துவும் முஸ்லீம் இரண்டு பெருஞ்சாதி
இவருக்குள்ளே ஒத்துமையில்லை எதுவும் செய்திடவே

ஆளும் அரசியல் நிர்ணயம் செய்து அமைத்துக்கொண்ட பின்னே
ஆட்சியைத்தருவோமென்றே யவனும் அடிக்கடி சொல்லுகிறான்

நிசமோ பொய்யோ இதனை நாமள் நிச்சயம் செய்திடவே
நீங்களும் நானும் சேர்ந்து கேட்பதே நேர்வழியதனாலே

அரசியல் நிர்ணயசபையை வகுக்க ஆரம்பம் செய்வோம்
அதனிடையினிலே ஆட்சி நடத்த அமைப்போம் சர்க்காரும்

இடைக்காலத்து மந்திரிசபையில் காங்கிரசும் லீக்கும்
இருந்தேஆட்சி தன்னைநடத்த இணங்கிவரவேணும்

சண்டைமுடியவும் தாய்நாடிதனை தரச்சொல்லிக் கேட்போம்
சம்மதிதாரும் ஜின்னாசாயபே சலாம் சலாம் என்றார்

இதற்கு ஜின்னா சாயபு தானும் எதிர்த்துக் கேட்டிட்டார்
இங்கே வாழும் முஸ்லீம் மக்கள் எங்கள் மதப்பேர்கள்

வங்காளத்தில் பாஞ்சாலத்தில் வடமேற்கெல்லையிலே
வாழும் இஸ்லாம் தனிராஜ்ஜியமாய் வகுத்துக் கொள்ளவேணும்

இந்துமதத்தா ருடனேநாங்கள் இணங்கவும்முடியாது
எங்களைத்தனி ராச்சியமாய்யாக்கி இருக்கச் செய்யுமென்றார்

இதற்கே அய்யன் காந்திமகானும் என்ன சொன்னாரென்றால்
இதயந்துடிக்க சேதி இதனை எடுத்துச் சொல்லலானார்

ஒருவர் நீங்கள் சொன்னால் இதனை உலகம் ஒப்பிடுமோ
உள்ளவர் கூடிச்சொல்லவும் வேண்டும் யோசனை செய்துந்தான்

சண்டைதீரவும் இதனைப்பேசி சமரசமாயிடுவோம்
தனித்தேபோக சம்மதமோவென சனத்தைக் கேட்டிடுவோம்

அந்தத் தலத்து மக்களைக்கூட்டி ஆண்பெண் எல்லோரும்
அவரவர் சம்மதிபோலே ஓட்டு அளிக்கக்கேட்டிடுவோம்

தனிச்சுப்போக விரும்புறபேரைத் தழுவிக்கட்டமாட்டோம்
தனிச்சுப்போவதில் நன்மையும்தீமையும் தானே சொல்லிடுவோம்

இரண்டு கட்சியும் எடுத்துச்சொல்லி இந்த ஓட்டுக்கேட்போம்
இதற்கு மக்கள் பாகிஸ்தானம் இருக்கவேண்டுமென்றால்

எல்லை பிரித்து நாடுபிரித்து ஜில்லா பிரித்திடுவோம்
இந்தியநாடு பாகிஸ்தானம் இரண்டு பிரித்திடுவோம்

இந்தியநாட்டுப் பாதுகாப்புக்கும் தந்திதபாலுக்கும்
இங்கேயுள்ள வியாபாரத்துக்கும் இரண்டு நாடும்கூடி

ஏற்பாடுகளும் செய்திடுவோமென இருவருமொப்பந்தம்
இன்றே செய்துகொண்டிடுவோமென ஏந்தல் காந்தி சொன்னார்

ஈரொன்பதுநாள் நடையாய் நடந்து எங்களையன் சொல்ல
ஏறியிறங்கி நடையாய் நடந்து எங்களைய்யன் சொல்ல

ஜின்னாவீட்டைத் தேடிச்சென்று சீலன் காந்திசொல்ல
சீறிவிழுந்தார் ஜின்னாசாயபு சிந்தை நோகச்செய்தார்

இப்பொழுதே நாம் இரண்டு பிரிந்தால் எதுவும் கேட்டிடலாம்
இந்துக்கள்வேறே முஸ்லீம் வேறே எங்கள் கட்சியென்றார்

இந்தியாவெனும் இந்தப்பூமியில் இந்துதேசம் ஒன்று
இன்னொருதேசம் முஸ்லீம்தேசம் என்றாராம் ஜின்னா

இந்திய நாட்டில் இரண்டுதேசமாம் இந்துவும் முஸ்லீமும்
இருவரும் அண்ணன்தம்பிகளில்லை என்றே சொல்லிடவே

ராஜாஜியும் இதனைக்கண்டு ரொம்பச்சிந்தை நொந்தார்
தேசமகாசபை காங்கிரஸ்தன்னில் திரும்பச் சேர்ந்திட்டார்

என்னசெய்தாலும் ஜின்னாசாயபு இணங்கி வராததையே
எண்ணியமனமும் புண்ணாகியது இந்தநாட்டு விதியோ

## 1945 சிம்லா மகாநாடு

காந்தி ஜின்னாவின் பேச்சையெல்லாம்
கவனித்து வந்தார் வேவல்துரை
கட்சிக்கலப்பற்ற சாப்ருவின்
கமிட்டிப்பேச்சையும் கேட்டுவந்தார்

சாப்ருகமிட்டி தன்னில் உள்ளோர்
சட்டமும் திட்டம் படித்தவர்கள்
தாயாமிந்திய நாட்டு மண்மேல்
தார்மீக சிந்தனையுள்ளவர்கள்

பாகிஸ்தானம் கொடுத்துவிட்டால்
பாரதநாட்டிலே வம்புவரும்
பாக்கிஸ்தலத்துக்கும் அதனுக்குமே
பகையும் ரத்தப்பழியும் வரும்

இந்தியாதன்னையோர் யூனியனாய்
இதற்குள் சமஸ்தானம் சேர்த்துவிட்டு
இந்தியநாட்டி லிரண்டாக
இல்லாமல் செய்யவேணுமென்றார்

எல்லாச் சேதியும் கேட்ட வைசிராய்
இயன்ற சமயத்தைப் பார்த்த வைசிராய்
இந்தியநாட்டு விடுதலைக்கே
இரக்கம் கொண்டுள்ள வேவல் வைசிராய்

சர்மனிக்காரன் சரணடைந்து
தன்னரசாட்சி தவிடாகி
ஜப்பான்தேசம் சரணடைந்து
தன்னரசாட்சி விழுந்ததையும்

எங்குமே இந்தியச்சிப்பாயின்
இணையில்லா வீரத்தைப் பேசுவதும்
தங்களின் நாட்டு நிலையையெண்ணி
தலைகுனிந்தே அவர் வாழுவதும்

போராட்டத்திலே பங்கெடுத்து
போடுபோடென்று உழைத்தவர்கள்
மாராட்டத்திலே ஆங்கிலேய
மக்களுக்கு அடிமையென்று எண்ணி

தங்களின் நாட்டு சுதந்திரப்போர்
தன்னை யெதிர்பார்த்து நிக்கிறதும்
எங்குமே இந்தியச் சிப்பாய்கள்
எழும்பிச்சீறி வருவதையும்

கம்மாண்டர் சீப்பாயிருந்து
கண்ணாலே கண்ட வேவல் வைசிராய்
தம்மாட்சியிலே இந்தியரை
தன்னிச்சையோடு இருக்கச்செய்ய

கங்கணம் கட்டியதுரைமகனும்
கண்ணென்று கொண்டெதும் பார்க்கிறவன்
வங்கணம் பேசும் தலைவரெல்லாம்
வாருங்கள் பேசுங்கள் என்றுரைத்தான்

இந்தியர் தங்கள் அரசியலாய்
இருந்து நடத்திவாருங்கள் நீர்
இந்துவும் முஸ்லீம் சரிசமமாய்
ஏற்றிடுவீர் மெம்பருத்யோகம் 2190

சண்டைக்கமிட்டியில் மெம்பர்களாய்
தானும் கமாண்டருமிங்கிருப்போம்
சகலதேசத்துச் சங்கதியும்
தருகிரும் உம்மிடமென்று சொல்லீ

இருண்ட சிறைக்கூடம் தன்னிலுள்ள
எல்லோரையும்சிறை நீக்கிவிட்டான்
சுருண்ட செடியும் தலைதூக்கச்
சொட்டுத்தண்ணீரைத் தெளித்துவிட்டான்

சிந்தைகொதிக்கும் தலைவரெல்லாம்
சிம்லாவில் வந்து கூடுமென்ருன்
இந்தியநாடு சுகம்பெறவே
இயன்ற வழிகளைத்தேடுமென்ருன்

மாகாணமந்திரி மார்களுக்கும்
மவுலானு ஆசாது தலைவருக்கும்
மற்றுள்ள சீக்கியர் தாழ்த்தப்பட்டோர்
மகமதியர் லீக்குத்தலைவருக்கும்

மகாநாட்டு நடவடிக்கை

இருபத்தொரு பேருக்கழைப்பு விட்டார்
இந்துமகாசபை கூப்பிடல்லை
எங்கள் மகாத்துமா காந்தியுமே
இந்தக் கூட்டந்தனில் கலக்கவில்லை

சிம்லா தன்னில் தலைவரெல்லாம்
சீக்கிரம் சீக்கிரம் போய்ச்சேர்ந்தார்
ஜின்னு சாயபும் வந்திருந்தார்
சீமான் வேவல் அழைத்ததனுல்

மகாத்மா காந்தியும் தம்முடைய
மதியூக யோசனை சொல்லுதற்கே
வந்து இருந்தார் தேசத்துக்கும்
வைசிராய் தனக்கும் போதகராய்

கூடிக்கூடிப் பேசிப்பார்த்தார்கள்
குறுக்கேநின்ருர் ஜின்னுவும்
வாடிக்கைபோலவே இம்முறையும்
வந்த அரசைத் தடுத்துவிட்டார்

முன்னின்று ஆட்சி நடத்திடவே
முனைந்த பேர்களைக்கேட்டிடவே
முஸ்லீம் மெம்பரின் பேர்கள் எல்லாம்
முஸ்லீம் லீகிடம் விடணுமென்றார்

இந்தியநாட்டு முசல்மானில்
இருப்பது பாதியே லீகுதன்னில்
எங்கள் தலைவர்கள் ஆசாத்போல்
எத்தனையோ பேர்கள் காங்கிரசில்

எல்லா முஸ்லீம் மந்திரியும்
எடுத்திடணும் முஸ்லீம் லீக்குக்குள்ளே
என்றே சொன்னார் ஜின்னாவும்
இந்த முட்டுக்கட்டை போட்டுவிட்டார்

மகாநாடு முறிவு

முஸ்லீம் லீக்கின் தலைவர் ஆகிய முகம்மதலி ஜின்னா
முறைத்துப்பேசினார் ஜாப்தாதரவும் முடியாதென்றிட்டார்

மந்திரி சபையில் சேரத்தான் அவர் மறுத்த காரணத்தை
மன்னவன் ஜின்னா சொன்னபடிக்கே மாற்றாதுரைக்கின்றேன்

மந்திரிசபையில் சீக்கியர் கிறிஸ்து மதத்தாருக்கொன்று
சிந்தையழிந்த ஹரிஜனமொன்று சேர்த்துக்கொண்டிடுவீர்

இந்த மாதிரிபோனதுபோக இருக்கும் பேர்வழியில்
இஸ்லாம் பாதி காங்கிரஸ்பாதி என்றே தந்திடுவீர்

அரிஜனம் சீக்கியர் இருவரும் காங்கிரஸ் ஆளாய் சேர்ந்திடுவார்
அதற்குப் பின்னே முஸ்லீம்லீக்கால் ஆளவே முடியாது

ஆனதனாலே மந்திரி சபையை அமைக்கவும் விடமாட்டேன்
ஆளும் தாருகேன் என்றே சொல்லி அழிவழக் காடினராம்

நாற்பத்தி அஞ்சரைக்கோடிப்பேரில் நாலத்தொண்ணாகி
நாட்டிலே இருக்கும் இஸ்லாமியரில் நாலிலே ரெண்டுக்கே

தலைவராகிய ஜின்னா சாயபு தண்டாவைப்பாரும்
தாயாமிந்திய நாட்டை லீக்குத் தானே ஆளணுமாம்

கங்கா நதியும் காவிரியாறும் கட்டியாளவேணும்
காசியும் ராமேசுரமும் லீக்குக் கட்டியாளவேணும்

முப்பத்திமூணுகோடி இந்துவும் முஸல்மான் பலபேரும்
முஸ்லீம் லீக்கின் ஆக்கினைக்குள்ளே முழங்கால் மண்டியிட

வேண்டும் என்றே கேட்டாரையா விளையாட்டுக்கில்லை
விவரமாகவே எண்ணிப்பாரும் விளையாட்டுக்கில்லை

வேவல்துரையும் நாயமுறை
விதிப்படி செய்திடடுப்போகாமல்
காவல் செய்யப் பயந்துக்கிட்டுக்
கலைத்துவிட்டார் கூட்டமிதை

காங்கிரஸ்காரரும் ஒத்துவந்தார்
கட்சிகள் மற்றதும் ஒத்துவந்தார்
ஆங்கிலேயர்கூட ஒத்துவந்தார்
ஆகாதென்றது லீக்குஒன்றே

முஸ்லீம் லீக்கை உதறிவிட்டு
முன்னேறிச் செல்லமாட்டாமல்
வைசிராய் வேவல் நடந்ததினால்
வஞ்சனைக்காரனென் றாகிவிட்டார்

## சீமையில் அரசியல் மாறுதல்

### முதலாளி வர்க்கத்திடமிருந்து தொழில் கட்சி அரசியல் ஆகுதல்

இந்தப்படிக்குள்ள நாளையிலே
இங்கிலீஷ்காரன் சீமையிலே
வந்தது தேர்தல் வந்ததையா
மண்ணில் விழுந்தான் சர்ச்சில்துரை

வேட்டைக்கு நாயையனுப்பி வைத்தால்
வீட்டுக்குள்ளும் அதைச்சேர்ப்பாரோ
கோட்டைக்குக் காவலிருந்துவிட்டால்
கொடுப்பாரோ கையில் செங்கோலை

வள்ளுவள்ளென்றே யுரைத்துவந்த
வாய்மதச் சர்ச்சில் விழுந்துவிட்டான்
இல்லை இல்லையென்று சொல்லிவந்த
ஏமரி தோற்று விழுந்துவிட்டான்

தாங்கள் பிழைக்கவே ஆண்டுவந்த
சர்ச்சில் முதலாளி வர்க்கமதை
தன்னையடியோடு தோற்கடித்து
தலைநிமிர்ந்தார் தொழிலாளி

ஏழைகள் ஆட்சி நடத்தவந்தார்
எலும்பொடிபட்டவர் ஜெயித்துவந்தார்
வாழையடி வாழையாக இந்த
வையத்தைக் காப்பவர் ஆளவந்தார்

சர்க்கார் அமைத்துக்கொண்டுவிட்டார்
சர்ச்சிலைத் தூக்கியெறிந்துவிட்டார்
அக்கரையோடிந்த இந்தியரை
ஆட்லி கவனிக்க ஆரம்பித்தார்

பூமியிலே யுள்ள தேசமெல்லாம்
பொன்னும் சுதந்தரத்தோடிருக்க
நாமிவர் நாட்டையரசாண்டால்
நகைத்திடுமேயிந்த உலகமென்றே

உள்ளதைவைத்துக் கொண்டாண்டிடுவோம்
உலகச்சுமை இதுஏதுக்கென்றே
கள்ளத்தனமுள்ள எண்ணம் கொண்டோ
காரியம் ஏதேனும் எண்ணிக்கொண்டோ

இந்தியமக்கள் துணிந்துவிட்டார்
இனி நம்மையாளவிடமாட்டார்
என்பதோர் உண்மையறிந்துகொண்டோ
இந்திய விடுதலை தருவோமென்றார்

## ஜெய் ஹிந்த்

### இந்திய தேசீய ராணுவம்

ஜெயஜெய ஹிந்துஸ்தான்
ஜெயஜெய ஹிந்துஸ்தான்
செங்கோட்டைக்குச் செல்வோம் வாரீர்
ஜெயஜெய ஹிந்துஸ்தான்

தேசத் தலைவர் நேதாஜியின்
திருவடி போற்றிடுவோம்
சிங்கம் அவரின்பேரைக்குழந்தைகள்
செவியில் சாற்றிடுவோம்

நேத்திரமாகிய நேதாஜியின்
சூத்திர தாரிகளாம்
தில்லான் சேகால் ஷாநவாசெனும்
சிங்கம் மூவரையும்

இன்னுமாயிரம் போரையுமந்த
இங்கிலீஷ் அரசாட்சி
எதிரிகள் என்றேபிடித்து வைத்தார்கள்
இந்தக் கோட்டையிலே

ஜெய்ஹிந்த் என்றே சீறியெழுந்தார்
சிங்கம் ஜவஹர்லால்
தேசத்தாரின் மானங்காக்கத்
தீரப் போரிட்டார்

இந்தத்தலைவர்கள் குற்றம்ஏது
என்னவென்று கேட்டார்
இந்தியநாட்டைக் காக்கத்துணிந்தது
என்ன குற்றமென்றார்

"சிங்கப்பூருக்குக் கூட்டிப்போனீர்
செல்வர்க ளிந்தியரை
ஜெப்பான்காரன் கையில்கொடுத்து
திரும்பிவந்து விட்டீர்

இந்தியநாட்டுச் சிப்பாயிவரை
இளப்பம்செய்து விட்டீர்
இங்கிலீஷ்காரன் மட்டும்ஊருக்
கோடி வந்துவிட்டீர்

எங்கள் நாட்டுச் சிப்பாய்மக்கள்
எல்லோரும்கூடி
இந்தியதேச ராணுவமென்று
ஏற்படுத்திக் கொண்டார்

மோகன்சிங்கு தலைமையிலிந்த
மும்மணிகள் கூடி
மோசம்செய்த ஆங்கிலேயரை
முறிக்கவேணு மென்றார்

சப்பான்காரன் தன்னைவணங்கச்
சம்மத மில்லாமல்
தனிச்சிறைகளிலும் பாதுகாப்பிலும்
தட்டுக் கெட்டுநின்றார்

அந்தவேளையில் வந்தேநின்றார்
அழகிய நேதாஜீ
ஆறுமுகத்துச் சாமியைப்போல
அழகிய நேதாஜீ

இந்திய நாட்டில் ஆளும் போலீஸ்
ஏமாந்தேபோச்சு
எங்கள் சிங்கம் நேதாஜீயே
பெரியவ ரென்றாச்சு

## நேதாஜீ சுபாஷ்சந்திர போஸ்

மாதாவாகிய இந்தியநாட்டின் மகிமை நேதாஜீ
மணிமுடிதாங்கி ஆளும்திறமை வாய்ந்தவர் நேதாஜீ

வங்காளத்துக் காங்கிரசதனில் வந்தவீரன் இவரே
வாளேந்திப்போர் புரியநினைத்த வல்லவனும் இவரே

சட்டமறுப்பில் சிறையிலடைத்து சங்கடப்படும் நாளில்
தணியாக்காச்சல் நோவைத்தீர்க்கும் சாக்குவைத்துக்கொண்டே

சர்க்கார் இவரைக் கப்பலிலேத்தி தள்ளியும் விட்டார்கள்
தனிச்சிறைபோலே வியன்னாபோனால் தணியும்சீக்கென்றே

தேசந்தனையே மாற்றிவிட்டதனால் சிந்தனைமாறிடுமோ
தீரன்எந்த நாட்டுக்குப்போயும் தேசத்தைமறப்பானோ

ஸ்விட்ஜர் லாந்தில் இருந்தபடிக்கே சுபாஷ் சந்திரபோசும்
சுற்றிவளைத்தார் தேசம்பலதை சொந்தநாட்டைகாக்க

சட்டமறுப்புத் தோற்றது என்றேதானறிக்கைவிட்டார்
சாந்தமகாத்மா காந்தியின் வழியில் சந்தேகப்பட்டார்

இட்டாலிநாட்டு முஸலோனிதனை இங்கு பேட்டிகண்டார்
என்னபேச்சுதான் பேசினார்களோ எவருக்கும்தெரியாது

சொந்தநாட்டுக்கு வந்துசேர்ந்திடத் துடியாய் துடித்திட்டார்
சுதந்திரம் பெற்றேவிடுவது என்று துடியாய்துடித்திட்டார்

தாய்நாட்டுக்குத் திரும்பியும் வரவே தவியாய் தவித்தாலும்
தரமாட்டேன் பாஸ் என்றேசொல்லி தடுத்ததுராசாங்கம்

மாதாநாட்டின் மண்ணைமிதிக்க வஞ்சனை செய்கின்றார்
வந்துசேருவேன் இவர்கள் பாசை மதியாமல்நானும்

என்றே சொல்லி இட்டலி நாட்டுக் கட்டுமரந்தனிலே
ஏறியும்வந்தார் பம்பாய்க்கரையில் இறங்கும் நேரத்திலே

### போஸ் கைதியாதல்

பதுங்கியிருந்து புடித்துஅடைத்தது பம்பாய் போலீசு
பாரதநாட்டுத் தலைவன் சுபாஷை பம்பாய் போலீசு

தேசத்தலைவர் காந்திமகானும் சேதியிதைப்பார்த்து
சீக்கிரம் விடுதலை செய்திடுமென்று சிந்தைநொந்து சொன்னார்

போஸைவிடுதலை செய்யாவிட்டால் போராட்டம் செய்வோம்
புத்தியுடன் நீர் நடந்திடுமென்றே வித்தகனுரைத்திடவே

வாலிபராகிய இந்தியரெல்லாம் வங்கச் சிங்கமிதை
வாயாலுடலால் மனதால்கணமும் வணங்கித் தொழுதார்கள்

தொழிலாளிகளோ தேசமுழுதும் துதித்திடுவார் போசை
சோர்ந்தவர்யாவரும் சுபாஷ்போசை சொந்தமெனக்கொள்வார்

அந்தவீரனைச் சிறையில்தள்ளி அடைத்துப்போட்டதுமே
ஆத்திரங்கொண்டு தேசம் எழுந்தது அய்யனுமெழுந்திட்டார்

வங்காளத்துச்சிங்கம் இவர்மேல் வர்மம் ஏனென்றார்
வாள்முறையாலே யுத்தம் நடத்தவந்தாரென சர்க்கார்

சொல்லிச்சொல்லிச் சிறையில்வைத்து துயரப்படுத்திடவே
தூயமகாத்மாகாந்தியும் தன்னுடதோள்மேல் போட்டிட்டு

வைசிராய்தன்னைக் கண்டுபேசினார் வாரம்இருவாரம்
மாநிலமெங்கும் கிளர்ச்சிநடத்த மக்களைத் தூண்டிடவே

போசைவிடுதலை செய்துவிட்டார்கள் பொறகே ஆள்வைத்தார்
போமிடமெல்லாம் ரகசியப்போலீஸ் போட்டுப்பார்த்தார்கள்

## காங்கிரஸ் தலைவர் ஆதல்

முப்பத்தேழாம்வருஷக் காங்கிரஸ் தலைமைப்பீடத்தில்
முன்னேற்றத்தின் சின்னம்போசை முதன்மையாக்கி வைத்தார் 2260

காங்கிரஸ்காரர் சர்க்கார் நடத்திக்காரியம் செய்திடும்நாள்
கண்டிப்புக்கார போஸின் தலைமைக்காவல் நடத்திச்சாம்

யுத்தம்வருகுது யுத்தம்வருகுது உலகம் முழுவதுமே
உகந்தசமயம் இதனில் நாமும் சுதந்திரப் போர்புரிவோம்

ஆங்கிலநாட்டார் முழிகள் பிதுங்கிடும் அந்தச்சமயத்திலே
ஆரம்பித்தால் சுதந்திரமதனை அடைந்திடுவோம் என்று

இயம்பி இயம்பிப் போசும் தேசம் இதனைத் தயார்செய்ய
இன்னொருவருஷம் தலைமைப்பதவியில் இருக்கவேணும் என்றார்

அன்புவழியிலே காங்கிரஸ்தன்னை அமைத்துப்போரிட்டோம்
அதனில்வெற்றியும் கண்டோமெனவே அய்யனை நம்பியபேர்

போசின்வழியால் புரட்சியுண்டாகும் பொதுஜனங்கள் சாகும்
புதிதாய்பாதை தவறாய்காங்கிரஸ் போனாலும்போகும்

என்றேசொல்லி போசை எதிர்த்தார் இரண்டாச்சு காங்கிரஸ்
இந்தியதேசக்கதையில் இப்படி எத்தனை காரியமோ

திரிபுரிநகரில் காங்கிரஸ் தன்னில் தீர சுபாஷ்போசை
திரும்பவும்தலைமைப் பதவிவகிக்க செய்யவிடாமல்தான்

பட்டாபிதனைத் தேர்தலுக்காக விட்டார் போட்டியிட
பாட்டாளிகளும் இளைஞரும் ஓட்டுப்போட்டார் போசுக்கே

காந்திமகானும் தம்முடை கொள்கைக்காகவேபட்டாபி
தன்னைநிறுத்தித் தோற்றாரென்பது தன்னுடதோல்வி என்றார் 2270

நூத்திநாலரை டிகிரிக்காய்ச்சல் நோக்காட்டுக்காரர்
பாத்தாரே அதைக் காங்கிரஸ் கூட்டப்பந்தல் நடுவினிலே

டோலியிலேத்தித் தூக்கிவந்தார்கள் சொரணைமாறாமல்
சுபாஷ்சந்திரபோசும் தலைமைதுவக்கினாராம் கூட்டம்

காங்கிரஸ்காரர் யாவருமொன்றாய் காரியக்கமிட்டியிலே
காந்திமகானின் கொள்கைக்கிணங்கிய காரியவாதிகளே

கமிட்டியிலிருக்க வேண்டும் என்றே கருதிப்பேசிடவே
கைப்பொம்மையாகி தலைமை வகிக்கக் கசந்தது போசுக்கும்

தன்னுடையிஷ்டப்படியே தீவிரத்தலைவர் தனைக்கொண்ட
சங்கம் அமைத்துக்கொண்டே தேசச்சங்கதி செய்திடவே

காரியக்காரர் கமிட்டியிலேதன் கட்சிஆள்களில்லாக்
காரணத்தாலே தூயவர்போசும் காங்கிரசைவிட்டார்

வழவழாவெனுங் கொள்கையிதனால் வருமோசுயராஜ்யம்
வாளேந்தி அதைப் பெறலாமென்றே மனதில் நினைத்தவராய்

நாடெங்கிலுமே சுற்றியலைந்து நாடும்கட்சி சொல்லி
நாட்டில்உள்ள இளைஞரைதம்முடன் கூட்டிக்கொண்டிட்டார்

சென்னையில் நம்முடசீமான்போசின் தீவிரக்கட்சியிலே
சேரநினைத்தார் நாட்டில் பலபேர் சேர்ந்தும்விட்டார்கள்

காங்கிரஸ்பார்வட் கட்சியின் நாமகரணமும் செய்திட்டார்
காங்கிரசுக்குள் தீவிரவாதிகள் கலந்த கட்சியிதுவே 2280

சென்னையில் வந்து சிங்கம் பிரசங்கம் செய்திடும் வேளையிலே
செர்மனியுத்தம் தொடங்கியதென்னும் சேதியும்வந்திடவே

சொன்னதுநடக்குதுபாரும் என்றே துடியாய்த் துடித்திட்டார்
சொந்தராச்சியம் வந்திருக்கும் நான்சொன்னது கேட்டிருந்தால்

என்றேசொல்லிப்போசும் எதையோ இழந்தவரைப்போலே
இதயத்தினிலே இருக்கும் சேதியும் எடுத்துச் சொல்லாமல்

கல்கத்தாவிற்கேகிவிட்டாரே காரியம் செய்திடவே
கனவேகமதாய் ஓடிச்சென்றார் கல்கத்தாநோக்கி

கல்கத்தாவில் வந்துஇறங்கவே காத்திருந்த போலீஸ்
கல்லுச்சிலையைக்காரணஞ் சொல்லி கடுஞ்சிறை வைத்தார்கள்

நாற்பதாம்வருஷம் ஜுலைமாதம் நாலில் பாதியிலே
நம்முடைபோசை அறையிலடைத்தார் நாளுங்கணக்கில்லை

கோர்ட்டுதன்னில் கூட்டிப்போயி குத்தம் சாட்டாமல்
கூடியிருந்துஞாயம் கேட்டுத் தண்டனை சொல்லாமல்

விசாரணை செய்யும்வேலையில்லாமல் விதித்தார் தண்டனைகள்
வீரன்போசும் அஞ்சாமாசம் வேறொருவழி செய்தார்

உண்ணாவிரதம் புடிப்பேனென்று உரைத்திட்டார் போசும் 2290
உலகம்எங்கும் திடுக்கிட்டேதான் ஊருக்கூர்பேச

ஏழுநாளும் உண்ணாவிரதம் இருந்திட்டார்போசு
இளைத்ததுஉடம்பு வெளுத்ததுதேகம் இனியிருந்தால் மோசம்

என்று இயம்பியே சர்க்கார்இவரை விடுதலை செய்திடவே
என்ன செய்தாருபோசும் விட்டிற்கேகினராம் விரைவாய்

## நேதாஜி பெருமை

வெற்றிக்குவழி காணவேண்டி
வீரன்சுபாஷ்சந்திரன் விரைந்தானே வீட்டில்
சுற்றிக்கொண்டே நிற்கும்போலீஸ்
தொந்திரவை நீக்கவோர் துணைவழியும் கண்டான்

ஏகாந்தமினிமையென்று சொன்னான்
எனையெவரும் பார்க்கவே ஏலாது என்றான்
யோகாந்த முனிவர்களைப்போலே — வீட்டில்
உட்கார்ந்துநிட்டை செய்ய உன்னினேனென்றான்

சாத்தினார் கதவுகளையெல்லாம்
தருப்பாசனம் புலித்தோல் தான்போட்டுக்கொண்டார்
ஏத்தினார் தீபங்கள் போட்டார் — மனதில்
என்றைக்குமுள்ளதொரு சிவநாமஞ்சொன்னார்

மாதாவின் திருநாமம்மறவா செம்மை
மனதுள்ளவேதாந்தி நேதாஜி யென்பார்
வேதாவும் வியப்படையும் வண்ணம் — சொன்ன
விவேகஞானி வழி விளைந்தவர் போசு

கூடினார் நிஷ்டையென்றார்கள் — தம்மைக்
கும்பிட்ட பேர்களுக்கு குஞ்சிரிப்புச் செய்தார்
நாடினார் நிஷ்டை யென்றார்கள் — தம்மை
நமஸ்காரம் செய்தவரை நடுக்கண்ணால் பார்த்தார்

தொந்தரவு செயல்வேண்டாமென்று போசு
சொல்லவே வீட்டார்கள் தூர நிற்கலானார்
இந்த ஒரு நாட்டிலேமட்டும் — இன்னும்
இருக்குதே சிவநிட்டையென்று வியந்தார்கள்

யாருமவர்பக்கம் வரமாட்டார் — போசு
ஆனந்தமோனநிலை அடைந்தார்கள் என்றார்
ஊருமவர் உறவாருமிவரை — இந்த
உலகத்தை வெறுத்தவரென்றுரைத்து வரலானார்

கட்டைக்கு விடுதலையுமின்றி — நெஞ்சக்
கருத்துக்கு விடுதலை காண்பாருமுண்டோ
மொட்டைத்தலை போட்டுவிட்டால் — உள்ள
மோகாந்தகாரமென்னும் முடிச்சவிழ்ந்துபோமோ

அரும்பானதாடியும் வளர்த்தார் — தமது
அழகானமேனியெங்கும் பூதியைத்தரித்தார்
விரும்பாது ஆகாரமென்றார் — தமது
வீட்டாரைப்பக்கம் வரவேண்டாமென்றிட்டார் 2300

சாப்பாடு போடவரும் பையன் — சன்னை
சாடையாய் வெளியிலே சாதத்தை வைப்பான்
கூப்பாடுபோடாமல் செல்வான் — மறுநாள்
கொண்டுவந்தபாத்திரம் தானெடுத்துக்கொள்வான்

அவனுமே கண்டதில்லை போசை — வீட்டில்
யாருமே கண்டதில்லை அய்யன் சுபாஷை
எவனுமேகாணாது சிலநாள் — சென்று
இல்லையேபோசென்று எல்லோரும்தேட

எங்கேயோ மறைந்திட்டார் போசு — அவருக்கு
இந்திரவிமானங்கள் வந்ததென்றார்கள்
தங்குமோசித்தர்கள் சடலம் — சிட்டாய்
தன்னைத்தான் மாற்றியே பறந்திட்டதென்றார்

கமனசித்தியறிவார்களென்றார் — காலில்
கண்டதோர்குறடோடு ககனத்தில் பார்த்தோம்
அட்டமாசித்திகளைச்செய்ய — போசு
ஆகாயவீதிதனில் அலைகிறாரென்றார்

தேடுதே போலீசுக்கூட்டம் — திக்கு
திசையெல்லாம் ஓடுதே சிகப்புத்தலைப்பா
வாடுதே போலீசுலாக்கா — இன்று
வந்த அவமானத்தில் சிந்தையும் நொந்தார்

பொடிபோட்டு மயக்கினாரில்லை —தூமப்
புகைபோட்டு நடுவிலே போய்விடவுமில்லை
அடிபோட்டுக்காலால் நடந்தே —அந்த
ஆப்கானிஸ்தானத்தை அடைந்தாரே போசு

அங்கராக்குப் போட்டுக்கொண்டார் — தலையில்
ஆலிம்கள் போலவே உருமாலைகட்டி
தங்கரேக்குப்போன்ற மேனி — தன்னில்
தனிப்பட்டுகைலியும்தான் சுற்றிக்கொண்டு

தாடியிலே கைபோட்டுத்தடவி —அல்லாஹ-த்
தாலாவெனச்சொல்லி சாயபுவைப்போல
ஓடியும்நடையாய் நடந்து — தமக்கு
உள்ளதோர் பேர்மாற்றி ஜியாவுதீன் ஆனார்

அஸ்லாமலைக்கும் என்றுசொல்வார் — நாளைக்
கைந்துநேரம் தொழுகை அழகாகச்செய்வார்
இஸ்லாமின் பெரியார்கள் என்றே — இவரை
எண்ணாதே போலீசு எவரென்பாரில்லை

காபூலைநோக்கி நடந்தாராம் — அன்று
கைலியை விட்டுவிட்டு கால்சராய் போட்டார்
வாய்பேசத் தெரியாதபாஷை — இதனால்
வம்புவருமென்றெண்ணிவாய் ஊமையென்றார்

பட்டாணியர் வேஷம்போட்டு — இந்த
பாரதத்தாயுடைய விடுதலைக்காக
இட்டாலிஜெர்மானி ரஷ்யா — இதில்
ஏதேனுமொரு நாட்டுக்கேகவே எண்ணி

கூடவந்த பகவத்ராம்தன்னை — பேரில்
கூட்டாளி ரஹ்மத்கானாக்கியே வைத்து
ஓடவந்த காபூலின் நாட்டில் — உள்ள
உத்தமசந்திரனின் உதவிபெற்றிருந்தார்

போஸ-போனாரென்றசேதி — எங்கும்
பொசலாயடிக்குதே போனவிடமெல்லாம்
பேசாது ஊமையாய்போசும் — இதற்கு
பிடிபடாமல் போகப் பிரயத்தனப்பட்டார்

பதிமூணுநாள் அங்கிருந்து — காபூல்
பட்டணத்து வீதிகளில் பதுங்கிப்பயந்து
அதிகாரி வெளிநாட்டுக்காரர் — உள்ள
அம்பாசிடர்களின் ஆதரவுதேடி

ருஷ்யாவுக்கேகவே பார்த்தார்—அந்த
ருஷியஅதிகாரியிவர் ரூபத்தைப்பார்த்து
குஷியான ஆளல்லோபோசு—இந்தக்
குடுத்தாவும் சட்டையும் போசல்லவென்ருர்

இனியென்ன செய்வதெனத்தானே—சென்று
இட்டாலி நாட்டுடைய ஸ்தானீகர்பார்த்து
தனியாக வருகிருர் போசு—இவரைத்
தங்களின் நாட்டுக்குத்தா னனுப்புமெனவே

அடித்தாரேதந்தி யந்தபேர்கள்—கேட்டு
ஆனந்தமாச்சுது ஹிட்லருக்குத்தானே
துடித்தானே முஸலோனி குஷியாய்—சீக்கிரம்
சுபாஷ் சந்திரபோசையே தோள்தூக்கி வரவே

ஆகாசக் கப்பல்களை அனுப்பி—அதில்
அந்தரங்கமான பல சேதியும் அனுப்பி
வாகாகக் கூட்டிவரச்சொல்லி—போசின்
வரவுக்கு எதிர்பார்த்து வாசலில் நின்ருன்

ஜியாவுத்தீனென்ற பெயர்மாற்றி—தாங்கள்
செல்லும்வழி ரஷ்யாவில் சிக்காமல்செல்ல
காரடைன் என்றபெயர் வைத்து—வெள்ளைக்
காரனைப்போலவே கடந்தாரே போசு

அடிமை நாடெல்லைவிட்டுப் போனுர்—அந்த
அன்னியன் ஹிட்லருட அன்புக்காளானுர்
மிடிமையால் வாடுமிந்த நாட்டை—திரும்ப
மீட்கவே அன்னியனின் வீடேறிப்போனுர் 2320

இந்தியா முடிசூடாமன்னன்—நாட்டு
இளைஞரின் மனதிலே இருந்து வாழ்மன்னன்
வந்தானே வருங்காலமன்னன்—இந்த
மாநிலம் போற்றுகிற மாணிக்கம் வந்தான்

வந்தான் வந்தானிங்கு வந்தான்—தேசத்தை
வாழ்விக்க வந்தவன் மறைந்தோடி வந்தான்
தந்தோம் தந்தோமெங்கள் உதவி—என்றே
சாற்றினுர் ஜர்மன் ரேடியோதன்னிலே

ராணுவத்தின் ரந்திரங்களெல்லாம்—போசு
ராவோடு ராவாகக் கத்துக்கொண்டாராம்
ஆணுவத் திமிர்கொண்ட—இந்த
ஆங்கிலேயன் தனது ஆட்சியைவீழ்த்த

பாதாள வழிபோகும் கப்பல்—தண்ணிப்
பாம்புபோல் முக்குளிக்கும் சப்மரின்கப்பல்
மீதேறிஉட்கார்ந்து போசு—மிக்க
வேகமாய் சப்பானின் வீட்டுக்குவந்தார்

தொண்ணூறுநாள் தண்ணிக்குள்ளே—சென்று
தொசங்கட்டித் துரத்துகிற எதிரிகளேக்கடந்து
எண்ணூறு காதவழி தூரம் தண்ணீர்
இதவாகக்கடந்தோடி இறங்கினுர் ஜப்பான்

நாற்பத்தி மூன்றேப்ரல் மாதம் —தன்னில்
நம்முடைய மாணிக்கம் ஜப்பானில் சேர்ந்தே
காப்பதுக்கு வகையின்றி விட்ட—இந்தக்
காளே யிளஞ்சேனேயை கைப்பற்றிக்கொண்டார்

தேசீய ராணுவத்தின் தலேமை—தன்னே
தீரன் சுபாஷ்போசு தானேற்றுக்கொண்டு
தேசீய சர்க்காரும் வைத்தார்—ஜெயஜெய
ஜேய்ஹிந்து மந்திரம் செப்பினுர் வீரன்

ஆசாது ஹிந்தென்று சர்க்கார்—தன்னே
அமைத்தாரே இந்தியா தேசத்தின் அரசை
பேசாது தலேவணங்குகின்ருேம்—இந்தப்
பெருமைக்கு விதைபோட்ட பிரம்மாவும்இவனே

தேசீயக்கொடி யேத்திவைத்தார்—மும்மை
திகழ் வர்ணக்காங்கிரஸ் திவ்யமாம்கொடியை
ஆசாது ஹிந்து சர்க்கார்க்கே—கொடியை
அங்கீகரித்தையன் ஆசியும்கேட்டார்

அய்யனே காந்தியெம்பெருமான்—தேசத்துக்
கப்பனே எங்களது அண்ணலே உமது
செய்தாள் மலர்போற்றுகின்ருேம்—எனவே
செப்பினுர் ரேடியோவில் தீரன்சுபாஷு 2330

காந்தியெம்பெருமானே நாட்டின்
கண் திறந்துவிட்டவரே விண்புகழுமிறைவா
சாந்தமுறை தனேவிட்டு வந்தேன்—இனிமேல்
சப்பானிலிருந்து நான்சண்டை யிடப்போறேன்

உங்கள் வழிவிட்டுவந்தாலும்—நாம்பள்
ஒருபொருளே நாடியே உழைக்கிருேமதனுல்
தங்களது ஆசியும் வேண்டும்இந்தச்
சர்க்காரை நீடுழிதான் வாழக்கூறும்

என்றுமே நேத்தாஜி கூறி—கொடியை
ஏற்றினர் ஜேய்ஹிந்து இந்தியா வாழ்க
அன்றுமுதல் உலகுள்ள மட்டும்—துவஜம்
ஆடியே வானத்தை அழகுசெய்யும் பாரீர்

ஜாவாவில் சுமத்ராவில் அந்த
தாய்லாந்து செய்கோனில் தண்ணீர்மலாயில்
ஏவாது மருந்தாகி நிற்கும்—இந்த
இரங்கோனில் பர்மாவில் அந்தமான் தீவில்

இந்தியா லீக்குகளை வைத்தார்—அங்கு
ஏராளமான ஜனம் சண்டைக்குச்சேர்த்தார்
சொந்தநாட்டுப் போருக்கென்றே—செல்வம்
சொரிந்தார்களிந்தியர் சுபாஷ்போசு தமக்கே

மாலைதனை ஒருவர் போட்டிடுவார் அந்த
மாலையை கோடிதந்து மற்றவர் எடுப்பார்
மன்னவரின மார்தவழ்ந்தமாலை—தன்னை
வாங்கியேஇருகண்ணில் வைத்து நீர்பொழிவார்

காதோலை கருவைமணி கழற்றி—போசின்
காலடியிலேவைத்துப் பணிவார்கள் பெண்கள்
மாதாவின் கழுத்துக்குச்சரடும்—சொர்ண
மாங்கல்யம் தேசத்து மானத்துக்கீவார்

கொண்டுவந்து கொட்டுவார்காசை—இந்த
குவலயத்திலே பெரியரென்பார்கள் போசை
தண்டெடுத்து இந்தியாசென்று—அந்த
தாய்நாட்டை விடுதலை செய்வீர்களென்பார்

வட்டித்தொழில் செய்திட்டவணிகர்—எந்த
வம்புக்கும் போகாது வாழுகின்றதனிகர்
செட்டிமக்கள் போசுடன் சேர்ந்தே—தீரச்
சிங்கங்களானர்கள் தேசத்துக்குழைத்தார்

போசென்று பேர்சொல்லிவிட்டால்—நெஞ்சில்
பொங்கிவரும் தேசபக்தி தங்குதடையின்றி
போசென்று பேர்வைத்தபிள்ளை—தேசப்
போருக்கு வெற்றிதரும் புயவீரனவான் **2340**

பெண்களின் படைதிரட்டிக்கொண்டார்—ராணி
பேரரசி லக்ஷ்மியின் பேரிலே ஒன்றும்
ஆண்களின் படைகள்அநேகம்—அதில்
அய்யனின்பேர் நேருஆசாதின் பேராம்

ஷா நவாஸ் தில்லானே சேகால்—மூவர்
தன்னேயும் பட்டாளத் தலேவர்கள் ஆக்கி
ஜா நவாசம் விட்டுப்பார்த்தார்—அவர்கள்
தாக்கினர் அரக்கானில் மணிப்பூரில்நின்றே

*ஜெயஜெய ஹிந்துஸ்தானம் ஜெயஜெய ஹிந்துஸ்தானம்
செங்கோட்டைக்குச் செல்லுதுபாரும் தேசியப்பட்டாளம்

இந்தியநாட்டு மண்ணிலிருந்து எதிரிகளேயோட்ட
வந்ததுபாரும் பாரும்என்றே வணங்கியும்நின்றிட்டோம்

வந்தாரைய்யா இந்தியநாட்டு மண்ணும்தொட்டார்கள்
மாதாவின் மணிக்கொடியும் இம்பால் மணிப்புரியில்போட்டார்

ஆட்டம்குண்டு போட்டுவிட்டார்கள் அழிந்ததுஜப்பானும்
ஆட்டம்கண்டது நேதாஜியின் அரசியல் போராட்டம்

ஆகாயகப்பல் தனிலேயேறி அவரும்ஜப்பானே
அணுகப்போகும் நேரம்வரையில்அறிந்தோம்சேதியினல்

கப்பல்விழுந்து இறந்தாரென்று கதையும்சொல்லுகிருர்
காலதேவனும் கண்கெட்டவனே கையைவைப்பானே

என்றைக்காகிலும் வருவார் போசுஎன்றே எண்ணுகிறோம்
எங்கள் நேதாஜியைக் காணத்தவமும் பண்ணுகிறோம்

## தேசிய ராணுவ விடுதலே

ஜெய்ஹிந்த் என்று போரைநடத்திய தீரச்சிங்கங்கள்
தில்லான் சேகால் இன்னுமாயிரம் தேசியவீரர் 2350

தன்னேச்சிறையில் அடைத்தேமரணதண்டனே சொல்லிடவே
தானேத்தலேவன் கோர்ட்டுக் கூடித்தானிருக்கும் நாளில்

நேருமகானும் காங்கிரசாரும் நீதியில்லேயென்றுர்
நிதிகள் சேர்த்து வக்கீல்வைத்துப் போராட்டம் செய்தார்

அய் என் ஏக்கு நிதிகள் திரட்டி அனுப்புதையாதேசம்
ஆயிரம் லட்சம் அரையும் காலும் அனுப்புதையாதேசம்

தேசம் முழுமையும் ஜேய்ஹிந்த் என்று செப்பிப்பணிந்திடுருர்
சின்னஞ்சிறுசும் ஜேய்ஹிந்த் என்று செப்பிக்குதித்திடுருர்

சுத்திபிடித்த தொழிலாளியெல்லாம் சொல்லுகிருர் ஜேய்ஹிந்த்
கத்திபிடித்த இந்தியசிப்பாய் கதறுகிருன் ஜேய்ஹிந்த்

பட்டாளத்தார் விதிகளேமீறி பணமும் திரட்டுகிருர்
பாரதநாட்டுவீரர் இவரைப்பணிந்தே போற்றுகிருர்

எட்டுத்திசையும் ஜேய்ஹிந்தென்று எழும்புதையாகோஷம்
எங்குபாத்தாலும் ஜேய்ஹிந்தென்று எழும்புதையாகோஷம்

அய் என் ஏயை விடுதலை செய்யென்றதட்டுதையாதேசம்
அனுதாபத்தில் வேலைநிறுத்தம் ஆயிரமுண்டாகும்

வக்கீல்தொழிலை எட்டியும்பாரா வள்ளல் ஜவஹரிலால்
வக்காலத்தும் சட்டையும் போட்டுவந்தார் கோர்ட்டினிலே

தேசம் எல்லாம் செங்கோட்டையதின் திக்கைப்பார்க்குது
தில்லான் சேகால் கதியும் என்னஎன்றே கேட்குது

பொன்மணிபோலே புதுமழைபோலே புலாபாயி தேசாய்
புத்தியிலிருந்தே இந்தியமாதா போரிடுகின்றாளோ ?

நாவில் சரஸ்வதிகோயில் கொண்டு நடனமாடுறாளோ
நல்லவர் நாவில் விளையும் தெய்வ நர்த்தனமோ இதுதான்

சொல்லுவதெல்லாம் தங்கம் தங்கம் சொர்ணம் சொர்ணம்தான்
இல்லைபூமியில் இதுபோல் என்றும்எவரும் பேசவில்லை

என்றே போற்றி எதிரிவக்கீலும் எல்லாநாடுகளும்
இந்தக்கேசின் எதிர்வாதத்தை எண்ணித் திகைத்திடவே

புலாபாய் தேசாய் வாசகத்தாலே பூமிப்புண்ணியத்தால்
பொதுஜனமக்கள் அனுதாபத்தால் போசின் தியாகத்தால்

சிங்கம்சேகால் தில்லான் மூவரும் சிறையைநீங்கிவிட்டார்
தேசம்முழுவதும் தேசபக்தியே சிகரம் ஏறியதே

## கப்பல் சண்டை

எவரைப்பாரு இந்தியதேசம் எம்மது என்கின்றார்
சுவரைப்பாரு ஜேய்ஹிந்தென்று சுதைகள் தீட்டுகிறார்

கப்பல்படையில் அன்றுநடந்த கதையைச் சொல்லுகிறேன்
சிப்பாய்கலகம் திரும்பவும்வந்த சேதியைச் சொல்லுகிறேன்

பட்டாளத்தில் பாதிப்பேரோ இந்திய தேசத்தார்
பவுனைக்காட்டி சம்பளம் வாங்குவர் அன்னியதேசத்தார்

பாதைகள் போடவும் மூட்டைகள்தூக்கவும் இந்தியதேசத்தார்
பச்சைசிகப்புக் கொடியை நடுவது அன்னியதேசத்தார்

சோறுஆக்கவும் சுமையைத் தூக்கவு மிந்தியதேசத்தார்
சோத்தைத்தின்று சுகமாயிருப்பது அந்நிய தேசத்தார்

சுட்டகுண்டுக்கு இரையாய் விழுவது இந்தியதேசத்தார்
சூரர்கள் என்றே பேரையெடுப்பது அன்னியதேசத்தார்

வெள்ளைக்காரன் வெற்றிக்குக் காரணம் இந்தியதேசத்தார்
வெள்ளைக்காரனுக் கடங்கிக் கிடப்பதுமிந்திய தேசத்தான்

இத்தாலிநாட்டில் எதிர்த்து நின்றவன் இந்தியதேசத்தான்
எகிப்துபாலைவனத்தில் விழுந்தவன் இந்தியதேசத்தான்

போலந்துக்குப் போரிட்டுக் காத்தவன் இந்தியதேசத்தான்
பூமாலைகளைப் போட்டுக் கொண்டது அந்நியதேசத்தான்

மாடுபிடித்து மஞ்சியெடுத்தவன் இந்திய தேசத்தான்
மாரிலேசந்தனம் பூசிக்கிட்டவன் வந்த வெள்ளைக்காரன்

கப்பல்படையிலும் பாதிப்பேரு கருப்புச் சாதிக்காரன்
கால்மேலே கால்போட்டு இருப்பவன் ஜாதிவெள்ளைக்காரன்

ஜெய்ஹிந்தென்று மந்திரம்கேட்டார் தீரர் இந்தியர்கள்
செங்கோட்டையதன் சேதியைக் கேட்டார் தீரமானபேர்கள்

இ. தே. ராவின் நிதிக்குப்பணமும் எழுப்பிக் கொடுத்தார்கள்
எல்லாக்கப்பலும் ஜெய்ஹிந்தென்று எழுதியும் வைத்தார்கள்

இந்தியதேசக்கொடியை நிறுத்தி வணக்கம் செய்தார்கள்
இனிமேல் முகமன் ஜெய்ஹிந்தென்றே ஏற்படுத்திவிட்டார்

பாத்தானையா பாத்தானையா பட்டாளத்துரையும்
பாக்குபிடிக்க நினைத்தானையா பட்டாளத் துரையும்

இந்தியனுக்குக் கட்டுப்பாடு இல்லையென்று பாய்ந்தான்
ஏசியும்விட்டான் நாய்பேய்என்றே இங்கிலீஷ் காரதுரை

கேட்டாரிந்தியர் வெள்ளைத்திமிரின் கெடுமதியைப் பார்த்தார்
கூட்டம்போட்டே மன்னிப்புக் கேட்டுக்கொள்ளவேணுமென்றார்

வேலைநிறுத்தம் செய்திட பம்பாய் வீதியிலேவந்தார்
வீரர்களுடனே ஊரிலுள்ளாரும் விரைவில் சேர்ந்திட்டார்

பம்பாய்நகரில் மாலுமியிவர்கள் பவனியும் வந்திடவே
பார்த்தது அன்னியநாட்டுச் சர்க்கார் படையையேவிவிட்டார்

பார்த்தாரிந்தியர் அவரவர் கப்பலில் பாரதக் கொடிபோட்டார்
பதிலுக்குப்பதில் சண்டை நடத்த பதறி எழுந்திட்டார்

கொடியேற்றியதைக் கண்டதும் அன்னியர் குண்டுபோடலானார்
குடியைக்காக்கும் இந்தியவீரரும் குண்டு போடலானார்

இந்தியரெல்லாமிருந்த கப்பலை எடுத்துக் கொண்டார்கள்
இந்துஸ்தானை சரஸ்வதி கப்பலை எடுத்துக்கொண்டார்கள்

கப்பலைஎல்லாம் திருப்பி நிறுத்தி கரையைநோக்கியேதான்
கணீர்கணீர் எனப்பீரங்கியாலே கணகண கணவெனவே

பம்பாய்நகரக் கோட்டையின்மேலே பளுத்தாப் போட்டார்கள்
படைபட்டாள மிருக்குமிடத்தில் பளுத்தாப் போட்டார்கள்

பாரதநாட்டுக்கு ஜெயஜெயவென்றே பளுத்தாப் போட்டார்கள்
மாரதவீரர் வெள்ளையர்மேலே வாருச்சண்டை போட்டார்

கப்பல்சண்டை நடத்திவிட்டார்கள் தாயின் கால்விலங்கைக்
கழண்டுவிழுகவே குண்டுகள்போட்டுக் கடுபிடி செய்தார்கள்

வெள்ளைக்காரன் சொல்லிப்பார்த்தான் வீரர் கேட்கவில்லை
வீட்டுத்தலைவன் படேல்சொல்லவே விருப்பத்துடன் கேட்டார்

பார்த்தான் வெள்ளையதேசத்தானும் பகுத்தறிவோடு கண்டான்
பட்டாளத்திலும் தேசத்துபக்தி பரவியதைக் கண்டான்

இந்தியநாட்டு மண்மேல் அன்னியர் இனியொருகணமேனும்
இருந்துவாழவே இயலாதென்று இங்கும் கண்டுகொண்டான்

## மந்திரிகள் தூது

கொடுத்துட்டுத்தான் போவோம் நாங்க கொடுத்துட்டுத்தான் போவோம்
எடுத்துக்காமல் வீதியில்நீர் எறிந்துவிட்டாலும் தான்

இந்தியநாட்டுக்குச் சுதந்தரம் தரவே இசைந்துவிட்டோமென்றார்
எடுத்துக்கொள்வது இந்தியர்கடமை என்றார் ஆட்சியுமே

ஒற்றுமையாகி வாங்கிக்கொண்டால் உடனே கொடுத்திடுவோம்
ஒத்துப்போக வில்லையென்றாலும் உண்டாக்கித் தருவோம்

இந்தியநாட்டுத் தலைவர்கூடி எங்களின் சொல்கேட்டு
இதமாய்சுதந்திரந்தன்னை நீங்கள் ஏற்றிடுவீர் என்றே

தூயவரானகிழவர் லாரென்ஸ் தொழிற்கட்சிப் பெரியார்
தூதுக்குவந்து தோற்றுப்போன துரைமகன் கிரிப்ஸுடனே

அலெக்சாண்டரென்னும் மந்திரியொன்று ஆகமூணுபேரும்
ஆவல்மிகுந்து வந்தாரிந்திய ஆட்சி கொடுத்திடவே

தனித்தனியாக தலைவரையெல்லாம் சந்திப்புச் செய்தார்
சாந்தமகாத்மா காந்திமகானையும் சந்திப்புச் செய்தார்

முஸ்லீம்லீக்குத் தலைவர்களுடனே முகதாவில் பேசி
மூணு மந்திரி மாரும்தனக்குள் முடிவுசெய்துகொண்டு

இந்தநாட்டுக்குத் தூதாய்வந்தோம் எல்லாமும் கேட்டோம்
இந்தியநாட்டைப் பிரிக்கச்சொல்லும் எண்ணத்தையும் கேட்டோம்

காங்கிரஸ்காரர் தேசம்இதிலே கத்திபோடவேண்டாம்—என்று
கதறுகிறார்கள் விழிநீர்சோர்ந்திரு கண்ணும் புண்ணாக

முஸ்லீம்லீக்கோ நாடுபிரிக்க மும்முரமா யுள்ளார்
மூலைவடமேல் வடகிழக்கினிலே முஸ்லீம் ஆட்சிசெய்ய

இருவர்கட்சியும் கேட்டோம்நாங்கள் எங்கள் தீர்ப்புச்சொல்வோம்
ஒருவர்க்கொருவர் ஒத்துமையாகி ஊன்றிக் கேட்டிடுவீர்

தேசம்இதிலே சிறுதொகை முஸ்லீம்ஜனகணிதம் பார்த்தால்
திக்குதிசையும் சிதறிஉள்ளார்கள் தேசம் பூராவும்

வடமேற்கினிலே சிந்துபஞ்சாப்பில் வாழும் ஜனத்தொகையில்
நூற்றுக்கு முப்பத்தெட்டுப் பேர்கள் முஸ்லீமல்லாதார்

வடகிழக்கினிலே வங்காளத்தில் வாழும் ஜனத்தொகையில்
நூற்றுக்கு நாற்பத்தெட்டுப்பேர்கள் முஸ்லீம் அல்லாதார் 2410

ஏறக்குறைய பாதிக்குச் சரியாய் இந்தியருள்ளதனால்
எங்கும்லீக்கு தன்னரசாள இடமில்லை யென்னுகிறோம்

நாட்டை இரண்டாய் பிரித்திட்டாலும் நன்மைவருமென்றோ
நாட்டிலேஇந்துவும் முஸ்லீமொன்றாய் நடந்திடுவாரென்றோ

ஒற்றுமையாகி வாழ்ந்திடுவாரென ஒன்றும்தோன்றவில்லை
உருவெளித் தோற்றம் கூடக்காணோம் உற்றுநோக்கினாலும்

இன்னும் துன்பம் நாடுபிரித்தால் ஏற்படஇடமாகும்
இந்தியதேசம் என்பதுபோயி இரண்டுபட்டுப் போகும்

தந்திதபாலைப் பிரிக்கவும்வேண்டும் தனித்தனிச் செலவாகும்
தானைசேனையைப் பிரித்தாலதனால் சண்டைக் கிடமாகும்

தன்னரசாளும் சமஸ்தானங்கள் தனிவழியே போகும்
உன்னொடுசேர என்ன தருகிறாய் உரைக்கவுமிடமாகும்

வங்காளத்திலும் வடமேற்கிலுமே வைக்கணும் பாகிஸ்தான்
வைத்தாலிவர்கள் போகவும்வரவும் வழியும் கிடையாது

எழுநூறுமைல் இந்தியர்பூமியில் இவர்கள் போகவர
இடங்கொடுப்பாரோ சண்டையும் நேரஇதுஒரு சாக்காகும்

இந்தியநாட்டு எல்லையிரண்டில் இருந்திடும் பாகிஸ்தான்
எதிரிகள்வந்தால் சின்னத்தேசம் எதிர்க்கவும் முடியாது

எல்லைக் கோடியில் பாக்கிஸ்தானை இருக்கச்செய்வதிலே
தொல்லையுண்டாகும் என்றே சொல்லித்தூயவர் லாரென்சும் 2420

பாக்கிஸ்தானம் கிடையாதென்று பகர்ந்து விட்டாரையா
பதிலுக்கு மற்றொருதிட்டம் தந்தார் பாரதநாட்டுக்கே

## மந்திரிகள் திட்டம்

பாரததேசத்தில் மாகாணம்
பதினாறுவரை இன்றுஉண்டு
பரம்பரைஅரசர் ஆளுகிற
பாங்கு சமஸ்தானம்மெத்தவுண்டு

அத்தனைக்கும் ஒருசமுதாயம்
ஆகவே இந்தியயூனியனில்
மத்தியிலேஒரு வல்லரசாய்
மாட்சிமை தங்கிய ஆட்சியுமாய்

அன்னியதேசத்து உறவுகளும்
அன்னையின் பூமியைக் காப்பதுவும்
ஆனதோர் போக்குவரத்துகளும்
ஆகுமிம்மூன்றை நடத்திவர

இந்தியயூனியன் தானமைத்து
இதற்கும் சட்டசபையமைத்து
சொந்தநாடு தன்னையாண்டிடலாம்
சுதந்திரமாகவே ஆண்டிடலாம்

மற்றவிஷயங்கள் யாவற்றிலும்
மாகாணங்கள் சுதந்திரமாய்
உற்றபடிக்கு நடந்திடவே
உள்ளவழிகளுமுண்டிதிலே

•

அந்தந்த மாகாண சட்டதிட்டம்
அவரவர்கூடியே செய்துகொண்டு
சொந்தமானபாஷை சூழ்ந்தமக்கள்
சுகமாய் வாழ்ந்திடச் செய்திடலாம்

இந்துமெஜாரிட்டி மாகாணம்
இஸ்லாம் அதிகமாகாணம்
இஸ்லாம்இந்து சரிசமமாய்
இருக்கும்இடமென மூன்ருக்கி

அந்தந்தசட்ட சபையிலுள்ள
அறிவுமிகுந்தவர் தனைத்திரட்டி
ஆளவேசட்டம் வகுத்துவிடும்
அரசியல் நிர்ணயசபைக்கனுப்பி

தேசம்முழுதுக்கும் ஓர்சட்டமாய்
செல்வர்க்கு மேழைக்கு மோர்சட்டமாய்
ஈசனுக்குப்பொதுவான சட்டம்
எல்லோருங்கூடி யமைத்துக்கொண்டு 2430

இந்தியநாட்டைச் சுதந்திரமாய்
என்றென்றும் வாழவேசெய்திடுவீர்
இங்கிலிஷ்காரரின் பொறுப்பைவிட்டு
எடுத்துக்கொள்ளுவீர் என்று சொன்னர்

நாற்பத்துயெட்டாண்டு ஜூனுக்குள்ளே
நாங்கள் வெளியேறிப் போவமென்று
நாற்பத்திரண்டிலே காந்திசொன்ன
நல்லதோர் வாசகம் கேட்டார்கள்

ஆளுஞ்சட்டம்திட்டம் செய்யும்மட்டும்
ஆட்சிமுறைகள் வகுக்குமட்டும்
நாளும்நடக்கும் அரசியலை
நடத்தவேசர்க்கார் அமைக்கவேண்டும்

மக்களின் நம்பிக்கை பெற்றவரே
மந்திரியாக இருந்தால்தான்
அக்கரையோடு சனந்திரண்டு
ஆட்சிமுறையை வகுத்திடலாம்

சுதந்திர இந்திய நாடாகச்
சொல்லும்வழிகளைச் சொல்லிவிட்டோம்
இதந்தரும் பாரதநாட்டாரே
ஏற்றிடுவீரென்று சொன்னர்கள்

இந்தத்திட்டந்தனை ஏற்றுக்கொண்டே
இடைக்காலசர்க்கார் அமையுமென
அந்தமந்திரிகள் மூவருமாய்
அனைவருக்குஞ்சேதி சொன்னர்கள்

திட்டத்தை காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளுதல்

காந்திமகானும் திட்டமிதை
காரியக் கண்கொண்டு பார்த்தாராம்
கட்சிப்பகைகொண்ட நாட்டுக்கிந்த
கதிதான் வருமென்றுரைத்தாராம்

மாகாணங்களை மூன்றினமாய்
மாற்றியமைத்தது சரியல்லவே
ஆகாச்செயல் இதென்றாலும்
அந்தந்த மக்களின் சம்மதம்போல்

அமைப்பதே முடிவென்பதனால்
ஆகட்டும்திட்டம் இதைஏற்போம்
அன்னியர்ஆட்சி விலகுதற்கே
ஆதாரமாகவே ஏற்போமென்றார்

இடைக்காலசர்க்கார் அமைப்பதற்கே
இங்குள்ளவைசிராய் காங்கிரசே
எழுந்தேவாருங்க ளென்றழைக்க
என்னென்னசெய்தது காங்கிரசும்

பண்டிதஜவஹர்லால் நேருதன்னை
பாரதநாட்டு மன்னவனை
அண்டியேலீக்குத் தலைவரிடம்
அனுப்பிவைத்தார் தூதாக

காங்கிரசும்லீக்கும் கூடியதாய்
கவர்ண்மெண்டு அமைப்போமென்றார்
ஆங்கிலஆட்சி விலகுமுன்னே
அண்ணனுந்தம்பியு மாவோமென்றார்

முஸ்லீம்லீக்குத் தலைவர்இதை
முற்றிலுமேற்க மறுத்துவிட்டார்
இஸ்லாமானவர் இந்துவுடன்
இருந்துஆள வியலாதென்றார்

மாகாணசுயாட்சிக் காலத்திலே
மந்திரிகள்கேட்டுக் கொண்டதுபோல்
வைசிராய்வந்து குறுக்கிடாமல்
வாக்குறுதியும் வாங்கிக்கொண்டார்

தேசம்முழுதுக்கும் ஓர்சபையாய்
சின்னவர்பெரியவர் பிரதிநிதியாய்
சாதிமதங்கள் எதிலுமுள்ள
சனங்கள் யாவருமுள்ளதுமாய்

உள்ளநம் காங்கிரஸ்மகாசபையார்
உடனே ஆட்சியை ஏற்பதென்றும்
தெள்ளத்தெளிய நடந்துவரும்
தேசீயசட்டம் வகுப்பதென்றும்

திட்டத்துடன் இடைக்காலசர்க்கார்
தேசத்தின் ஆட்சி நடத்திடவே
மட்டற்றபுத்தி மகிமையுள்ள
மாணிக்கங்களைத் தேடிவந்தார்

## 1946 ஆகஸ்டு 16உ முஸ்லீம் லீக் நேரடி நடவடிக்கை

காங்கிரஸ் தேசத்தின் ஆட்சிதன்னில்
கலந்துகொள்ளவே போகுதென்று
கண்டதும்லீக்குத் தலைவர்ஜின்னா
கணக்கில்லாததோர் கோபங்கொண்டார்

ஆங்கிலராஜ்ஜியம் இஸ்லாமை
அனியாயம்செய்து விட்டதென்றார்
ஆரம்பம்செய்யுவோம் நேரடியாய்
ஆனநடவடி என்று சொன்னார்

பிரிட்டிசுக்காரர்கள் நம்மளுக்கு
பேதகமாக நடந்துவிட்டார்
விட்டுவிடுங்கள் ஸர் பட்டங்களை
வீரர்கள்யாவரும் கூடுமென்றார்

ஆயிரம் ஆயிரம் கூடுமென்றார்
ஆகஸ்டுதேதி பதினாறில்
அன்னிய பிரிட்டிசுக்காரரின் மேல்
ஆரம்பம்போரென்று சொல்லிவிட்டார்

ஆங்கிலேயர்இதைக் கேட்டவுடன்
அஞ்சிப்பயந்தார் நெஞ்சுக்குள்ளே
அகிம்சைப்போர் முறையில்லையதால்
ஆபத்துவருமென்றெண்ணினார்கள்

பதினாறும்தேதி காலையிலே
பங்காளத்திலே கல்கத்தாவில்
பந்திபந்தியாக லீக்குக்காரர்
பட்டணப்பிரவேசம் செய்தார்கள்

கத்தியும்பாலா வேந்திவந்தார்
கம்பும்கழியும் எடுத்துவந்தார்
இத்தினத்திலே வெள்ளையர்க்கு
என்னநடக்குமோ வென்றஞ்சினோம்

ஆருயிரம்சனம் செத்ததையா
அஞ்சுகோடிப்பணம் நட்டமையா
அடிதடிக்காயமும் பட்டவர்கள்
அஞ்சுமூவாயிரமாகுமையா

ஐரோப்பியர்கள் இறக்கவில்லை
ஆங்கிலேயர்க்கொரு சேதமில்லை
அண்ணனும்தம்பியுமா யிருந்தோர்
அடித்துக்கொண்டிங்கே மாண்டுவிட்டார்

காளியின்கட்டம் திருநகரில்
கத்திப்பழிகள் விழுகுதடா
நாளிக்குநூறு கொலைவிழுந்து
நாத்தக்கவிச்சி யடிக்குதடா

கண்டமரத்திலே கூடுகட்டி
காத்துக்கிடந்த கழுகுஎல்லாம்
கொண்டாட்டமாக பிணங்களையே
கொத்தித்தின்ன அங்கேகூடுதடா

கூளிப்பிசாசுகள் பேய்கள் எல்லாம்
குட்டிகுழந்தையைக் கூட்டிக்கிட்டே
காளியின் கட்டநகர்தேடி
கடும்பசிதீர்க்க வருகுதடா

அண்ணனும் தம்பியுமாயிருந்த
அத்தனைபேர்களும் வெட்டிக்கிட்டார்
ஆளப்பிறந்திட்ட மன்னவர்கள்
அடித்துக்கொண்டு மடிந்துவிட்டார் 2460

கூடப்பிறந்தவன்போ லிருந்து
குஞ்சம்வச்சு வேட்டிகட்டிகிட்டு
பாடப்பழகவும் கத்துக்கிட்டு
பக்கத்து வீட்டில் இருந்தவர்கள்

வெற்றிபடைத்தவர் நாங்களென்றார்
வெட்டிமடித்தவர் நாங்கள் என்றார்
வெள்ளையராட்சிக்கு முன்னாலே
வீட்டுக்குடையவர் நாங்கள் என்றார்

அருவிபுரண்டு விழுந்ததுபோல்
ஆனைமதங்கொண்டு வந்ததுபோல்
உருவிய கத்தியுடன் புகுந்து
உற்றவர் தம்மையுமே மறந்து

கட்டுக்கடங்காத காட்டாறு
கல்லைப்புரட்டி உருட்டுதல்போல்
மட்டுப்படாத மதயானை
மாவுத்தன் தன்னை மிதிச்சதுபோல்

கைக்குழந்தைகளை விட்டெறிந்து
கம்சனைப்போலவே வெட்டிவிட்டார்
கண்ட இடத்திலே பெண் குலத்தைக்
கற்பையழித்துக் கெடுத்துவிட்டார்

குச்சுக்கொளுத்தி யெரித்தார்கள்
கும்பிடுங்கோயில் எரித்தார்கள்
மச்சுவீடு மாடமாளிகையை
மைதானப்பொட்டலாக்கி விட்டார்

## தேசமெங்கும் கலகம்

கல்கத்தாவில் நடந்த சண்டை
காட்டுப்புறத்துக்கும் போனதையா
அல்பத்தனத்தில் விளைந்த சண்டை
அடுத்த ஊருக்கும் போனதையா

பீகார் நாட்டிலே இச்சேதி
பெருந்தீபோலப் பிடித்துவிட
பேச்சுக்குப் பேச்சுப் பதில்பேசி
பெரிய கலகம் வருவதுபோல்

பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்றே
பாடலிபுத்திர மக்கள் செய்தார்
அழிக்குங் கொலையை உதறிவிட்ட
அசோகனாண்ட பூமியிலே

குத்துவெட்டுப்பழி போட்டுக்கிட்டார்
கொள்ளை கொலைகளும் செய்துவிட்டார்
ஒத்தனுக்கொன்பது தலைகளென்றே
உருண்டு விழுந்தது பூமியிலே

நவகாளிப் படுகொலையைச் சொன்னால்
நட்டமும் லாபமும் ஏதுமுண்டோ
அவகேடு இந்த நாட்டுக்கிது
அன்னியன் பார்த்துச் சிரித்துவிட்டான்

நவகாளிக்கொலே கேட்டதுமே
நாடெங்கும் ரத்தம் கொதிச்சுவிட
அவமானத்தைச் சகிக்காமல்
அங்குமிங்கும் கொலேயானதையா

பீகார் நாட்டிலே ராஜேந்திரப்
பிரசாத் பிறந்த பூமியிலே
சாகாவரத்தைப் பெற்றுவந்த
சக்தியின் காம ரூபத்திலே

பாடலி புத்திர வீதியிலே
பக்கத்திலுள்ள கிராமத்திலே
ஓட விட்டார்களே ரத்தவெள்ளம்
யுத்தவெறி கொண்ட பேர்களெல்லாம்

எல்லேப் புறத்தினேத் தேர்ந்தெடுத்தார்
இன்னெரு பக்கத்தைத் தேர்ந்தெடுத்தார்
தொல்லேவிளேத்துக் கொலேபுரிய
தோள்தட்டி நின்ருர் தேசத்திலே

எங்கள் தலேவர் ஜவஹரிலால்
எவரும் வணங்கும் ஜவஹரிலால்
தங்கள் தலேயிலே கல்லெறிந்தார்
தாவாங்கட்டையில் கல்லெறிந்தார்

பழிக்குப்பழி எனக் கிளம்பிவிட்டார்
பாங்கில்லாக்காரியம் செய்துவிட்டார்
அழிக்கமுடியாத அகிம்சையை
ஆத்திலே தூக்கி யெறிந்துவிட்டார்

சக்கிரவர்த்தி அசோகன் வந்தே
சத்தியம் அகிம்சை சொன்னவிடம்
அக்கிரமத்துக்கு உறைவிடமாய்
ஆனதுகாலக் கொடுமையிலே

இந்தக்கொடுமையைக் காந்திகண்டார்
ஏழைபங்காளன் காந்தி கண்டார்
சிந்தின ரத்தம் பெருக்கெடுத்து அவர்
சிந்தையில் ஆருக ஓடிவர

சீச்சி இது என்ன கேவலமோ
செய்த தவமெல்லாம் வீணுச்சோ
போச்சோ இந்தியர் மானமெல்லாம்
பூமியிலிரக்கம் பொய்யாச்சோ ? 2480

பீகார் பாட்னு வாசிகளே
பெரியமனிசன் சொல்லுகிறேன்
ஏகாங்கியான பேர்வழிநான்
என்னுயிரைத்தரச் சம்மதித்தேன்

காந்தி உயிர்மேல் ஆசையுண்டேல்
கத்திப்பழியை நிறுத்திடுங்கோ
சாந்தியுடன் வாழ்வமென்று சொல்லி
சத்தியமாக நடந்திடுங்கோ

என்ருர் காந்தி குரல்கேட்டு
எடுத்த கத்தியை விட்டெறிந்தார்
அன்றே நின்றது பாட்னுவில்
அக்கிரமக்கொலைச் சேதியெல்லாம்

காந்திமகானும் கொடுமைகளை
கவனமாகவே பார்த்துவந்தார்
சாந்தமகானும் தேசத்திலே
சாதிமதப்போரைப் பார்த்துவந்தார்

## 1946 செப்டம்பர் 2உ
## காங்கிரஸ் இடைக்கால சர்க்கார் அமைத்தல்

அரசியல் நிர்ணயம் செய்யுமட்டும்
அமைக்கும் சர்க்காராமிதிலே
ஆட்சி நடத்தவே சேர்ந்தார்கள்
அன்பு வழியிலே போரிட்ட பேர்

சொத்து சுதந்திரம் தியாகம் செய்து
சோறும் துயிலுமே தியாகம் செய்து
பெத்தவள் தனக்கும் மேலாகப்
பேணியிந்நாட்டுக் குழைத்தவரும்

மனித வர்க்கத்து மாணிக்கமாய்
வந்தபுருஷன் இவன் எனவே
மகாத்மா காந்திபுகழ்ந்துவரும்
மாசற்ற வீரமகன் நேரு

இருபத்தைந்தாண்டுகள் போராட்டம்
இதிலே பத்தாண்டு சிறைவாசம்
இருந்த வீட்டையும் தேசத்துக்கே
ஈந்த மணிவிளக்காகியவர்

தேசத்தின் செல்வமெனச் சொல்வதோ
திக்கெட்டும் புகழுமதைச் சொல்வதோ
ஈசன் கருணையெனச் சொல்வதோ
இந்திய நாட்டுப் பெருமையென்கோ

எல்லாம் சொல்லிப் புகழ்வதற்கு
ஏற்றதோர் வீரமகான் நேரு
நல்லான் மந்திரிவேலைதன்னை
நாட்டுக்காகவே ஏற்றுக்கொண்டார் 2490

சர்தார் வல்லபபாய் படேலும்
சாந்த ராஜேந்திரபாபுவுமே
தமிழ்நாட்டுக்குத் தனிப்பெருமை
தந்த சக்கரவர்த்தியுமே

ஆசாப் அலியும் நேதாஜி
அண்ணன் சரச்சந்திரபோசவர்கள்
ஆறுதலைவர்கள் மந்திரியாய்
அரிஜன தலைவர் ஜீவனராம்

சையத் அலிஸாகிர் ஷாபத்துக்கான்
தன்னை யிரு முஸ்லீம் பெரியோரை
தனிப்பட்ட முஸ்லீம்கள் மந்திரியாய்
தானுமதில் சேர்த்துக்கொண்டார்கள்

சீக்கியரில் பலதேவசிங்கம்
ஜான் மத்தாயி கிருஸ்தவர்க்கே
பாக்கியிருந்த ஓர் மந்திரிக்கு
பார்ஸீ வகுப்பு பாபாவும்

ஆகப்பனிரெண்டு மந்திரிமார்
ஆட்சி நடத்தப் புகுந்துவிட்டார்
ரகத்தில் இந்திய மக்கள் எல்லாம்
எங்களின் ஆட்சி என்று சொன்னார்

எல்லாக் கட்சிக்கும் பொதுவாக
இணைத்தார் மந்திரி சபைதனையே
நல்லார் காங்கிரஸ்காரரென
நாடெங்கும் பேசிப் புகழ்ந்திடவே

செப்டம்பர் மாதமிரண்டினிலே
தேசத்துச் செல்வர்கள் மந்திரியாய்
ஒப்பும் உவமையும் இல்லாத
உத்தமன் காந்தியைக் கண்டுகொண்டார்

காந்திக் கிழவரும் தானவரைக்
கட்டியணைத்துத் தழுவிக்கொண்டே
சாந்தம் தவழும் திருமுகத்தில்
சந்தோஷப் புன்னகை பூத்துவர

மாந்தர் துயரந்தன்னைத் தீர்க்க
மந்திரியான என் மாணிக்கங்காள்
சாந்தம் கடலில் பெரிதாகும்
சத்தியமெந்நாளும் வெற்றிதரும்

உங்கள் கடமையைச் செய்வதிலே
யோசனை செய்திடக் கூடாது
தங்கள் கடமையைச் செய்துவந்தே
தாயின் விலங்கை உடைத்திடுவீர்

பூர்ண சுதந்திரக் கோயிலுக்கே
பூட்டுச் சாவியும் பெற்றுவிட்டீர்
காரண காரியந் தவறுமல் அந்தக்
கதவும் திறக்க வழி செய்யுவீர்

என்றே காந்தி யெடுத்துரைத்து
இதயங் கனிந்துமே ஆசிசொல்லி
நன்றே விளைக நாட்டுக்கென்றே
நாவினில் தாரக நாமம் சொன்னர்

ஆட்டம் குண்டுபோட்டு ஊரழித்து
ஆளவெறிகொண்ட நாளையிலே
ஓட்டம் பிடிக்குருர் ஆங்கிலேயர்
உத்தமன் காந்திவழியாலே

கத்தியும் யுத்தியும் தோற்றதையா
சத்தியம் வெற்றியடைந்ததையா
உத்தமன் காந்தி துவக்கியபோர்
உலகுக்கு போதனை செய்யுதையா

நாட்டைக் கொடுத்துவிட்டே யொருவர்
நல்ல முறையுடன் சென்ற கதை
கேட்டதுமில்லை படித்ததில்லை
கீர்த்தியைக் கண்ணுலே பார்த்துவிட்டோம்

சத்திய போதனை செய்ததெல்லாம்
தைத்தது அன்னியர் நெஞ்சினிலே
குத்திக் குடைந்தது ஆத்மாவில்
கோயிலிருப்பவன் எழுந்துவிட்டான்

என்று நினைக்கிறோம் காந்தியினால்
இந்திய நாட்டுக்கு மட்டுமின்றி
இந்த உலகுக்கும் வந்த நன்மை
ஏராளமென்று எண்ணுகிறோம்

கத்திக்குமேலொரு ஈட்டியுண்டு
கம்புக்கு மேலொரு அம்புமுண்டு
சத்தியமார்க்கத்தின் மேலான
சங்கதியேதும் உலகில் இல்லை

ஜவஹர்லால் நேரு சிம்மாசனத்தில்
தானேயமர்ந்திட்ட நாளையிலே
ஜேய் ஹிந்த் முழங்குது வானொலியில்
செவி குளிர்ந்தது தேசமெல்லாம்

தேசத்தின் காரியம் தீவிரமாய்
திடலடியாக நடந்துவர
மாசற்ற மந்திரிமார்கள் எல்லாம்
மனோவேகமாக செய்துவர

அரசியல் நிர்ணயசபை சேர்த்தார்
அறிவில் மிகுந்தவர் தமைச் சேர்த்தார்
ஆளும் அரசியல் மேதாவி
ஆனபலரையும் சேர்த்தார்கள்

நாட்டுக்குச் சட்டம் வகுத்திடவும்
நன்மை சிறியோர்க்குச் செய்திடவும்
தேட்டுக்கு ஆசைபடைத்தவர்கள்
செல்வர்க்கும் ஏழைக்கும் ஒன்றாக

சட்டம்வகுக்கத் தினம் கூடி
சாது பிரசாத்தின் தலைமையிலே
பட்டம் பதவியை விட்ட பலர்
பாடுபட்டு வருங்காலத்திலே

## மகாத்மா காந்தியடிகளின் நவகாளி யாத்திரை
## 1946 செப்டம்பர் 16உ

தேசங்கள்யாவும் வணங்குமகான்
தெய்வத்தைப்போலப் பிறந்தமகான்
மாசற்ற அன்பு மதத்தையிங்கே
மறுபடி போதிக்க வந்த மகான்

சத்தியம் கொல்லாமை சொல்லிச்சொல்லி
சலித்துப்போன வயசினிலே
நித்தியகண்ட வயசினிலே
நின்றால் நடுங்கும் வயசினிலே

கையிலே பிடித்த கோல்நடுங்கும்
காலும் தரையில் நின்றால் நடுங்கும்
மெய்யிலே ஒட்டாத தோல் நடுங்கும்
வேதனைகேட்ட உடல் நடுங்கும்

தள்ளாடிக்கையில் தடியூன்றி
தலையும் நடுக்கும் பிராயத்திலே
பிள்ளைமழலை மொழிபோலே
பேச்சுக்குளறும் பிராயத்திலே

பெண்கள் அழுங்குரல் கேட்டதுமே
பிள்ளைகளின் குரல்கேட்டதுமே
கண்கள் புண்ணாகிக் கலங்கி நிற்கும்
காட்சியைக்கண்ணில் பார்த்ததுமே

சீறியெழுந்தார் காந்திமகான்
தேசந்திடுக்கிடச் சேதிசொன்னார்
மீறி எழுந்தது வீரமப்போ
வீறிட்டு ஓடிச்சுத் தள்ளாமை

கொல்லும்கொலையும் விழுந்துவரும்
குருக்ஷேத்திரத்தில் போவேனென்றார்
குருதி யாறு பெருக்கெடுத்த
கொலைக்களத்துக்குப் போவேனென்றார்

வெட்டி எறியுங் கொலைக்களத்தில்
வீட்டை எரிக்கும் புகைநடுவில்
சுட்டுக்கொளுத்தும் வெறியினிலே
சொக்கப்பானோலை நடுமரத்தில்

நான்போயிருந்திடப் போறேனென்றார்
நன்மைபுரிந்திடப் போறேனென்றார்
நவகாளிக்கு நான் போறேனென்று
நல்ல மகாத்மா சொல்லிவிட்டார்

கற்புக்கரசிகள் கண்ணகிகள்
கண்ணில் வடிந்திடும் கண்ணீரை
அற்புதமான தன் பொன்மொழியால்
ஆற்றித்துடைக்கவே போறேன் என்றார்

தாயே இறந்தாயோ என்று சொல்லித்
    தவிக்கும் பாலகர் நெஞ்சினிலே
தாயே இந்திய தேசமென்று
    தைரியஞ் சொல்லவே போறேன் நான்

தேவதை ஆகிய பெண்மணிகள்
    சிந்தை துயரந் தனை நீக்கி
சாபம்கொடுக்காதீர் தாய்மாரே
    தழைக்க விட்டிடும் நாடு இதை

கத்திக்கொலை செய்த சந்ததியை
    கண்ணீரைக் கொட்டித் துடைக்காதீர்
சுத்தி இருந்தும் இதைப்பார்த்த
    சோதரர் தம்மைச் சபிக்காதீர்

நெஞ்சினில் வர்மத்தை வைத்துக்கொண்டே
    நீரிந்த நாட்டை வெறுக்காதீர்
பஞ்சமும் நோயும் பெருகவென்றே
    பத்தினிப் பெண்கள் சபிக்காதீர்

பத்துத் தலையுள்ள ராவணனும்
    பத்தினி கண்ணீரில் செத்தொழிந்தான்
உத்தமபத்தினி கோபத்திலே
    ஓங்கி யெரிந்தது தென்மதுரை

மங்கையர் மானத்தைக் காக்காத
    மக்களிருந்திடும் தேசத்திலே
மண்மாரிபெய்யுமென்று சொல்வார்
    வானமும் பொய்த்திடும் என்று சொல்வார்

பத்தினிப் பெண்களின் கண்ணீரை
    பதறிவடித்திட்ட தேசத்திலே
பாலுங்குறையும் பசுக்குறையும்
    பசும்புல் தீப்பட்டெரியுமென்பார் 2530

புத்திதெரியாமல் செய்துவிட்டார்
    பொறையும் கோபத்தில் செய்துவிட்டார்
சத்தி உருவான தாய்மாரே
    சாதத்தைஊட்டிய தாய்மாரே

பாலைக்கொடுத்திட்ட தாய்மாரே
    பானைபிடித்திட்ட தாய்மாரே
சேலையணிந்திட்ட தாய்மாரே
    தெய்வமே எங்களின் தாய்மாரே

மண்மாரி பெய்திடச் செய்யாதீர்
மானம்பொழியவே செய்திடுவீர்
தண்மாறிப்போய்விடச் செய்யாதீர்
தர்மம் தழைக்கவே செய்திடுவீர்

உங்கள் வயிற்று எரிச்சலிலே
உலகம் கருகவே செய்யாதீர்
தங்கள் கண்ணீரைத் தரையில் சிந்தி
தரைவளம் கெட்டிடச் செய்யாதீர்

கருணையுருவான பெண்குலமே
காந்தியையும்பெற்ற பெண்குலமே
தருணமிதில் செய்த தப்பிதத்தை
தானே மறப்பீரென்று சொல்லி

நாட்டு மக்கள்செய்த கொடுமைக்கெல்லாம்
நானே மன்னிப்புக் கேட்டிடுவேன்
நவகாளிப் பெண்கள் கூட்டத்திலே
நானே மன்னிப்புக் கேட்டிடுவேன்

அன்பு மதத்தில் பிறந்தவர்கள்
அல்லாவே தெய்வமென்பவர்கள்
துன்பம் மனத்தால் நினைப்பாரோ ?
தூயமதத்தை யழிப்பாரோ

நாயன் உரைத்த மொழிகள் எல்லாம்
நன்மையை செய்யுங்கள் என்பதன்றோ
மாயவலைக்குள் விழுவாரோ
மக்களைமக்கள் வெறுப்பாரோ

குர்ஆன் என்னும் திருவேதம்
கொடுங்கொலை மார்க்கத்தைப் போதிக்குமோ
தர்மாதர்மம் தெரியாமல்
தவறிநடப்பது தான் மதமோ

என்றேபோதனை செய்திடுவேன்
இஸ்லாம் மக்கள் நடுவினிலே
நன்றேசெய்திடும் என்று சொல்லி
நானும் நடுவிலே வாழ்ந்திடுவேன் 2540

என்றுமொழி கேட்டுத் தேசமெல்லாம்
ஈதென்ன சங்கடம் என்றார்கள்
சின்னமத வெறிச்சண்டையிலே
செல்வது நல்லது இல்லையென்றார்

காட்டுவழியிலும் காட்டுவழி
கல்லும் முள்ளும் நிறைந்தவழி
நாட்டுவழி கெட்டுப் போகச்செய்த
நவகாளிப்பக்க ரோட்டுவழி

அந்த வழியிலே காந்திமகான்
அன்பர்துணை ஒன்றுமில்லாமல்
நொந்தமனிதன் துயர்தீர்க்கும்
நோக்கம் துணையாகக்கொண்டவராய்

நாளுக்கொரு ஊரில் நானிருப்பேன்
நடந்து நடந்தே வழிகடப்பேன்
வேளைக்கொரு வீட்டில் குடியிருப்பேன்
வேதனைச் சங்கீதம்தான் கேட்பேன்

விரதம் இதுஎனக் கொண்டுவிட்டார்
வீரன் மகாத்மா கிளம்பிவிட்டார்
பரதன்துறவு பழங்கதையாய்
பாரதவீரன் கிளம்பிவிட்டார்

முள்ளும்மொரும்பும் நிறைந்தவயல்
மொய்க்கும் கொசுக்கள் நிறைகாட்டில்
கல்லும் பயந்து நடுங்கிடவே
கடுமதவெறிகொண்டவர் நாட்டில்

போதிமரத்து நிழல்வீற்ற
புத்தன் புறப்பட்டுப்போனதுபோல்
ஆதியில் ராமச்சந்திரனும்
ஆரணியவாசம்போனதுபோல்

பாதுகைதன்னையும் தான்கழட்டி
பரதன்கையில் கொடுத்துவிட்டு
மோதிக்கிழிக்கிற முள்காட்டில்
முன்னர்நடந்த கதைபோலே

காந்திமகானும் தன்செருப்பை
கழட்டித்தூர வைத்துவிட்டு
சாந்திவிளக்கும் திருவடியாம்
தாமரைப்பாதம் தடம்படவே

ஆயிரத்தி தொளாயிரத்தி நாற்பத்தி
ஆறு செப்டம்பர் பதினறில்
மாயிரு ஞாலம் திகைப்புறவே
மன்னவன் காந்தி நடக்கலுற்ருர் 2550

வையகம் வாழ்ந்திட வாழ்ந்திடவே
வானமும் பெய்திட பெய்திடவே
தெய்வம் அருள்செய்க செய்திடவே
தேசம் தழைக்க தழைத்திடவே

இந்துமுஸ்லீம் ஒன்று என்ருக
இந்திய நாடென்றும் நன்ருக
வந்தவர் செய்தகபடேக
வானமும் பூமி புகழ்ந்திடவே

சாந்தம் தவழும் திருவடிகள்
சத்தியபோதகன் சேவடிகள்
மாந்தர் வணங்கும் திருவடிகள்
மகாத்துமா காந்தி சேவடிகள்

மண்ணில் பதிந்த இடத்திலெல்லாம்
வாழ்வு தழைக்க தழைக்கவென்றே
விண்ணவர் ஆசி மொழிந்தார்கள்
வெண்மலர் மாரி பொழிந்தார்கள்

காந்திமகாத்துமா இந்நாட்டில்
கலகம் நடந்த இடத்திலெல்லாம்
சாந்தம் விளைக விளைகவென்றே
தங்கள் திருவடி வைத்தாராம்

வந்தார் வந்தார் காந்திமகான்
வாய்மையுபதேசக் காந்தி வந்தார்
செந்தாமரையி னிதழ்போலே
செவ்விய சேவடி நோகவந்தார்

காந்திவந்தாரெனக் கேட்டதுமே
கலகம் செய்தவர் விட்டுவிட்டார்
சாந்தி வருவதைக் கண்டதுமே
சங்கடப்பட்டவர் துயர் மறந்தார்

அய்யன் முகத்தினைக் கண்டதுமே
அலறியழுதார் பெண்கள் எல்லாம்
மெய்யன்பர் தன்னிரு காதிலுமே
வேதனை சொல்லியழுதார்கள்

சொந்தத் தகப்பனைக் கண்டதுபோல்
சொல்லிச் சொல்லி விக்கி சோகப்பட்டார்
இந்தக் கொடுமைக்கு ஆளானேம்
என்ன செய்வோம் நாங்கள் என்ருர்கள்

சாந்த மகாத்துமா கண்களிலும்
சாதுசனங்களின் கண்களிலும்
பாந்தமில்லாத செயல்புரிந்த
பாவிகள் கண்ணிலும் கண்ணீராம் 2560

நாட்டைக்கொளுத்திய பகைத் தீயும்
நவகாளி மதவெறித் தீயும்
வீட்டைக்கொளுத்திய பகைத்தீயும்
விழுந்த கண்ணீரில் கழுவிவிட்டார்

கொல்லுக் கொலைசெய்த பேர்வழிகள்
குழந்தைபோல அழுதுநின்றார்
தில்லுமுல்லுச்செய்த பேர்கள் எல்லாம்
தெய்வத்தின்முன்னே பணிந்துநின்றார்

நாளைக்கொரு ஊரில் தானிருப்பார்
நாட்டுவழிகள் நடந்திடுவார்
வேளைக்கொரு வீட்டில் கையேந்தி
விரும்பித் தந்ததைப் புசித்திடுவார்

நொந்துகிடந்திடும் பேர்களுக்கும்
நோகச்செய்திட்ட பேர்களுக்கும்
தந்தைக்கிருமக்கள் தானாகும்
தம்பியும் அண்ணன் சமமென்றே

சாந்தி மகாத்மா தான் நடந்தார்
சத்தியபோதகன் வழி நடந்தார்
ஏந்தியெடுக்கும் திருவடிகள்
இரண்டும் புண்ணாக வழிநடந்தார்

மாடாடுதன்னை யிழந்தவர்கள்
மைந்தரைத் தாயை யிழந்தவர்கள்
வீடு வீடு தேடிச்சென்று அவர்
வேதனைகேட்டுக் கண்ணீர் துடைப்பார்

அப்பா நடந்தது நடந்திட்டது
அண்ணன் தம்பியாக வாழ்ந்திருங்கள்
தப்பான காரியம் செய்யாதீர்
தாயாம் பூமி பொறுக்காது

போனதுபோகட்டும் இனிநீங்கள்
புத்தியுடன் வாழு மென்றுசொல்லி
ஆனவரைக்கும் அவர் நடுவில்
அன்பையுபதேசம் செய்திடுவார்

இஸ்லாமானவர் எல்லோரும்
என்னையன் காந்தியைக் கண்டதுமே
அஸ்லாமு அலைக்கும் என்றுசொல்லி
அன்பு மழை விழி நீர்சொரிந்தார்

நாங்கள் புரிந்த கொடுமையெல்லாம்
நஞ்செனப்பாய்ந்தது நெஞ்சினிலே
நீங்களெம்மை தடுத்தாட் கொள்ளுவீர்
நெஞ்சமறியாமல் செய்தமென்றார்

முல்லா மவுல்வி லெப்பைகளும்
முஸ்லீம் பள்ளிக் குருக்களும்தான்
அல்லாபேரிலே அன்புடையோர்
அத்தனைபேரும் காந்தியிடம்

அன்புக்கிரங்கி யழுதார்கள்
அய்யனே வாருங்கள் என்றார்கள்
இன்பத்தை வேண்டித் தொழுதார்கள்
எங்களை மன்னிக்க வேண்டுமென்றார்

தோட்டத்து நாரங்கிக் காய்பறித்து
தூயவர் உண்ணக் கொடுத்தார்கள்
கூட்டத்தில் கலந்துகொண்டார்கள்
குர் ஆன் படிக்கக் கேட்டார்கள்

பள்ளியில்தங்க இடம் கொடுத்தார்
பாலும்பழமும் பரிந்தளித்தார்
உள்ளே அடைத்துக்கிடந்த கோஷா
உத்தமிமார்களும் காணவந்தார்

அன்புக்கு மேலொரு சாதியில்லை
அன்புக்கு மேலோர் மதமுமில்லை
அன்புக்கு லோகம் அடங்குமென்றே
அய்யனின் கண்முன் நடந்தார்கள்

இந்திய மக்களின் வீடுகளை
எங்களின் வீடென்று காத்திடுவோம்
சிந்திய ரத்தப்பழி தீர
சேவைகள் செய்து பார்ப்பமென்றார்

தண்டிக்கு யாத்திரை சென்றபோது
தன்னுடன் தேசத்தைக் கூட்டிச்சென்றார்
ஒண்டியாய் யாத்திரை இங்குவந்தார்
ஒருவரையும் கூட்டி வரவில்லையாம்

கால் கைபிடிக்கவும் கஞ்சிவைக்க
கண்முகம் பார்த்துக் களைதீர்க்க
சால்வை யெடுத்தவர் மேல்போட
தர்மத்தைக் காக்கத் துணையான

கஸ்தூரிபாயையுமே இழந்து
கையான தேசாயும் காலமாகி
ஒஸ்தியென்றே நித்தம் கொண்டாடும்
உற்றதுணை யாரும் இல்லாமல்

கைப்பொங்கல் பொங்கியே தின்றிடுவேன்
கால்கள் கடுக்க நடந்திடுவேன்
மெய்ப்பந்துவாகவே ஏற்றவர்கள்
வீட்டுவெளியில் படுத்திடுவேன்

என்றேவந்த மகாத்மாவை
இதயத்திலேவைத்துப் பூசைசெய்தார்
ஒன்றே தெய்வம் நம் நாட்டினிலே
உம்மைப் படைத்தது என்றார்கள்

அய்யன் திருமுக நோக்கத்துக்கே
ஆயிரங்கோடிப் படைதிரளும்
பைய ஒரு வார்த்தை சொல்லிவிட்டால்
பாரெங்கும் சூரைகளாடிவிடும்

நவகாளிப்போரை நசுக்குமென்றால்
நாடுதிரளும் உலகம்வரும்
அவகேட்டுக்குப்பதில் செய்யுமென்றால்
ஆயுதந்தேடி எடுத்துக்கொள்ளும்

இந்த உலகமே காந்திமகான்
ஏவலுக்கு நின்று காத்திருக்க
தன் திருமேனி தடுமாற
தள்ளாடி நடையாய் நடப்பாரோ !

சண்டை வெறிகொண்ட கூட்டத்திலே
சனத்திரள் கூட்டிச் சென்றுவிட்டால்
மண்டி யெறியும் பகைமையென்றே
மகாத்துமாமட்டும் போனாரோ

இரக்கம் ஜயித்திட வேண்டுமென்றே
என்னையன்மட்டும் நடந்தாரோ
கருணைசெயித்தது பாருமென்றே
காட்டுவழியும் நடந்தாரோ

சாந்தம்ஜெயித்தது பாருமென்றே
சண்டைத்தலத்தில் புகுந்தாரோ
மாந்தர் மிருகங்களில்லையென்றே
மானிலம்காண நடந்தாரோ

சத்திய சோதனை காட்டுதற்கே
சாந்த மகாத்மா வந்தாரோ
நித்தியமானது அன்பு என்ற
நிஜத்தைச் சொல்லவே வந்தாரோ

காரணம் தன்னை யறிவதென்றால்
கைப் பிடிக்கும் பேனு போதாது
கருத்தில் நினைப்பது கோடியுண்டு
காகிதந்தன்னிலே ஓடவில்லை

எங்கள் மகாத்துமா காந்திமகான்
இந்தப் புறத்தில் நடந்துவர
எல்லைப்புற நாட்டு காந்திமகான்
இன்னொரு பக்கம் நடந்துவந்தார் 2590

பாடலிபுத்திரப் பக்கத்திலே
படுகொலைப் பாதகம் கேட்டுவிட்டு
பட்டாணிக் காந்தி பெரியவரும்
பாதங்கள் நோக நடந்துவந்தார்

கொல்லுக்கொலைகளைச் செய்தவர்கள்
கும்பிட்டு நின்றார் பாட்சாவை
தில்லுமுல்லுத்தனம் செய்தவர்கள்
திகைத்துவிட்டாரவரைக் கண்டே

ஏழடி உயரந்தானிருப்பார்
எம்பியே பார்க்கணும் திருமுகத்தை
இரதத்தில் சாமி வருவதுபோல்
எதிரில் வருவார் எல்லைக் காந்தி

வீதியில் அய்யன் நடந்துவந்தால்
வெள்ளிரதம்போலத் தோன்றிடுவார்
சாதிப்பட்டாணித்தலைவர் வந்தால்
தங்கரதம்போலத் தோணிடுமாம்

வடமேற்கெல்லைப்புறத்தினிலே
வாழும் பட்டாணி கூட்டத்திலே
வந்தார் எல்லைப்புற காந்தி
வாய்மை தவறாத தூயவராம்

வெட்டொன்று துண்டொன்று போட்டுவிடும்
வீரப்பட்டாணியர் கூட்டத்திலே
கட்டுதிட்டம் எதும் பார்க்காத
காளைகள் போன்ற வகுப்பினிலே

மானம் உயிருக்குமேலாக
மதிக்கும் பட்டாணிக் கூட்டத்திலே
ஈனப்படுத்திய தந்தையையும்
எதிர்க்கும் சாதிமரபினிலே

வந்தவர் பாட்சா கான் மிகவும்
வல்லமை வாய்ந்த புயபலவான்
தன் தலைபோனாலும் பொய்மொழியை
தானுரைக்காத சத்தியவான்

இங்கிலீஷ் ஆட்சிக் கொடுமைதன்னை
எதிர்த்துப் போரிடும் நாளையிலே
எங்கள் மகாத்மா காந்திவழி
இறங்கிவந்தார் பாட்சாகான்

அப்துல் கபார்கானென்று சொன்னால்
அலறிநடுங்கும் சீமையெல்லாம்
அந்த புயபல வீரனுமே
அஹிம்சாமூர்த்தி வழியில் வந்தார்

துப்பாக்கி கத்திச் சண்டையிலே
தோற்றிடும் மனிதஜாதியென்றே
தூயவழியிது அன்புவழி
தொல்லைவிளைக்காத நல்லவழி

செஞ்சட்டைத் தொண்டர் படையமைத்து
தெய்வத்தின் சேவகர் பேரும்வைத்து
நஞ்சுக்கு மேலான ஹிம்சைவழி
நல்லது இல்லையென் றவர்க்குரைத்து

பார்த்தால் பயப்படும் பேரையெல்லாம்
பசுவைப் போலாக ஆக்கிவைத்த
பாட்சா கானை இத்தேசமெல்லாம்
பகர்ந்திடும் எல்லைகாந்தியென்றே

அந்த மகானும் இஸ்லாத்தின்
அறநெறிகள் அறிந்தமகான்
நொந்த முசாபரைக் காப்பதையே
நோக்க மாய்க்கொண்ட மகராஜன்

காந்திமகான் கண்ணின் முன்னாலே
காந்தியுயிர் வாழுங்காலத்திலே
சாந்தத்தில் அவர்க்கு சமமெனவே
தாரணி மெச்சிடும் புண்ணியவான்

பாட்னா நாட்டுப்புறந்தனிலே
பாதங்கள் நோக நடந்துவந்து
கேட்டுத் துயரத்தை ஆற்றிவைத்து
கெடுமதி காரர்க்குப் புத்திசொல்லி

இந்துமதத்தின் உண்மையெல்லாம்
எடுத்துச் சொல்லியே போதனைசெய்
திந்தியர் ஆற்றிய பாவத்துக்கே
இரக்கப்படுமென புத்திசொல்லி

கஷ்டத்துக்குள்ளான பேர்களையும்
கடுங்கொலைக்காளான குடும்பங்களை
நஷ்டத்துக்காளான பேர்களையும்
நஞ்சினையூட்டின பேர்களையும்

சந்தித்துப் பேசியே இந்துமுஸ்லீம்
சமரச மார்க்கத்தைச் சொல்லிக்கொண்டு
தன்திருப்பாதம் தரைமேலே
சாந்தம் விளைக்க நடந்துவந்தார்

பாதங்கள் நோக நடந்துவரும்
பாட்சா காந்தியும் பாட்னாவில்
மாரத வீரரை உண்டாக்கும்
மகாத்துமா காந்தியை சந்திக்கவே

எங்கள் மகாத்மா காந்தியுமே
எல்லைப்புறத்துக் காந்தியுமே
தங்களிரு உடம்பொன்றாகத்
தழுவிக்கொண்டே காக்ஷிதந்தார்

இந்து முஸ்லீமும் ஈருடலாய்
இதயமிரண்டும் ஒன்றாகி
வந்து தழுவிய காட்சியிதை
வையமும் வானமும் கண்டதையா

கல்லைக்கனிந்து உருகச் செய்யும்
காருண்யமூர்த்தி மகாத்மாவும்
எல்லைப்புறத்து மகாத்மாவும்
எந்தெந்த நாளைக்கும் வாழ்ந்திடவே

## இடைக்கால சர்க்காரில் லீக் சேருதல்

தேசமெல்லாம் மக்கள் சிரித்தமுகம்
சிந்தனையாவும் நம்தேசமென்றே
நேசமும் அன்பும் உடையவராய்
நேருவின் ஆட்சிபுகழ்ந்துவர

யோசனை செய்தது முஸ்லீம் லீக்
உள்ளே புகுந்திடவேண்டுமென்றே
மோசம் வருகுமே விட்டுவிட்டால்
முஸ்லீம் லீக்கெண்ணம் தோற்றுவிடும்

என்று நினைத்தே வைச்ராய்க்கு
எழுதிவிட்டார் ஜின்னுவும்
இடைக்காலத்துச் சர்க்காரில்
இருக்க சம்மதமென்றேதான்

மந்திரிமார் ஐந்துபேர்களையே
மாநில ஆட்சியில் சேர்ப்பது என்று
வைச்ராய் வேவலும் சொல்லிடவே
வாக்கொன்று கேட்டது காங்கிரசு

உங்கள் குறுக்கீடு இல்லையென்றே
உறுதியும் கேட்டோம் தந்துவிட்டீர்
எங்களுடன் மன ஒத்துமையாய்
இருக்கவேண்டுமே லீகு என்றூர்

வேவல்துரையும் ஜின்னுவிடத்தில்
விஷயத்தை விளக்கிப் பேசிவிட்டே
காவல் முறையிலே உங்களுடன்
கலந்து உழைக்கும் லீக்கெனவே

இடைக்காலத்துச் சர்க்காரை
இந்திய சுதந்திரக் காங்கிரசும்
முஸ்லீம்லீக்கையும் சேர்த்துக்கொண்டு
முன்னின்று நடத்தலானூர்கள் 2620

ஷாபத் அகமத்கான் சரத்சந்திரர்
சையத் அலிஸாகீர் வில்கிநிற்க
லியாகத் அலிகான் சுந்திரிகார்
அப்துல் ரப் நிஷ்டார் மூவரையும்

கஸ்ஞபர் அலிகானென்றுமே
கணக்கில் நால்வரைத் தந்துவிட்டு
முஸ்லீம் லீக்கிலே மந்திரியாய்
மொண்டல் என்பாரையும் கூட்டிவந்தார்

வகுப்புமதத்தின் முறையினிலே
வகுத்த கட்சியே முஸ்லீம்லீக்
மண்டல் என்பாரோ வங்காளம்
வாழும் ஹரிஜன ஹிந்துஐயா

மகம்மதியர்மத லீக்கினிலே
மண்டலெச் சேர்த்ததைப் பார்க்கிறப்போ
மிகவும் சந்தேகம் வந்தாலும்
மேலொன்றும் பேச்சுகள் பேசவில்லே

மந்திரிமார்கள் பதிஞலாய்
மாநில ஆட்சி நடக்குறப்போ
தந்தலேயாட்டம் போடவுமே
தயார் செய்தார் லீக்குடையோர்

நேருவைச் சற்று மதிக்காமல்
நீரெங்கள் தலேவர் அல்லவென்ருர்
ஊருக்கு வந்திட்ட வைசிராயே
உள்ளபடிக் கித்தலேவர் என்ருர்

கூடியே காரியம் செய்வமென்ருல்
கூப்பிட்ட மீட்டிங்கில் சேரார்கள்
நாடியே வந்து கேட்பதற்கோ
நான் வேறு நீ வேறு என்பார்கள்

லியாகத்தலிகானென்பவரோ
லேசான பேர்வழியில்லேயையா
வியாபகம் ரொம்ப உள்ளவராம்
மெத்தவும் புத்திபடைத்தவராம்

சட்டமும் திட்டமும் நன்கறிவார்
சாட்டையடிபோலப் பேசிடுவார்
கெட்ட மதச் சண்டை காரணத்தால்
கிட்டவில்லே அவர் சேவையுமே

இந்தப்படிக்குமே மந்திரிசபை
இரண்டுங்கெட்டாஞய் திண்டாட
எந்தத் தொழிலுக்கும் வைசிராயை
எதிர்பார்த்துக்கொண்டு இருக்கையிலே 2630

வந்தது பாரதபூமியிதன்
வாழ்வைக்கெடுக்கும் மதப்போரும்
நொந்தது காங்கிரஸ்காரர் மனம்
நோக்கும் திசையெங்கும் கலகம் கண்டே

ஆகஸ்டுபோரில் எழுந்தஜனம்
அத்தனைபேரை யடக்கியவர்
வாகற்ற கொடுமை நடக்கக்கண்டும்
வாயைமூடி யிருந்தார்கள்

ஜப்பான் நாட்டை அடக்கியவர்
ஜர்மனி யானைப் பிடித்தவர்கள்
இப்பாடிங்கே நடக்கிறப்போ
என்ன எனக்கென்று சொன்னார்கள்

வெள்ளையர் ஆட்சி நடக்குதிங்கே
வேவல்துரையும் இருந்திடுறார்
கொள்ளை கொலைகள் விழுகு திங்கே
குந்தியிருக்குது ராசாங்கம்

ஏனென்று கேட்கவும் கேட்டார்கள்
இந்தாபார் பட்டாளம் என்றார்கள்
தானொண்ணும் செய்ய நினைக்காமல்
தப்பு சாலிசாப்பு சொன்னார்கள்

என்ன இருந்தாலும் டெல்லியிலே
இருக்குங் காங்கிரஸ் மந்திரிகள்
எழுதிவிட்டார் சீமைக்குமே
இந்தக் கொடுமையைச் சொல்லிவிட்டார்

எங்களையும் மெம்பராக்கிவைத்தீர்
இல்லை யதிகாரம் எங்களிடம்
தங்களது நாட்டு வைசிராயோ
தானொன்றும் செய்யாமலிருக்கின்றார்

முஸ்லீம் லீக்கு மந்திரிமார்
முதன்மையானவர் ஐந்துபேரும்
எம்முடன் சேர இணங்கவில்லை
எதிரிடையாக இருந்திடுறார்

மோசம் விளையும் மென்மேலே
மூர்க்கம் பெருகும் நாட்டினிலே
நாசம் விளையும் தேசத்துக்கே
நாடி ஒரு செயல் செய்யாட்டி

இம்மென்று நாங்கள் கிளம்பிவிட்டால்
ஏதும் தடை செய்ய முடியாது
சும்மாயிருந்திட மாட்டோம் நாம்
சொன்னோம் சொன்னோம் என்றிடவே

ஆங்கிலநாட்டு மந்திரியாம்
ஆட்லிதுரையும் பார்த்துவிட்டே
பாங்கில்லை வேவல்துரையாட்சி
படுகொலைகள் நடக்குதென்றே

வேவல் துரையையும் நல்லவரே
வீட்டுக்கு வந்திடும் என்றுசொல்லி
காவலும் கட்டும் தெரிந்தவனை
கப்பல் படைக்குத் தலைவன் தன்னை

மவுண்ட்பாட்டன் என்னும் பேருடைய
மன்னவர் சித்தப்பன் தன்னையிங்கே
வைசிராயாகவே போகச்சொல்லி
வழியனுப்பியும் வைத்துவிட்டார்

## மவுண்ட்பாட்டன் வருகை

வந்தாரையா புதிய வைசிராய்
வாசகமொன்றினைச் சொல்லிக்கொண்டே
எந்த விதத்திலும் சீக்கிரமாய்
இந்தியருக்கு சுதந்திரமென்றார்

வந்தவரத்திலே தேசமிதன்
வாய்மை சொல்லும் தலைவரெல்லாம்
சந்திப்புத் தரவே வாருமென்று
தந்திகளையும் அடித்துவிட்டார்

காந்திமகானையும் காணவேண்டி
காயிதமொன்று அனுப்பிவைத்தார்
சாந்தமகானும் நவகாளி
சத்தியசோதனைவிட்டு வந்தார்

அய்ந்தாரேழு தினங்கள் மட்டும்
அய்யனுடன் கூடிப் பேசிவந்தார்
அப்பப்போ சீமைக்குச் சேதிகளும்
அனுப்பி அனுப்பிக்கொண்டிருந்தார்

முஸ்லீம் லீக்குத்தலைவர் ஆன
முகம்மதலி ஜின்னு தம்மையுமே
இஸ்லாம் லீக்கரின் எண்ணமதை
எடுத்துப்பேச அழைப்புவிட்டார்

கணக்கு முடிக்கவே வந்தவர்போல்
காரியம் யாவும் வெகுவிரைவாய்
சுணக்கம் சற்றேனுமில்லாமல்
சுருசுருப்பாக முடித்துக்கொண்டார்

காந்திமகானும் முஸ்லீம் லீக்
காயிதே ஆஜமும் சேர்ந்து ஒரு
காகிதந்தன்னிலே ஒப்பமிட்டு
கலக நிறுத்த அறிக்கைவிட்டார் 2650

எல்லோர் தன்னையும் பேட்டி கண்டார்
இந்தியாச் சேதியறிந்துகொண்டார்
நல்லாளுகிய வீரன் என
நாடெங்கும் பேச நடந்துவந்தார்

இந்துமதத்தின் கருத்தறிந்தார்
இஸ்லாம் லீக்குக் கருத்தறிந்தார்
எல்லோருக்கும் பொதுவாக
இருக்கும் காங்கிரஸ் தனையறிந்தார்

நாப்பத்தெட்டாண்டிலே ஜூன்மாசம்
நாட்டைவிட்டுப் போவமென்பதுபோய்
நாற்பத்திஏழா கஸ்டிலேயே
நாட்டைவிட்டுப் போவோமென்று சொன்னர்

தேசநிலவரங்கண்டுவிட்டார்
தீரவிசாரித்துக்கொண்டுவிட்டார்
ஓரம் எதுவொண்ணுமில்லாமல்
உள்ளதை உள்ளபடிக்கறிந்தார்

சீமைக்கொருதரம் போய் திரும்பி
சேதியை நன்ருகச் சொல்லிவிட்டு
பூமியிதுக்கொரு புதுத்திட்டத்தை
பொக்குனு கொண்டுவருவோமென்றே

ஜூன்மாதம் மூணும் தேதியிலே
சொன்ஞரே இந்த திட்டமதை
ஆன்மாதுடித்துக் காந்திமகான்
அலறிவிழுந்திடச் சொன்ஞரே

காங்கிரஸ் தன்னேயும் முன்னுலே
கலந்துகொண்டே திட்டம் சொன்னுர்
முஸ்லீம் லீக்கையும் முன்னுலே
முகதாவில்கண்டு திட்டம் சொன்னுர்

## இந்தியா இரண்டு துண்டாதல்

இந்திய யூனியன் பாக்கிஸ்தானம்
என்றுஇரண்டுதுண் டாகவே தான்
இந்தியநாட்டைப் பிளந்திடுவோம்
என்று உரைத்தார் மவுண்ட்பாட்டன்

பஞ்சாப்பில் உள்ள முஸ்லீமும்
வங்காளத்தின் முஸ்லீமும்
பட்டாணியர்கள் வடமேற்கில்
பலம் பொருந்திய சிந்துவிலும்

உள்ள முஸல்மான் ஆனவர்கள்
ஒன்ருய்கூடிய சர்க்காராய்
வெள்ளேயராதிக்கந்தன்னேவிட்டு
விரைவில் தாபிக்க விட்டுவிட்டார் 2660

வங்காளந்தன்னே யிரண்டாக்கி
வகுப்புவாரி பிரித்துவிட்டு
தங்களுக்கு இஷ்டமானபடி
தனித்துப்போக விட்டிடுவோம்

பாதிபிரித்தந்த முஸ்லீம்கள்
பாகிஸ்தானில் சேர்ந்திடட்டும்
பாக்கியிருந்திடும் இந்தியர்கள்
பாரததேசத்தில் சேர்ந்திடட்டும்

கிழக்கு மேற்குப் பகுதியினில்
கிடந்துவாழு மிந்துமுஸ்லீம்
வழக்கம்போலவே அந்நாட்டில்
வாழும் பிரஜைகளாகிடட்டும்

இந்த விதத்திலே சிந்துவிலும்
இன்னும் பஞ்சாப்பு சீமையிலும்
எல்லே பிரித்துமே கல்லுநட்டு
இரண்டாய் ஆக்கிவிடுவோமென்ருர்

சுதந்திர சமஸ்தானமெல்லாம்
தோன்றிய விதத்தில் நடந்திடலாம்
இதந்தரும் இதிலே சேருமென்று
எங்களால் சொல்லமுடியாது

ஆனாலுமிந்த தேசத்திலே
அன்னியனை நம்பி வாழாமல்
தானாகவே இரண்டு சர்க்கார்
தன்னிலெதிலேனும் சேரவென்றார்

இந்திய யூனியன் தன்னரசாய்
இன்னொரு பாகிஸ்தான் தன்னரசாய்
இரண்டு அரசாய் ஆண்டிடுவீர்
எங்கள் மன்னரின் கீழரசாய்

குடியேற்ற நாட்டு அந்தஸ்துக்குள்
கொஞ்சகாலம் மட்டும் இருந்திடுவீர்
அடிவலுவாகிய சட்ட திட்டம்
அரசியல் நிர்ணயம் செய்துகொண்டு

ஊன்றி உட்கார்ந்து வலுப்பெற்றதும்
உங்களால் ஆளத் திறம்வந்ததும்
தோன்றியவண்ணம் சுதந்திரமாய்
தூய்மைப் பிரகடனம் செய்திடுவீர்

பூர்ணசுதந்திரம் தந்துவிடப்
போட்டதோர் தேதிக்கு முன்னாலே
ஆர்வமுடன் நீங்கள் ஆளுதற்கே
ஆகஸ்டிலே வெளியேறுகின்றோம்

எங்களின் நாட்டுச் சிப்பாய்களையும்
ஏற்றிவிடுகிறோம் கப்பலிலே
எங்களின் தேசத்து கவர்னர்களை
ஏற்றிவிடுகிறோம் கப்பலிலே

உங்களின் தேசப் பொறுப்பையெல்லாம்
உங்களின் கையிலே தந்திடுறோம்
உங்களோடு கூட வியாபார
ஒப்பந்தம் ஒன்றையும் செய்திடுறோம்

என்றேதிட்டம் எடுத்துச்சொன்னார்
ஏற்றுக்கொண்டது கட்சியெல்லாம்
ஒன்றேயாகிய இந்தியாவும்
உடைபட்டுப்போனது அந்நாளில்

திட்டம்இதுதன்னைக் கேட்டதுமே
திடுக்கிட்டுப்போனார் பாதிப்பெயர்
வெட்டுவிழுந்ததே பாரதத்தில்
வீணாகிப்போனதே தேசமென்றார்

பதினெட்டுலட்சம் மைல்பரந்த
பாரததேசம் வெட்டுப்பட்டு
விதிகெட்டு மதவெறிச்சண்டையினால்
வீணாய்போவதைக் கண்டார்கள்

அன்னியன்வந்து குறுக்கிட்டதால்
ஆராய்ந்துபார்க்கவும் நேரமின்றி
அண்ணனும்தம்பியும் சண்டையிட்டு
அன்னையின்மேனி வடுப்படுதே

பரங்கிப்பூப்போலே இருந்த இந்த
பாரததேசம் பரங்கியரால்
குரங்குகையில் பட்டபூப்போலே
கோலமிழந்ததைக் கண்டார்கள்

காலம் கணக்குத்தெரியாத
காலமுதற்கொண்டு கௌரவமாய்
ஞாலம்புகழ்ந்திட்ட இந்தியத்தாய்
நாடுஇரண்டாய் ஆனதுவே

சேதுஹிமாசலம் எங்களது
தேசத்தினெல்லைகள் என்றதுபோய்
பாதிவழிதனை இந்தியாவின்
பகரும்எல்லை என்றாகியதே

திருவாச்சிபோட்ட சிலைபோலே
சிங்காரமாக இருந்ததுபோய்
உருவுங்குலைந்து திருவாச்சி
உடைந்து விழுந்ததுபோலாச்சே

அஞ்சில் ஒருபங்கு பூமியிதே
அகிலஉலகத்தில் என்றுசொன்ன
நெஞ்சின்கருவம் பொடியாச்சே
நிலைகெட்டுப்போனோமே என்றார்கள்

பஞ்சநதிகளை சிந்துவையும்
பாகம் பிரித்துக்கலானோமே
வஞ்சமதவெறி காரணமாய்
வாழ்ந்தவீட்டைப் பிரித்தோமே

தோகைவிரித்த மயில்போலே
தோன்றுமிந்திய தேசத்தையே
பாகையிழந்த தலைபோலே
பாகம் பிரித்துக்கொண்டோமே

நாற்பத்தி அஞ்சரைக் கோடிமக்கள்
நாட்டுக்கு மன்னர்கள் என்று எண்ணி
நம்மை எதிர்க்க நினைத்தவர்கள்
நடுங்கிவந்தது பொய்யாச்சே

பாவிகள் கண்பட்டு பட்டு இன்று
பத்துக்கோடிப் பேர்கள் பாகிஸ்தானும்
பாக்கி முப்பத்தி அஞ்சரைதான்
பாரததேசமென்றோமே

கட்டிஆள எண்ணிச் சொல்லவில்லை
காசினியாட்சியை எண்ணவில்லை
ஒட்டியிருந்த உறவு எல்லாம்
ஊரார்கண்பட்டு பாழாச்சே

காந்திமகானுமிதைக் கேட்டுக்
கலங்கிவிட்டார் ஆனாலும்
சாந்தமகானுமித் திட்டத்துக்கு
சம்மதமென்று உரைத்துவிட்டார்

சம்மதஞ்சொல்லிய காரணத்தை
தானேசிந்தித்துப் பார்த்துவந்தால்
வெம்மதஇருள் இந்தநாட்டைவிட்டு
விலகுவதெப்போ விடிவதெப்போ

வெள்ளையராட்சி விலகுவதால்
வீட்டையும் நம்மிடம் தருவதனால்
உள்ளபடிக்கிதை ஒப்புக்கொண்டு
ஒத்துமைகோல வழிபார்ப்போம்

இங்கிலீசாட்சி விலகுவதால்
எங்கள் அய்யன் இதை ஒப்புக்கொண்டார்
தங்களின் ஆட்சி கிடைப்பதனால்
தாடாளன் இதை ஒப்புக்கொண்டார்

இத்தனை கேட்டுக்கும் காரணமாய்
இருந்த மதவெறி தீராதோ
இந்தியா தேசமுழுதுமொன்றே
என்றிடும் நாள்களும் வாராதோ

இந்துவும் முஸ்லீமும் ஒன்று என்றே
இருந்து வாழ வழிகாணமட்டும்
எந்தனுடம்பில் உழைக்க வலு ஈசனே
தாருமென்றய்யன் சொன்னார்

சுதந்திரமானது நாடு என்றே
துள்ளிக்குதித்து மகிழாமல்
இதந்தருமார்க்க மிந்நாட்டுக்கிந்த
இந்துமுஸ்லீம் உறவென்றுரைத்தார்

என்றே காந்தி யெடுத்துரைத்து
இரவுபகல்அதை எண்ணி எண்ணி
ஒன்றே இந்திய மக்கள் என
உண்டாக்கு மார்க்கத்தை தேடுகிறார்

தேசத்தில் வாழும் ஜனங்களுக்கே
சேதிதினம்தினம் சொல்லுகிறார்
மாசற்றபிரார்த்தனை மண்டபத்தில்
மகாத்துமாகாந்தி சொல்லுகிறார்

அரிஜனங்களை கொடுமை செய்தால்
அன்னத்திலே பின்னம் செய்துவந்தால்
வரிசையுடன் வாழச் செய்யாமல்
வம்புகள் தும்புகள் செய்துவந்தால்

ஏழை முதலாளி பேதமிங்கு
இருந்தால் நெஞ்சில் இரக்கமின்றி
வாழவழியும் வகுக்காமல்
வாயை மூடி இருந்துவந்தால்

சாதிக் கொடுமைகள் செய்தாலும்
சத்தியம்மாறி நடந்தாலும்
நீதிக்குமீறி நடந்தாலும்
நிலைக்காது இந்தத் தேசமென்றார்

இந்தக் கொடுமைதனைத் தீர்க்க
எல்லோரும் ஒத்து வாழ்ந்திடுங்கள்
என்றே காந்திமகாத்மாவும்
இதயம் புண்ணாகிச் சொல்லுகிறார்

அய்யன் அருளிடும் பொன்மொழிகள்
அத்தனையும் நாட்டு நன்மைக்கென்றே
செய்ய விரைந்து வருவீரே
செகத்தினில் உள்ள இந்தியரே

## 1947-ம் ஹூ ஆகஸ்டு-மீ 15-வ இந்தியா தேசம் சுதந்திரமடைதல்

வந்தேமாதரமென்று வணங்கவே
வாக்கைக் கொடுத்தவள்—தாய்
நந்தேசம் இது என்று வணங்கவே
நாக்கைக் கொடுத்தவள்—தாய்

கன்னித் தமிழ்மொழி சொன்ன முனிவனை
காசினிக்கே தந்த—தாய்
இன்னும் பலகவி மாலைகள் சூடும்
இளமை படைத்தவள் தாய்

அன்னை நலந்திகழ் அன்னை நலம்புரி
அன்னை விடுதலை யாயினள்
ஆடிவெள்ளிதனில் நாடிய செல்வம்கை
கூடிவிடுதலையாயினள்

இந்தியயூனியன் பாகிஸ்தானென்று
இரண்டு பெரும் நாடாய்
சந்திரசூரியன் போலவே இந்தியத்
தாரணி வாழ்ந்திடவே

பத்துமதிசுமந்து பெத்துப்பெருமையுடன்
பார்த்து மகிழ்ந்தவள் தாய்—இவள்
எத்தனை எத்தனை, தலைமுறையாகவோ
எங்களைத்தாங்கிடும் தாய்

மஞ்சனநீராட்டி அஞ்சனமை தீட்டிக்
கொஞ்சிமகிழுவள் தாய்—இவள்
விஞ்சை நதிகளும்வியனுறும் காக்ஷியும்
விதவிதமாய்த் தரும்தாய்

வெள்ளியில் காப்பிட்டு தங்க வளையலிட்டு
அள்ளி முத்தந்தரும் தாய்—இவள்
வெள்ளிச்சுரங்கமும் தங்கக்கனிகளும்
வெண்முத்தமும் தரும்தாய்

பட்டும் பட்டாடையும் கட்டிப்பணி யணிந்து
பொட்டுத்திருத்துவள் தாய்—இவள்
கட்டத்துணி நெய்ய காட்டில் பருத்தியும்
பட்டும் கொடுத்திடும் தாய்

தொட்டிலில் தாலாட்டிகட்டியணைத்தமுதம்
சுவைக்கக்கொடுப்பவள் தாய்—இவள்
கொட்டிலில் ஆநிரை நின்று கறந்திடக்
கொடுத்திடும் பாரதத்தாய்

பாச்சி உம்மாச்சியும் பாட்டி தாத்தாவென்று
பாஷை பயிற்றுவள் தாய்—இவள்
ராச்சியமாளவும் ராணுவம் சூழவும்
ரந்திரம் தந்திடும்தாய்

பாரதகாவியம் ராமாயணக்கதை
படித்துக்கொடுப்பவள் தாய்—இவள்
பாரதவீரரை ராமனை கிருஷ்ணனைப்
படைத்துக்கொடுத்திடும் தாய்

நாலைந்து பிள்ளை களாயினும் யாவரும்
நம்பிள்ளை யென்றெண்ணும் தாய்—இவள்
நாற்பத்திஅய்ந்தரைக்கோடி மகவையும்
நடுநின்று காத்திடும் தாய்

பெற்றவள் தன்னிலும் ஆயிரம் பங்கெம்மை
பேணிவளர்த்திடும் தாய்—உயர்
நற்றவ வானிலும் நாடு சிறந்தது
நவநங்கை பாரதத்தாய்

கன்றினையீனும் கணத்துக்குமுன் மடி
கனத்திடப்பால் தருவாள்
ஒன்றுபடைக்கு முன் உலகத்துப்பூமியில்
உணவுபடைத்திடுவாள்

என்றிந்த தேசம் முழுவதும்கூடி
இரவுபகல் பாடி
நன்றுவிளைந்த இந்நாள்தன்னை இந்திய
நாடெங்கும் கொண்டாடி

### ஆனந்தக் களிப்பு

டில்லியில் சென்னையில் தேசமெங்கும்கூடி
திவ்யமணிக் கொடி ஏற்றினர்
வல்லமையாவும் சுதந்திரம் தான்வந்து
வாய்த்தவிதத்தையும் சாற்றினர்

கஞ்சிக்கில்லாமலும் கள்ளாலேயும்கெட்ட
கைதிகளை சிறை நீக்கினார்
கஞ்சிக்குப்பஞ்சமில்லாமல் இந்நாட்டினில்
கழனி உழுபவராக்கினார்

தொண்டுகள் செய்து துயர்பட்டபேருக்கு
சொத்துநிலங்கள் பிரித்திட்டார்
தூய உழவுத்தொழில்செய்து தேசத்து
சோத்துக்கு வாரம் பிரித்திட்டார்

செல்வக்குழந்தைக்கு தின்பண்டம் மிட்டாயும்
தேன்குழல் அள்ளி வழங்கினார்
சின்னஞ்சிறுவரும் காந்திமகானுக்கு
ஜெயஜெயவென்று முழங்கினார்

மாவிலைத்தோரணம் வாசலெங்கும் கட்டி
வண்ணமும் சுண்ணமும் தீட்டினார்
மாங்கிலியப் பெண்கள் பாரதமாதாவை
வாழ்த்தியே ஆரத்தி காட்டினார்

மஞ்சள் குளித்துமே குங்குமந்தீட்டிய
மாதர்கள் நெய்விளக் கேற்றினார்
மானிலம் ஆனினம்மற்றுள்ள செல்வமும்
வாழ்கவே என்றடி போற்றினார்

பூரணகும்ப மெடுத்தந்த வேதியர்
ஆரணவேத முழங்கினார்
பூத்தமுகத்துடன் பொன்குடத்து நீரை
பூரித்தெல்லோர்க்கும் வழங்கினார்

தெந்தினம் பாடி உழவர்கள் கூடியித்
தேசத்தைக் கொண்டாடி பாடினார்
மைந்தரும் பெண்களும் கூடிக்கும்மியிட்டு
மாநிலப் பேர்சொல்லி ஆடினார்

ஆநிரைக்கி தூபதீபமும் காட்டி
அழகழகாகவே பொட்டிட்டார்
வானமுதந் தரும் வள்ளல்பசுக்களே
வாழ்கவென்று திஷ்டி சுற்றிட்டார்

தெய்வ உலாக்களும் திருவிழா கூத்துகள்
செய்திந்த நாடெங்கும் முழங்கினார்
தேனும் பழமும் கடலையும் கற்கண்டும்
சீனியும்வாரி வழங்கினார்

யாரதி பாடல் படித்திந்த பாரத
பாக்கியவான்கள் துதித்திட்டார்
நாரதகீதமுழக்கி யின்னாடெங்கும்
நாடகங் கூத்து நடித்திட்டார்

ஏழையும் செல்வரும் இந்துவும் முஸ்லீம்
எல்லோருமே கொடி யேற்றினார்
வாழவைத்த கொடி வல்லமை மிக்கொடி
வாழ்த்திவணங்கியே யேற்றினார்.

## கொடிப்பாட்டு

வண்ணங்கள் மூன்று திகழும் மணிக்கொடி
வானத்தின் மீது பறந்திடவே—எங்கள்
எண்ணமும் செய்கையும் ஈடற்ற செல்வமும்
இந்தியநாடும் சிறந்திடவே

அருணோதய வண்ணச் செந்தூரம் பார் எங்கள்
அன்னை திலகமடா
கருணையும் ஞானமும் காவியும் பாரத
கௌரவச் செல்வமடா

பாலாழிமேலொரு நீலவட்டம் நின்று
பாரினைக் காக்குமடா
சீலமும் வாய்மையும் திறமைமிகும் தொழில்
செல்வமுண்டாக்குமடா

பச்சையும் வெண்மையும் செந்தூரமும்
நடுப்பரிதியின் வட்டமுமே
பச்சைசெழித்திடும் பாலும் பெருகிடும்
லட்சுமி வாசமடா

என்று வணங்கியே இந்தக் கொடிதன்னை
ஏற்றிப்பணிந்தார்கள்
எந்தெந்த நாளைக்கும் இதனைக் காப்போமென்று
எண்ணித்துணிந்தார்கள்

இந்துவும் முஸ்லீமும் ஏழைபணக்காரர்
எல்லோருமின்னாட்டு
சொந்தமக்களென்று இந்தக்கொடியின்கீழ்
சூழ்ந்து பணிந்தார்கள்

வந்தேமாதரம் அல்லாஹு அக்பர்
எம்தேசம் ஜெயஹிந்த்
என்றேமுழக்கி போரிட்டபேர்களை
எண்ணிப் பணிந்தார்கள்

வாழும்மனைபொருள் மக்கள்சுற்றங்களை
மறந்து இறங்கியபேர்
மானிலச்சண்டையில் தானுமுயிர்விட்டு
வானுலகஞ் சென்றபேர்

தாதாபாய்நவுரோஜி பாலகங்காதரர்
சத்தியவான் கோகலே
மாதாநம்கஸ்தூரி அன்னைமகாதேவ
பாயைப் பணிந்தார்கள்

செந்தமிழ்நாடு சிறந்திட வந்திட்ட
செல்வச் சிதம்பரனார்
தேசமெங்கும் கப்பலோட்ட நினைத்திட்ட
தெய்வச் சிதம்பரனார்

மைந்தரும் சுற்றமும் வாழ்வு மனையாவும்
மறந்த சிதம்பரனார்
மாதாவுக்கே செக்குமாடா யுழைத்திட்ட
மன்னர் சிதம்பரனார்

மெய்யறநூலை உலகுக்குத் தந்திட்ட
வித்தகனான மகான்
தெய்வத்தமிழ்மொழி செய்த தவப்பயன்
தீரன் சிதம்பரனார்

வாவேசு அய்யரை வாஞ்சியென் பாரையும்
வாழ்த்தி வணங்கினராம்
பூவேசுவர்க்கமாய் போரிட்ட பேர்களை
போற்றி வணங்கினராம்

ஆயிரமாயிர மாயுயிர் நீங்கிய
அன்னையின் தொண்டர்களை
யாரென்ன ஊரென்ன பேரென்ன வென்றுநாம்
அறியாத பேரையெல்லாம்

மாயிருஞாலம் சிறக்க இப்பாரத
மண்ணும் சிறந்திடவே
வாழ்வினையீந்து அமரர்களாகிய
வாலிபரைப் பணிந்தார்

காவியம்போற்றும் சரோஜினி போன்றவர்
காந்திவழியில் வந்தோர்
தேவி நம் பாரததேசம் சிறப்புற
சேவைகள் ஏற்றுக்கொண்டார்

செய்திடும்காரியம் முன்கூட்டிச்
செப்பிடும்தீரர் நம்ராஜாஜீ
வைதவர்வாழ்த்தி வணங்கும் பெரியவர்
வங்கத்தை யாளவந்தார்

உள்ளமும் ஜீவனும் உடம்புமலுக்க
உழைத்தபெரியோர்கள்
தள்ளாமை தன்னையே தள்ளி இத்தேசத்தை
தலையில் சுமந்தார்கள்

தந்தையும் தாயொடு தங்கை தமக்கையும்
தன்னுட செல்வமெல்லாம்
தன்னைப்பெற்ற இந்தப் புண்ணிய பூமிக்கு
தத்தம் செய்த நேரு

விந்தை ஹிமாசலம் கன்னிக்குமரி
ரத்னகரம் மேலமலை
சொந்த எல்லைகொண்ட பாரதபூமிக்கு
தந்தையென வந்தான்

காந்திமகான் இந்த காட்சிகளைக்கண்டு
கருத்தில் சிரித்துக்கொண்டார்
சாந்தி உபதேசம் செய்திடத்தானும்
தனிவழியேகி நின்றார்

## மகாத்மா காந்தியடிகள் நவகாளி செல்லுதல்

ஏழைக்கு நல்லவர் காந்திமகான்
இரக்கம் உருவாக வந்தமகான்
வாழ்விக்க வந்தவர் காந்திமகான்
மானிலம் போற்றிடும் காந்திமகான்

இந்தியநாடு முழுது மொன்றாய்
இந்துமுஸ்லீம் இருபேருமொன்றாய்
வந்திடும்நாளை எதிர்பார்த்து
வாழவரங்களும் வேண்டுகின்றார்

இரண்டுபட்டுப் போன துண்டுக்குள்ளே
இந்தியநாட்டில் இனிவாழேன்
திண்டு முண்டுகளைத் தீர்த்துவைப்பேன்
தேசத்தை ஒன்ருக்கி வாழ்ந்திடுவேன்

வெள்ளைக்காரன் இன்று போயிட்டாலும்
வீட்டுக்காரன் சண்டை போட்டுக்கொண்டால்
கொள்ளை மறுபடி நேருதற்கே
கோலிய பாதை யிதாகாதோ

வீட்டுக்குள்ளே சண்டை போட்டுக்கொண்டால்
வெளியாருக் கேளனமாகாதோ
நாட்டுக்குள்ளே சண்டை போட்டுக்கொண்டால்
நாடு நம்மைவிட்டுப் போகாதோ

சாந்தமுடன் வாழும் வாழுமப்பா
சண்டை யில்லாமலே வாழுமப்பா
தாயாம் இந்தியநாட்டு மண்மேல்
தாயும் புள்ளையாக வாழுமப்பா

பஞ்சாப் கல்கத்தா சிந்துவிலே
பாரதநாட்டு நகர்களிலே
அஞ்சிஅஞ்சிப்பலர் வாழுகிருர்
அவருக்குச் சேவைகள் செய்திடுவேன்

பாரததேசம் விடுதலையாய்
பாங்கு சுதந்தரம் வந்தாலும்
பயமும் பகையும் விடாமலிங்கே
பாரதமக்கள் தவித்திடுருர்

நொந்தமனிதர்க்கு சேவைசெய்யும்
நோக்கமென்றே கொண்டுநான்வாழ்வேன்
எந்தமனிதர்க்கும் உபகாரம்
இல்லையென்ருலினி வாழேன் நான்

என்றே காந்தி எடுத்துரைத்து
எங்கெங்கோ செல்ல நினைத்திடுருர்
நன்றே செய்யணும் பாரதத்தாய்
நாட்டு விளக்கினைக்காக்கவேணும்

தேசத்தில் சண்டை பிடித்துக்கொண்டே
தெய்வத்தைநோகவே செய்யுவோமோ
மாசற்ற காந்தி மகாத்மாவின்
மனது புண்ணுகவே செய்யுவோமோ

மாணிக்கந்தன்னிலே மாசுபட்டு
மண்ணில் புதைந்திடச் செய்யுவோமோ
காணிக்கு ஆட்சியை வாங்கித்தந்த
கண்கள் கலங்கவே செய்யுவோமோ

பாரத தேசத்து வீரமக்காள்
பாகிஸ்தான் இந்தியா வாழும்மக்காள்
வீரர்கள் நாமொன்று சேர்ந்திடுவோம்
வித்தியாசம்விட்டு வாழ்ந்திடுவோம்

இந்தியா தேசத்தை ஒன்ருக
என்றென்றும் வைத்துப் பணிந்திடுவோம்
செந்திருவாகிய காந்திமகான்
சிந்தை குளிர்ந்திடச் செய்திடுவோம்

வாருங்கள் வாருங்கள் சோதரரே
மானிலம் வாழ்ந்திட வாழ்ந்திடவே
வாருங்கள் வாருங்கள் சோதரரே
மாதா நெஞ்சம் மகிழ்ந்திடவே

மாலையில் மல்லிகைப் பூவுமுண்டு
மஞ்சனத்திப்பூவில் வாசமுண்டு
சோலையில் நெரிஞ்சி முள்ளுமுண்டு
சொல்லில் நயமில்லாச் சொல்லுமுண்டு

வேலையில்உப்புத் தண்ணீரிடையே.
விளையும் பவழம் விரும்புதல்போல்
ஆலையின்சத்தத்திற் குள்ளிருந்தே
ஆடையெடுத்து அணிவதுபோல்

கல்லில் கிடைக்கிற வைரமணி
கங்கணம் மோதிரம் ஆவதுபோல்
நெல்லில் கலந்த பதர்தூற்றி
நிதியாய்க் குமித்து வைப்பதுபோல்

நல்லதை மட்டுமே தானெடுத்து
நான்தந்த மற்றதை தள்ளிவிட்டு
சொல்லிலும் பாட்டிலும் இக்கதையை
சூழ்ந்த உறவோடு பாடிடுவீர்

---

# இரண்டாம் பாகம்

## கல்கத்தாவில் காந்திஜீ

எங்கும் சுதந்திரம் என்பது பேச்சாய் இருந்திடும் தேதியிலே
எங்கும் பாட்டும் கூத்தும் முழங்கி இருந்திடும் தேதியிலே
ஆனந்தம் பரமானந்தம்என இருந்திடும் தேதியிலே
அய்யன் மட்டும் தனியேவந்தார் வங்கத்து வீதியிலே

தேசதேசமும் டில்லியை பாக்குது சிரிச்ச முகத்தோடு
தேசத்தலைவர் வங்கம்வந்தார் வெறிச்ச அகத்தோடு
பழிக்குப்பழியே வாங்கும் எண்ணம் பரவுவதைக் கண்டார்
பகைவர்க்கருளும் காந்திமகாத்மா பாரத்துயர் கொண்டார்

அழிக்கும் கொள்கைக் கடிப்படையாகிய பழிக்குபழி வாங்கல்
ஆகாதையா ஆகாதையா என்று அலறி நின்றார்
கல்கத்தாவில் இந்துமுஸல்மான் கலகச் சீமையிலே
காந்திமகானும் வந்திறங்கி காவல் காத்திட்டார்

சுதந்திரதினத்தில் சண்டைகள்பெருகி சோரை யோடுமென்றே
சொன்னவரெல்லாம் திகைச்சு விட்டார்கள் சுவாமியவர்கண்டே
காந்தியின் சிந்தை கருவூலமுமாம் கருணை ராஜாஜி
கல்கத்தாவின் ஆட்சிப் பொறுப்பை கையில் ஏற்றுக்கொண்டார்

காட்டுக்குதிரையை ஓட்டலகானை கையிலெடுத்தாராம்
கருணை வழியில் குதிரையோட்டவே கையிலெடுத்தாராம்
கண்ணன் காட்டிய வழியில் ஓட்டவே கையிலெடுத்தாராம்
காந்திமகானின் வழியிலோட்டவே கையிலெடுத்தாராம்

காந்திமகானும் ராஜாஜியும் கல்கத்தா வரவே
கலகம் கொடுமை கொள்ளை கொலையும் கதறியோடிப்போச்சு
சாந்தமகானை தங்கள் நடுவில் ஜனங்கள் கண்டதுமே
தாயும் பிள்ளையும் ஆனார் கட்டித்தழுவிக் கொள்ளலானார்

இந்தியர் முஸ்லீம் இருவரும்கூடி சுதந்திரம் கொண்டாடி
ஏழைபங்காளன் காந்தியின் நெஞ்சுக்கின்பம் தந்தார்கள்
மப்புப்போட்ட மானம்போலே தோணுது வங்காளம்
மழையும்காணோம் வெய்யிலும் காணோம் மலங்குது வங்காளம்

காந்திமகானும் இஸ்லாமானவர் காலிசெய்த வீட்டில்
கத்திப்பழிக்கு பயந்து ஓடியே காலிசெய்த வீட்டில்
வீட்டைவிட்டு ஓடிப்போக விரட்டப்பட்ட வீட்டில்
வேதனைப்பட்ட முஸ்லீம்ஒருவர் விரும்பித்தந்த வீட்டில்

முஸ்லீம் லீக்குத் தலைவராகிய சாயபுதன்னோடு
முஸ்லீம் இந்துவும் இருவரும் ஒன்றாய் இருந்துவரலானார்.
இஸ்லாமானவர் தெருவுக்குள்ளே இருந்துவந்தார் காந்தி
இஸ்லாமானவர் வீட்டுக்குள்ளே இருந்துவந்தார் காந்தி

இந்துவின்பேரால் கொடுமைசெய்ய இடமும் கொடுக்காமல்
இஸ்லாமானவர் தெருவுக்குள்ளே இருந்துவந்தார் காந்தி
இனத்தார் என்னைக் கொன்றதன் பின்னே இஸ்லாமைக்கொல்லும்
என்றே சொல்லி காந்திமகாத்மா இங்கிருக்க லானார்

மப்புபோட்ட மானம் குமுறி மடமடமடவெனவே
மண்டைவெடிக்க இடியும் இடிச்சது மழையும் கிடையாது
தப்புந்தவறும் செஞ்சே பழகிய சண்டைக்காரக்கூட்டம்
தர்மரூபனை தாக்கிடவந்தது சண்டைக்காரக்கூட்டம்

காந்தியிருந்த வீட்டுக்குமேலே கல்லை யெறிஞ்சிட்டார்
கண்ணாடிக் கதவெல்லாம் உடைச்சு கலகம் செய்திட்டார்.
இங்கே நீயும் ஏன்வந்தாய் என இறைந்து கூச்சலிட்டார்
இஸ்லாமானவர் கையாளெனவே ஏந்தலை வைதார்கள்

நொந்த புள்ளைக்கு தாயைப்போலவே நோக்கமுள்ள காந்தி
நோப்பாளத்தைக் கண்டார் மனசு நொந்துபோகலானார்
என்னையடிச்சுக் கொன்றுபோடுங்கள் எதிரியென்றே கண்டால்
என்னவேண்டாலும் செய்யும் எனவே எதிரில் வந்துநின்றார். 2780

கோபக்காரக்கூட்டம் செங்கல் கொண்டே எறிந்தார்கள்
குணமலையாகிய காந்தியை செங்கல்கொண்டே எறிந்தார்கள்
மதினா வழியில் நபி நாயகத்தை மக்கள் எறிந்தது போல்
மலரைத்தூவும் திருமுகமேலே கல்லாலெறிஞ்சிட்டார்

கடிமலர் தூவும் கருணைமுகத்தில் கல்லால் எறிஞ்சிட்டார்
காந்திமகானின் திருமுகமதிலே கல்லால் எறிஞ்சிட்டார்
கல்லும் பதறி துள்ளிஓடியே காந்தியைக்கொல்லாமல்
கண்ணாடிக் கதவின்மேல் மோதி கதறிவிழுந்ததுவாம்

கருணாமூர்த்தி காந்தியும் தன்னிரு கண்ணால் இதுதனையே
கண்டார் கண்டார் கல்லுச்சிலைபோல் நின்றார் நின்றாராம்
மதமும்கொண்ட யானைகிளம்பி மாவுத்தனைக்கொன்ற
மதவெறியிதனால் மானிடர் மாடாய் மாறுவதுங்கண்டார்

நாட்டிலே வாழும் மக்கள் எல்லாம் நல்லமுறை கெட்டே
நாயும் பூனைபோல வாழ நானும் சகிப்பேனோ
பெத்தவளாகிய பாரதமாதா சித்தம்நோகாதோ
பெருமையைக்காணப் பிறந்த எந்தன் சித்தம் நோகாதோ

கல்கத்தாவில் என் கண்முன்னே காணும்கொடுமையெல்லாம்
காணச்சகியேன் உண்ணாவிரதம் கடைப்பிடிப்பேன் என்றே
உண்ணாவிரதம் பிடிச்சே நானும் கண்ணைமூடினாலும்
உலகத்துயரம் காணாமல் நான் உயிர்விடுவேன் என்றே

அண்ணல் காந்தி புண்ணியமூர்த்தி ஆளப்பிறந்தமகான்
அகிம்சைவழியில் சுயராஜ்யத்தை ஆக்கித்தந்த மகான்
எண்ணங்குமுறி கண்ணுங் கலங்கி உண்ணாவிரதந்தான்
இருக்கத்துவங்க பொறுக்குமோ தேசம் இருவரும் கூடினராம்

இந்தியர் முஸ்லிம் இருவரும்கூடி இழைந்து பலபேசி
இனியொருநாளும் வங்கந்தனிலே இல்லை சண்டையென்றே
தங்களுக்குள்ளே ஒத்துமைக்கமிட்டி தானுமமைத்தாராம்
ஷகீத் சாயபு முக்கர்ஜீயும் தானுமமைத்தாராம்

தூயவராகிய காந்திமகானும் துவங்கிய நாலாளுள்
நேயங்கண்டு உண்ணுவிரதம் நிறுத்திவிட்டோமென்றூர்
உண்ணுவிரதந் தன்னை நிறுத்தி உடம்பு தேறுமுன்னே
ஓடிவந்தாராம் டில்லிப்பட்டணம் ஓங்கி எரியக்கண்டே

## டில்லியில் கலகம்

ஆனைகுந்தி பட்டிணமென்பார் அஸ்தின புரியென்பார்
ஆண்டுபழகுமூர் என்றும் சொல்வார் அழகாபுரியென்பார்
அந்தநாள்முதல் இந்தியாவுக்கு அதுவே தலைநகராம்
அந்தஊர்தான் இன்றும் நமதுஅழகிய தலைநகராம்

அக்பர்பாதுஷா ஆண்டஊர் அது அஸ்தினபுரிநகரம்
அவுரங்கசீப்பு தாண்டவம் போட்டதும் அஸ்தினபுரிநகரம்
இந்து முஸ்லிமும் ஒன்றாயிருந்தது அஸ்தினபுரிநகரம்
இரண்டுபிரிச்சி வெள்ளையராண்டதும் அஸ்தினபுரிநகரம் 2790

சத்தியவாக்கு அரிச்சந்திரனும் தர்மபுத்திரன்தானும்
சாமிகோவிலை தகத்து எறிஞ்ச கஜினிமுகம்மதுவும்
ஆண்டு இருந்த ஊராமையா டில்லிப்பட்டணமும்
ஆயிரம் ஆயிரம் ராஜாங்கத்தை ஆண்டது அவ்வூரு

எத்தனை அரசோ பார்த்தது அய்யாஇந்த டில்லிநகரம்
அத்தனைக்கும்மேல் அழியாதிருப்பது அந்த டில்லிநகரம்
ஆனை சேனையும் குதிரையும் கொடியும் ஆயிரலக்ஷமுமாய்
அழிந்துபோயும் பின் அழியாதிருப்பது அந்த டில்லிநகரம்

மணிமுடியெல்லாம் டில்லிப்பட்டிண மண்ணில் பார்த்திடலாம்
மன்னவர்வாழ்வை டில்லிப்பட்டிண மண்ணே கதைசொல்லும்
கோபுரமாயிரம் கண்டதுமுண்டு டில்லிபட்டிணமே
கோரிகளாயிரம் கண்டதுமுண்டு டில்லிபட்டிணமே

நாலுவேதமும் முழங்கினதுண்டு டில்லிபட்டிணத்தில்
நமாசு ஓதி வணங்கியதுண்டு டில்லிபட்டிணத்தில்
கிரந்தாசாகிப் முழங்கியதுண்டு டில்லிபட்டிணத்தில்
கிருஸ்தவவேதம் கேட்டதும் உண்டு டில்லிபட்டிணத்தில்

பாலியும் இந்தி நாகரி தமிழும் பாரதவடமொழியும்
ஆலிம் அரபு ஆங்கிலமொழியும் அரசுசெலுத்துமூராம்
துரியோதனனும் ஆண்டதுஉண்டு துச்சாசனனும் ஆண்டதுஉண்டு
விதுரமகானும் இருந்தது உண்டு வேதமுதல்வனும் வந்ததுஉண்டு

அந்த ஊரிலே இந்துமுஸ்லீமும் அடிச்சுக்கொண்டார்கள்
அண்ணன் தம்பியுமாக இருந்தவர் அடிச்சுக்கொண்டார்கள்
வந்த இடத்தில் பழிக்குப்பழியே வாங்கநினைத்திட்டார்
வாழும் முஸ்லிம் மக்கள் பலரை வதைக்க நினைத்திட்டார்

வந்தமக்களின் கொடுமையைக்கேட்டு இருந்த மக்கள் தாமும்
வாழும் முஸ்லிம் மக்களையே பழிவாங்க நினைத்திட்டார்
பாகிஸ்தானை தாயென நம்பும் பாபிகள் சிலமுஸ்லிம்
பாலாஈட்டி கத்தி துப்பாக்கி பதுக்கி வைத்துக்கொண்டார்

எங்குபார்த்தாலும் இந்துமுஸ்லிம்கள் கலகம் கலகமய்யா
எரியுது கோயில் எரியுது பள்ளி எங்கும் எரியுதையா
நாளும் பொழுதும் கலகம் கலகம் நகரெங்கும் கலகம்
நமாசு இடத்தில் கோயில் குளத்தில் நடக்குதையா கலகம்

ஆளும் பணமும் பொருளும் பொன்னும் ஆயிரமாயிரமாய்
அடித்துக்கொண்டே அழிந்ததையா அஸ்தின புரிநகரில்
காந்தி மகானும் டில்லிப்பட்டணம் கடுகி ஓடிவந்தார்
சாந்தியுடன் தான் வாழும் என்று ஜனத்தைப் பார்த்துச்சொன்னார்

எந்தப்பக்கமும் இந்துமுஸ்லீமில் இணங்கிவராமல்தான்
இருவர் தானும் காந்தியின் கண்முன் இடும்பு பேசலானார்
ஹைதிராபாத்தில் இந்துமுஸ்லீம்கள் அடித்துக் கொண்டார்கள்
அஹமதாபாத்தில் இந்துமுஸ்லீம்கள் அடித்துக்கொண்டார்கள்

காஷ்மீரத்தில் கள்ளக்கூட்டம் காட்டுமாடுபோல
கலகம் கொள்ளை செய்யப்புகுந்து கலக்கிப்போடலானார்.
கொள்ளைக்காரன் கூட்டத்துக்கு குண்டுமருந்தெல்லாம்
கொடுத்தது பாகிஸ்தானம் ஆளும் கூட்டியனுப்பியதாம்

இந்தச் சேதியை இந்தியர் கேட்டு சிந்தை நொந்தார்கள்
இஸ்லாம் மக்களில் நல்லவர்கூட எதிரிகள் என்றார்கள்
எந்தப்பக்கம் திரும்பிட்டாலும் இருதயம்குமுறிடவே
இந்துமுஸ்லீம்கள் அடித்துக்கொண்டார் இதனைக்கண்டதுமே

பிர்லா மாளிகை தன்னில் நடக்கும் பிரார்த்தனைக்கூட்டத்தில்
பெரியவராகிய காந்திமகானும் பித்தரைப்போல்நின்றே
சித்தம்நொந்து தேசமக்களை தீயவராகாமல்
சிந்தை களித்து வாழும் ஒன்றாய் சேர்ந்துவாழுமென்றார்

குரான் ஓதக்கூடாதென்று கூச்சல்போட்டார்கள்
கோபங்கொண்டு காயிதமெழுதி குழப்பம் செய்தார்கள்
எம்மதமாயினும் சம்மதமப்பா ஈசன் ஒருவன்தான்
ஏசுவும் நபியும் எஜுரும் சாமமும் ஏற்றும்பொருள் ஒன்றே

தனியொருமனிதன் கொடுமைசெய்தால் சாதியைவையாதீர்,
தவறியபிள்ளை கொடுமைக்காக தாயைக்கொல்லாதீர்.

ஒற்றுமையில்லா நாட்டில் நானும் உயிருவாழலாமோ
ஒற்றுமையில்லா நாட்டில் சுதந்திர முப்புக்கும்ஆமோ

செல்லாக்காசாய் நானுமிருந்து சீவனம் செய்யாமல்
செம்பொடு செம்பாய் மண்ணொடு மண்ணாய் சீக்கிரம் போயிடலாம்

இந்துமுஸல்மான் ஒற்றுமை வந்து என் கண்ணால்காண
இயலாவிட்டால் உயிருடனிருந்து என்ன பயன் என்றே

## டில்லி உண்ணுவிரதம்.

பதினஞ்சாம்முறை உண்ணுவிரதம் பாபூ எடுத்திட்டார்
பாரததேசமக்கள் யாவரும் துடியாத்துடிச்சிட்டார்

நாற்பத்தெட்டாம் வருசம் சனவரி பதிமூணுந்தேதி
நாட்டுக்கெல்லாம் நல்ல நாளிலே நாடிய வேளையிலே

உத்தராயணம் சத்தியஜோதி உயருந்திருநாளில்
ஊருக்கெல்லாம் தெய்வம் காந்தி உபவாசம் என்றார்

செந்தமிழ் நாட்டார் இதனைக் கேட்டு சிந்தை துடிச்சிட்டோம்
செல்வமே எங்கள் காந்தி மகானே ஜெயம்பெறுவீரென்றோம்

பொங்கல் புதுநாளையா அன்று புண்ணியன் உபவாசம்
பொறக்குது அய்யா தமிழ்ப்புதுவருசம் புண்ணியர் உபவாசம்

பாலு பொங்கவேஎன்றால் நெஞ்சம் பதறிப் பொங்குதையா
கரும்புதிங்கவே கையிலெ எடுத்தால் கண்ணீர் பொங்குதையா

தமிழர் நாட்டில் இந்து முஸ்லீம்கள் சண்டைகிடையாது
தகப்பனுகிய காந்திமகானுக்கு தப்பிதம் செய்தறியோம்

வடக்கத்திநாட்டார் அடிச்சுக்கொண்டே வருமம்காட்டியதால்
மகாத்துமாவைப் பட்டினிபோட்டு வாட்டுகிறார் என்றே

அய்யா தமிழன் யாவருங்கூடி அலறிச்சொன்னார்கள்
ஆண்டவன் அருளால் வருசம் நன்றாயாகணும் என்றார்கள்

உண்ணுவிரதம் புடிச்சதும் டில்லி ஊரெல்லாம்கூடி
உடலும்பதறி உள்ளம் சிதறி ஓடியாடலானார்

இந்தியர் முஸ்லீம் சீக்கியர் பார்ஸீ இந்துமகாசபையும்
சிந்திய ரத்தந்துடைத்திடுவோமென சேவை செய்யவந்தார்

சமாதானத்தைக் காக்கதாங்கள் தத்தம் தானென்றார்
சகோதரர் போல் வாழச்செய்வோம் சத்தியம் இதுவென்றார்

காந்திமகானும் திட்டம் ஏழு கருதிக்கேட்டாராம்
கையொப்பம் போட்டுத்தாரும்என்றே கருதிக் கேட்டாராம்

திட்டம் ஏழும் படித்தால் நெஞ்சம் திடுக்கிடும் சீமையெல்லாம்
தெய்வம்போலே காந்திமகானின் சிந்தனை தெரிஞ்சிடுமாம்

தானும் பிறந்த நாட்டிலே வந்தவர் தர்மம் தவறாமல்
தயவே உருவாய் வாழுவீரென்று தானே திட்டமிட்டார்

முஸ்லீம் மக்கள் தம்மை மற்றோர் முன்னின்று காக்கோணும்
முன்னைசெய்தது என்னவாயினும் முதலில் மறக்கோணும்

பழிக்குப்பழியே வாங்கும் செய்கையை பாரதவீரரெல்லாம்
பாபம் என்றே கருதிவாழுவீர் பரமதயா நிதியாய்

என்றே சொல்லி திட்டம் ஏழுவகுத்துக்குடுத்தாராம்
ஏழைபங்காளன் இந்திய நாட்டை வாழவைத்த வீரன்

இத்தனைக்குள்ளே நாளெஞ்சாச்சு என்னையன் தனக்கே .
இதயஓட்டமும் பேச்சும்மூச்சும் இடக்குச் செய்திடவே

சுத்தியிருந்த வைத்தியரெல்லாம் பித்துப் பிடிச்சவராய்
சுவாமி தெய்வத்தை வேண்டுவதானார் சுவாசத்தைக்காக்க

அந்த வேளையில் அபுல்கலாமு ஆசாதும்பாபூ
ஆகிய ராஜேன்பாபுவும்கூடி அய்யனிடம் வந்தே

சமாதான ஒப்பந்தம் ஒன்றைத்தந்தே வணங்கிடவே
சாந்தமகாத்மா உண்ணுவிரதம்தன்னை நிறுத்தினராம்

ஆசா தின்கை யதனால் தந்த ஆரஞ்சுப்பழத்தை
அய்யன் காந்தி அருந்தியே கொண்ட நோம்பு துறந்தாராம்

தேசம்முழுவதும் கோயில்குளத்தில் தீபதூபம்போட்டு
தேசத்தந்தையைக் காத்தாயென்றே தெய்வத்தைப் பணிந்தார்கள்

## குண்டுவீச்சு

காந்தி மகானும் நோம்பு துறந்த களையும் தெளியாமல்
காரியமொன்றே கருத்தாய்க்கொண்டு காலந்தள்ளலானார்

எழுந்து நடக்க திடமில்லாமல் ஏழெட்டுப்பேராய்
ஈஸிசேரில் தன்னைவைத்து எடுத்துப்போகச் சொல்லி

பிர்லாமாளிகை தன்னில் நடக்கும் பிரார்த்தனைக் கூட்டத்தில்
பேசுந் தெய்வம் ஆகியகாந்தியெம் பெருமான் பேசுகிறார்

கூட்டந்தனிலே நெஞ்சிலிருந்த குறை தீர்ந்தது என்றார்
குடும்பத்திலுள்ள சண்டை தீர்ந்தது குழந்தைகளா என்றார்

இந்து முஸ்லிம்கள் ஒத்துமையாக இருந்து வாழ்வதானால்
இன்னும் அய்ம்பது வருச மிருப்பேன் எம்பிக்குதிச்சிடுவேன்

நூற்றிருபத்தைந் தாண்டுகள்வாழ நோக்கங்கொண்டேன் நான்
நுங்கள் கையிலே இருக்குது இந்த நோக்கம்தானென்றார்

இந்தப்படியே சொல்லியிருக்கும் எங்கள் மகாத்மாமேல்
எறிஞ்சானையா குண்டை யொருத்தன் எங்கெ யிருந்தோ தான்

குறியும் தப்பி குண்டு வெடிச்சது கூட்டத்தின் மேலே
கூகூவென்றே சத்தம்போட்டது கூட்டச்சனமெல்லாம்

குண்டை எறிஞ்ச பாவியைப் பிடிச்சுக்கொண்டது போலீசு
கோமளரூபனை கொல்லவந்தவன் குலைநடுங்கி நின்றான்

இந்திய தேசத்தைக் காக்க வந்தவன் என்னையன் காந்தி
ஏசுகிறிஸ்துபோல் ஒரு மொழி சொன்னான் இதயங்கனிவோடு

இரக்கம் உருவாய் எடுத்துவந்தவர் என்ன சொன்னரையா
கருணை உருவாய் வந்த மகாத்மா கருதிச் சொன்னதென்ன

குண்டை எறிந்தவன் தன்னை ஒன்றும் கொடுமை செய்யாதீர்
கோபதாபத்தால் ஆத்திரப்பட்டு பழியும் வாங்காதீர்

தண்டனை செய்வதில் கடுமை வேண்டாம் தயவு காட்டுமென்றே
தந்தை காந்தி நேருவினிடமே தயவாய்க் கேட்டாராம்

குற்றவாளியை மன்னிக்குங் குணம் கொண்ட மகாத்மாவும்
கொல்லவந்த ஓர் பாம்பையும் கொல்லக் கூடாதென்றிடுவார்

தன்னைக்கொல்லவந்த பசுவையும் தானே கொன்றிடலாம், என்ற
தத்துவந்தன்னை தகர்த்திட வந்தவர் சாந்தமகாத்மாஜீ

தந்தையைத்தாயை மைந்தர்வைதால் தாயார் என்செய்வாள்
தன்தலைவிதியை நொந்து கண்ணீரை தரையில் சிந்திடுவாள்

மைந்தர் குற்றம் தன்னைச் சொல்ல வாய்திறக்கமாட்டாள்
வந்தவர் ஏதும்கேட்டால் தன்னுட வருத்தம் சொல்லமாட்டாள்

அந்தமாதிரி காந்திமகானும் அன்பேஉருவாகி
ஆண்டவனிடமே வேண்டிக்கொண்டார் அஹிம்சை வாழ்கவென்றே 2850

## உபதேசம்

வகுப்புவாதத்தை தீர்ப்பது ஒன்றே மனதில் கொண்டவராய்
வாழ்வு சிறக்கும் மார்க்கம் ஒன்றே மனதில் கொண்டவராய்

தகப்பனகிய காந்திமகானும் சாந்தம் சத்தியத்தை
தானே வழக்கம் கொள்ளும் என்று தயவாய்ச் சொல்லிவந்தார்

சோதரவாழ்வைச் செய்துகாட்டிய தூயவன் போசென்றார் .
சுத்தமானதோர் இந்தியர் போஸைத் தொழுகவேண்டுமென்றார்
சுபாஷ் சந்திரபோஸை நினைத்து துக்கப்பட்டாராம்
சுத்தவீரனைப் போற்றி மகிழ்ந்து துக்கப்பட்டாராம்

மதவெறி தன்னல் கொடுமைப்பட்ட மாதர்கள் தமையும்
மாநிலத்தோர்கள் தயவுகாட்டியே வாழவைக்க வேணும்
வெறியன்வெறியால் வீடுகடத்திய வீரமாதர் தம்மை
வேண்டாமென்றே விரட்டியடித்தால் விளக்கவிந்துபோகும்

காக்கத்திடமின்றி போக்கிலேவிட்ட கன்னிப்பெண்தமையே
காலில்விழுந்து வணங்கி இனத்துடன் சேர்க்கவேண்டு மென்றார்

தமிழும் தெலுங்கும் கன்னடமும்தான் தனியரசானலும்
தாயார்போலே இந்திய நாட்டை தானும் பார்க்கவேணும்

தன்னரசாக ஆளநினைத்தால் சண்டை மூண்டுபோகும்
சமாதானமே இந்தியதேசத்தில் தானழிந்துபோகும்

பேச்சுவாரியாய் பிரிவினை செய்து பெருமைகொண்டாலும்
பெரிய தேசமாம் இந்தியநாட்டில் பிரிந்து வாழக்கூடாது

என்றே காந்தி எடுத்து உரைத்து எல்லை பிரிப்பதிலும்
இருவரும் ஒருமனதாகிடவேண்டும் இன்னொருவர் தமையே

கூப்பிட்டுவந்து எல்லைபிரித்துக் குடுமிபிடிக்காதீர்
கூட்டுச்சேர்ந்து பாகம் பிரித்துக்கொண்டு வாழுமென்றார்

அன்பிலடைந்த இன்பக்கனியை அனலில் போடாதீர்
அன்பில் விளைந்த சுயராஜ்யத்தை அழித்துப் போடாதீர்

துன்பச்செயலும் மதவெறிநோயும் துயரம் தந்துவிடும்
சோதரச்சண்டை போட்டாலுங்கள் சொத்துகொள்ளைபோகும்

காந்தியிருக்கும் இடத்திலே மட்டும் சாந்தம் இருக்குதென்றால்
கல்லோ செம்போ சிலையோ நானும் காலமெல்லாம்வாழ

சேவாகிராமம் செல்ல நினைக்கிறேன் சிந்தைக்களிப்போடு
சீக்கிரம் விடையே தாரும் நீங்களும் சிந்தைக்களிப்போடு

பாரதநாட்டில் மதவெறி நீங்கி பகைமைதீரவேணும்
பாகிஸ்தானில் ஒத்துமை விளைந்து பார்க்கப்போகவேணும்

வேலைநிறுத்தம் செய்திட இப்போ வேற்றாளாட்சியில்லை
வீட்டுக்குள்ளே நாட்டுப்பெண்கள் வேலைநிறுத்தமுண்டோ

சுதந்திரநாட்டில் தொழிலும் பெருகி சுகமும் கிடைக்கோணும்
சோறும் துணியும் வீடும் கிடைத்து சுகவாழ்வாகோணும்

தொழிலாளிகளே நாடுசிறக்க தொண்டு செய்யும்பேர்கள்
சொந்தநாட்டையே காரும் உங்கள் சோம்பலை ஓட்டுமென்றார்

பழிக்குப்பழியே வாங்குவதென்றால் பாபம்தான் மிஞ்சும்
பழியில்வளர்ந்த தேசம் எதுவும் படத்தில் நிற்காது

அழிக்கும் பழியே நெஞ்சில் அனலாய் அன்பை யெரித்துவிடும்
அன்பு எரிந்தால் உலகில்தானே ஆனந்தம் ஏது

பிள்ளைப்பாசம் பெண்கள்பாசம் பெண்டாட்டிப்பாசம்
பேரருளாளன் பாசம் எதுவும் பெருகிய அன்பால்தான்

அன்பையிழந்த முகத்தில் ஈசன் அருளும் கிடையாது
அன்பையிழந்த நாட்டில் எங்கும் ஆனந்தம்கிடையாது

அன்பே தெய்வம் அன்பே செல்வம் அன்பே பேரின்பம்
அன்பே பெருமை அன்பே அருமை அதனில் வாழுமென்றார்

## பிரார்த்தனைக்காட்சி

இந்தப்படியே பிரார்த்தனை மேடையில் இதமொழி கூறிடுவார்
ஈசனைப்போலே எதிரில் வருவார் எங்கள் மகாத்மாஜீ

எழுபத்தொன்பது வயதுகடந்த காந்திமகாத்மாவும்
என்றும் பிரார்த்தனை செய்திடவருவார் எங்கள் மத்தியிலே

ஆயிரமாயிரம் லட்சலட்சமாய் அமர்ந்திருக்கும் கூட்டம்
அருளே உருவாய் வருவார் காந்தி யாடி அசைந்தபடி

தும்பைப் பூபோல் வெள்ளைக்கதரில் தூய முண்டுபோர்த்தி
துறவியைப்போலே நாலுமுழத்தில் தொங்கு கச்சம் கட்டி

கையை எடுத்து வணங்கி வந்திடும் காட்சியைக் கண்டிட்டால்
கருணை பெருகும் கண்ணீர் உருகும் கருமவினைபோகும் 2880

மோகனப்புன்னகை தவழும்திருமுக மண்டலமீதினிலே
யோக சாதனை தெரியும் காந்தியின் உத்தம நெற்றியிலே

தெய்வக்களையே திகழும் திருமுக மண்டலமீதினிலே
செம்பொன் மாத்து தோத்துப்போகும் திருவருள் மேனியிலே

விக்கிரமாதித்தன் சிம்மாசனம்போல் விளங்கும்மேடையிலே
வேதம்கீதம் உபநிஷதம்போல் வீரன் ஏறிநிற்பார்

பதினெட்டுப்படி தாண்டிக்குதித்து பரணியின்மேலேறி
பாரெங்கும்புகழ் காந்திமகாத்மா பார்ப்பார் எங்களையே

மாலைக்கதிரவன் ஒளியில்நிற்பார் மகாத்துமாகாந்தி
மாற்றறியாத செழும்பசும்பொன்னோ மாணிக்கச்சிலையோ

கடலைப்போலே கூச்சல்போடும் காத்திருக்கும் கூட்டம்
கருணாமூர்த்தி ஒருமுறைபார்ப்பார் கப்புசிப்புன்னுகும்

எல்லோருக்கும் தெரிசனம் தரவே என்னையன் காந்தி
ஏந்தல் திருமுகம் தன்னைத்திருப்பி எங்கும் நோக்கிடுவார்

பார்த்தபார்வையில் மாந்தர்செய்த பாவம் பறந்தோடும்
பார்த்தபார்வையில் சிந்தையில் உள்ள பகையும்பறந்தோடும்

உள்ளமெங்குமே அன்பு நிறைந்து உற்சாகங்கூடும்
உண்மைப்பொருளை நாடும் இதயம் உவகையோடுதேடும்

கல்லாலின்கீழமரும் ஆதிக் கடவுள் இவர்தானோ
கடைத்தேறும் வழிகாட்டும் கீதைக் கண்ணன் இவர்தானோ 2890

சொல்லாலும் மனதாலும் வணங்கும் சுகப்பிரும்மம் இவரோ
சுத்தஜோதியாய் திகழுப் வேதச் சுருதிப் பொருளிதுவோ.

அருளே உருவோ பொருளே உருவோ
அன்பே உருவோ அமுதே உருவோ

மருளே ஒழியும் மனமே தெளியும்
மருந்தே சிந்தை விருந்தே எங்கள்

மனமே கோயில் கொண்டமகாத்மா
மன்னு என்றும் மறையாமணியே

குருவே குருவே குகனேதெய்வக்
கொழுந்தே குமரா குருதேசிகனே
திருவே எங்கள் செல்வமேஞான
சீலா இந்தியர் செய்தவப்பயனே

காந்தி மகாத்மா சாந்த மகாத்மா
கருணைபொழியும் ஏந்தல் மகாத்மா
சோர்ந்தவருள்ளம் வாழும் மகாத்மா
துணையே உருவாய் வந்த மகாத்மா

அன்னை தந்தை அய்யன் மதலை
முன்னைத்தவமே மோகன முனிவா
உன்னைப்பணிவோம் உன்னைப்பணிவோம்
உள்ளப்பகையே கொள்ளோம் கொள்ளோம்

சத்தியவாழ்வே வாழ்வோம் வாழ்வோம்
சத்தியமொன்றே சொல்வோம் சொல்வோம்
கத்தியெடுக்கோம் குத்திடமாட்டோம்
கருணை வளர்ப்போம் மரணம் அஞ்சோம்

சரணம் சரணம் குருவே சரணம்
சாந்தமகாத்மா திருவடி சரணம்
சரணம் சரணம் இந்தியர் வாழ்வைத்
தந்த எந்தையே சரணம் சரணம்

என்று பணிந்து வையகமெல்லாம் இருந்து வரும் நாளில்
இங்கிலீஷாண்டு நாப்பத்தெட்டு ஜனவரி முப்பதிலே

சுதந்திரம்வந்த ஆறுமாசம் சோதி மறைந்ததையா
தூயவராகிய காந்தி மகாத்மா ஆவி பிரிந்ததையா

ஆடி வெள்ளிக் கிழமையதனில் நாடு சிறந்ததையா
ஆறுமாசம் தைவெள்ளியிலே அய்யனைப் பறிகொடுத்தோம்

பிர்லாமாளிகை மைதானத்தில் பிரார்த்தனை கூட்டத்தில்
பெரியமகாத்மா பேசவந்திடும் பிரியமானநேரம்

ஆபாகாந்தி தோளைத்தழுவி அய்யன் வரும்போது
அருகிலிருந்தொரு பாவி கிளம்பி அவரு பக்கம் வந்தான்

புத்திலிருந்து பாம்புகிளம்பி கொத்திய பாவனைபோல்
சத்தியரூபனை கொல்லக்காலன் சமயம் பாத்து வந்தான்

பாபூஜியே சரணம் என்று பாதத்தில் விழுந்தான்
பதுக்கியிருந்த துப்பாக்கியை கைப்பற்றிக்கொண்டெழுந்தான்

வந்தனம் செய்த காந்திமகாத்மா மார்மேலே சுட்டான்
வாழவைத்தவர் காந்திமகாத்மா வயிற்றினிலே சுட்டான்

குண்டு துளைத்தது காந்திமகாத்மா குலையும் துடிச்சிடவே
குண்டு துளைத்தது தேசம் முழுவதும் குலையும் துடிச்சிதுவே

குண்டு துளைத்தது மானிடவர்க்க குலையும் துடிச்சிடவே
குண்டு துளைத்தது சத்தியம் அகிம்சை கொல்லாமை தனிலே

ராமா ராமா ராமா என்றே என்னையன் விழுந்தார்
இறக்கை வெட்டின சடாயுபோலே என்னையன் வீழ்ந்தார்

இரண்டு கையையும் தலைமேல் தூக்கி ராம ராமவென்றே
ஈசனுடம்பில் கலந்தாரையா எங்கள் மகாத்மாஜீ

ரகுபதிராகவ ராஜாராம் பதீதபாவன சீதாராம்
ரகுபதிராகவ ராஜாராம் பதீதபாவன சீதாராம்
ஈச்வர அல்லா தேரேநாம் ஸப்கோ ஸந்மதி தேபகவான்

ராமா ராமா ராமாவென்றே காந்தி விழுந்தாராம்
ரகுபதிராகவன் திருமேனியிலே இரண்டறக் கலந்தாராம்

தாரகநாமம் தன்னையுரைத்து சாந்தன் விழுந்தாராம்
தாரகநாமப் பொருளொடு ஒன்றாய் சாயுஜ்யம் பெற்றார்

காந்திமகானும் கலந்தார் பூமியில் காற்றொடு காற்றானார்
கருணைவள்ளலும் கலந்தார் ஜோதிக் கதிரொடு கதிரானார்

சாந்தமகாத்மா பூதவுடம்பை தானும்விட்டு விட்டே
சத்திய மென்னும் பொருளொடு ஒன்றாய் நித்தியமாய்விட்டார்

பாரதநாட்டிற்கு தந்தையவன்
பாவத்தை வென்றிடும் சிந்தையவன்
மாரதவீரரை வாசகத்தால்
மானிலத்தில் தோன்றச் செய்ததவன்

சூரர்கள்கோடி படைத்துவிட்டான்
சுத்தசுயாட்சியை வாங்கித் தந்தான்
ஆரமுதாகிய சத்தியமும் அன்பும்
அகிம்சா தத்துவமும்

கொள்கை நமக்குக் கொடுத்து உள்ளான்
கொண்டு செலுத்தி நடத்தி வந்தால்
கோடாநு கோடி தலைமுறைக்கே
வாடாமல் இந்தியர் வாழ்ந்திடலாம்

வழியை அமைத்துக் கொடுத்த மகான்
வந்தகடமை முடிந்ததென்றே
அழியும்உடம்பை அழித்துவிட்டே
ஆதிப்பரம் பொருள் ஆகிவிட்டார்

ஏசுவைக் காட்டிக்கொடுத்தவனும்
ஏப்ரஹாம் லிங்கனை கொன்றவனும்
ஏந்திழை ஜோன் என்னும் ஞானியையும்
எங்களின் காந்திமகான்தனையும்

கூடப்பிறந்த குலத்தவரே
கொன்று குமித்தவராகுமைய்யா
கூடப்பிறந்த வியாதியதே
கொன்றிடுமென்பது பொய்யாமோ

ஆழக்கடலைப் படைத்த முதல்
அனலைத் தானும் படைக்குதைய்யா
நீலக் கடலைப்படைத்த முதல்
நெருப்பு தன்னை படைக்குதைய்யா

வாசமலரை படைத்த முதல்
வண்டு குளவியை படைக்குதைய்யா
நேசரைத் தானும் படைத்த முதல்
நிஷ்டூரம் தன்னை படைக்குதைய்யா

ஜோதி கதிரவன் தான் படைத்து
சூனியம் ஆன இருள் படைத்து
ஆதிப்பிறப்பைப் படைத்தவளே
அந்தியகாலமும் தான் படைத்தாள்

ஈசன் திருவிளையாடலிலே
என்னென்ன அற்புதம் உண்டென்று நாம்
யோசனை செய்ய முடியாது
உட்பட்டுத்தானே ஆகவேண்டும்

காலம்படைத்த கடவுளையும்காந்தியைத் தந்த கடவுளையும்
சீலந்தவறாது கைதொழுவோம் சேவையையென்றும் நாம்மறவோம்

சத்தியமன்பு வழிச்செல்வோம் சாந்த அகிம்சையைக்கைக்கொள்ளுவோம்
நித்தியமானதோர் காந்திமகான் நெறிபிடித்து நடந்திடுவோம். •

நல்லவரென்றுபெயரெடுப்போம் நாட்டுக்கு நல்லதைச் செய்திடுவோம்
கொல்லவரும்புலிதன்னையுமே கொல்லாவிரதம் கைக்கொள்ளுவோம்

வாழிய வாழிய காந்திமகான் வள்ளல்வகுத்த நெறிவாழி
ஊழிஉலகையழித்தாலும் உண்மை எந்நாளும் வாழியவே. 2929

வந்தேமாதரம்